# தொல்காப்பியம்

## எளிய உரை

(எழுத்து, சொல்)








தருமையாதீனப்புலவர், செஞ்சொற்கொண்டல், தமிழாகரர்

டாக்டர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ.பிஎச்.டி., டிப். மொழியியல்

மயிலாடுதுறை





திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்.,

154, டி.டி.கே. சாலை, சென்னை - 18.

# நூல் விவர அட்டவணை


தொல்காப்பியம் எளிய உரை (எழுத்து, சொல்)

தமிழ் இலக்கணம்

சொ. சிங்காரவேலன்

© வடிவாம்பாள் சிங்காரவேலன்

செப்டம்பர், 1998

கழகம் – முதல் பதிப்பு

P31, DX1, 1-2 N98

கழக வெளியீடு : 2005

தமிழ்

கிரவுன்

11.6 kg.

அட்டைக் கட்டு

11 பாயிண்ட்

x + 254 + 24 (288 பக்கங்கள்)

ரூ. 50.00

கலாக்ஷேத்ரா பிரிண்டர்ஸ், சென்னை - 41

அப்பர் அச்சகம், சென்னை - 108




# பதிப்புரை

ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியம் இன்று தமிழ் மொழிக்குக் கிடைக்கும் பழந்தமிழ் இலக்கண நூல்களுள் ஒன்று. இது கி.பி. 500 க்கு முன் இயற்றப்பட்டிருக்கலாம். கடைச்சங்க இலக்கியத்திற்கு முன்னோடியான இலக்கண நூல் இதுவாகும். இதற்கு முன் அகத்தியம் எழுந்தது என்பர். ஆனால் இந்நூல் முழுவதும் இப்போது கிடைப்பதில்லை. எனவே கிடைப்பதற்குள் மூத்த இலக்கண நூல் தொல்காப்பியமாகும்.

எழுத்துக்கும் சொல்லுக்கும் மட்டுமே உலகில் உள்ள அனைத்து மொழிகளும் இலக்கணம் கூறும். யாப்புக்கும் அணிக்கும் தமிழ் மொழியில் அமைந்துள்ளது போல் வடமொழியிலும் அமைத்துக் கொண்டனர். கயிறு திரிப்பதற்கென்றே தொடையைக் கொண்டவன் தமிழன். தூங்குகின்ற தமிழனின் தொடையில் காவ்ய இலக்கணத்தை வடமொழியைப் பார்த்துத் தமிழுக்காக்கிக் கொண்டான் என்று கயிறு திரித்தனர். இதைப் பல தமிழர்களே இன்னும் நம்புகின்றனர் நாமமது தமிழரெனக் கொண்டிங்கு வாழ்பவர்கள்.

இடையில் உள்ள பொருள் இலக்கணம் தமிழன் தமிழனுக்கென்றே வகுத்தது. எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்தனுள் முன்னிரண்டு மொழி பற்றியன. பின்னிரண்டு இலக்கியம் பற்றியன. நடுவணதான பொருள் வாழ்க்கை பற்றியது. தமிழனுடைய வீரத்துக்கும் காதலுக்கும் வகுக்கப்பெற்ற இலக்கணம். நாடோடி இனத்தரான வடிமொழியாளர் இதை மட்டும் படியெடுக்காமல் விட்டுவிட்டனர். ஒழுக்கமும் ஒழுங்கான வாழ்க்கையும் கொண்டவர்களுக்குத்தானே காதலும் வீரமும்.

இவ்வளவு அரிய இலக்கணத்திற்கமைந்த பழைய உரைகள் அனைத்தையும் தேடிப்பிடித்து ஒரு சீராகப் பதிப்பித்தது கழகம். முன்னோடியாக இளவழகனாரைக் கொண்டு மூலத்தையும் குறிப்புரையையும் கையடக்கமாக வெளியிட்டது. இதையொட்டி இன்று இரண்டு பதிப்புகள். இதில் மூத்தது கழகப் புலவர் முனைவர் சொ.சிங்காரவேலனாரின் எளிய உரை. இதைக் கழகம் வெளியிட ஒப்புதல் அளித்த திருமதி வடிவாம்பாள் சிங்காரவேலன் அவர்களுக்கு நன்றி. தமிழ் நண்பர்கள் படித்துப் பயனடைவார்களாக.

*– சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.*

மதுரை காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் திருக்குறள் இருக்கைச் சிறப்புநிலைப் பேராசிரியர், தமிழக அரசின் "திருவள்ளுவர்" சிறப்பு விருது பெற்ற முதுபெரும் புலவர், முதுமுனைவர்,

மகாவித்துவான்.

**திரு ச. தண்டபாணி தேசிகர்**

அவர்கள் வழங்கிய

# அணிந்துரை

தமிழன்னையின் திருவடிகளை அலங்கரிக்கும் மூத்த தமிழ் இலக்கணம் தொல்காப்பியம்; தமிழர் நாகரிகத்தை - பண்பாட்டை - மொழி வளத்தை – கலை உணர்வை உலகுக்கு அறிவிக்கும் ஒப்பற்ற இலக்கண நூல் இது.

உலக மொழிகளில் எம் மொழிக்கும் இல்லாத, அகம் புறம் என்ற திணைப் பாகுபாடுகளையும், வாழ்வியல் முறைகளையும் மிக விரிவாக எடுத்துரைக்கும் பொருளதிகாரம் தொல்காப்பியத்தின் தனிச் சிறப்பாக விளங்குகின்றது. தமிழ்மொழியின் எழுத்திலக்கண அமைப்புக்களும், சொல்லிலக்கண அமைப்புக்களும், பின் வந்த இலக்கண ஆசிரியர்களுக்கு மேல்வரிச் சட்டங்களாக அமைய வகுத்த பெருமை தொல்காப்பியர்க்கு உண்டு.

இலக்கணக் கொத்து சுவாமிநாத தேசிகர்,

"பல்காற் பழகினும் தெரியா உளவேல்
தொல்காப்பியம் திருவள்ளுவர் கோவையார்
மூன்றினும் முழங்கும்."

எனத் தமிழிலக்கிய இலக்கண நூற்பரப்பினுள் முதலாவதாகத் தொல்காப்பியத்தையே விதந்து ஓதுதலைக் காணலாம்.

இத்தகைய அரிய இலக்கண நூலுக்குக் காலந்தோறும் உரைகள் பல எழுந்துள்ளன; உரையாசிரியர்கள் தங்கள் கருத்திற் கேற்ப நூற்பாக்களைத் தொகை வகை செய்தும் உரைநலம் கண்டும், விளக்கம் செய்துள்ளனர்.

இந்த நூற்றாண்டில், தமிழ் இலக்கியங்களைப் படித்துணரும் ஆர்வம் மக்களுக்குப் பெரிதும் எழுந்துள்ளதைக் காண்கிறோம். எந்தப் படைப்பும் சுருக்கமாகவும் எளிமையாகவும் இருப்பதையே மக்கள் விரும்புகின்றார்கள். மக்களின் இவ்விருப்பத்தை நிறைவு செய்யும் வகையில், "தொல்காப்பியம் – எளிய உரை" என்ற இந்நூல் வெளிவருவது பாராட்டத்தக்கது. தொல்காப்பிய உரை நூல் வரிசையில் இஃது ஒரு புதிய இணைப்பு.

இதனை எழுதியுள்ள, என் மாணவர், மயிலாடுதுறை அன்பநாதபுரம் வகையார் அறத்துறைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், செஞ்சொற்கொண்டல், டாக்டர், சொ. சிங்காரவேலன், நூற்பாக்களைச் சந்தி பிரித்துத் தக்க மூலபாடத்துடன் எளிதில் விளங்கிக் கொள்ளும் வகையில் திட்பநுட்பத்துடன் தெளிவுபடுத்திச் சுருக்கமாக எளிய உரை ஒன்றையும் அவ்வந்நூற் பாக்களுக்குக் கீழே அமைத்துள்ளார். மூலநூலையும், அதன் கருத்தையும் அறிந்துணர இந்நூல் பெரிதும் பயன்படும். தம் இலக்கணப் புலமையும், ஆசிரிய நிலையில் தாம் பெற்ற அநுபவமும் வெளிப்பட தூண்டியும், பொருட்கொடை வழங்கியும் தமிழ் உலகிற்குப் பெருநலம் செய்துள்ள பெங்களூர் ஸ்ரீவெங்கடேசா கல்வி நிறுவனங்களின் நிறுவுநரும், நம் அன்பிற்கு உரியவருமான செந்தமிழ்ச் செல்வர் டாக்டர் ம.வே. ஜெயராமன், எம்.ஏ., டி.லிட்., அவர்களைத் தமிழ் அன்பர்கள் பெரிதும் பாராட்டக் கடமைப்பட்டுள்ளனர்.

இந்நூலாசிரியர் இது போன்ற அரிய பல நூல்களை மேலும் மேலும் வெளியிட்டுத் தமிழ்ப் பணி ஆற்றி வரவும், அன்பர் ம.வே. ஜெயராமன் அவர்கள் தொடர்ந்து தமிழ்ப்பணிகளுக்கு உதவி, நலம்பல பெற்று நீடுவாழவும், அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவாய் அண்ணல் திருவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றேன்.

# நூன்முகம்

தொல்காப்பியத்துக்குக் காலம் தோறும் உரைகள் பல எழுந்துள்ளன. தொல்காப்பிய உரைநூல்களில் காலத்தால் முந்தியது இளம்பூரணர் உரை; காலத்தால் பிந்தியது நச்சினார்க்கினியர் உரை. இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகிய இருவரது உரைகள் எழுத்ததிகாரத்துக்குக் கிடைத்திருக்கின்றன. இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர் ஆகியோர் எழுதிய உரைகள் சொல்லதிகாரத்துக்கு உள்ளன. இளம்பூரணர் உரை பொருளதிகாரம் முழுமைக்கும் உள்ளது. நச்சினார்க்கினியர் உரை பொருளதிகாரத்தின் முதல் ஐந்து இயல்களுக்கும், செய்யுள் இயலுக்கும் உள்ளது. பேராசிரியர் உரை, மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் ஆகிய நான்கு இயல்களுக்குக் கிடைத்துள்ளது. இளம்பூரணர் உரை ஒன்றே தொல்காப்பிய முழுமைக்குமாகக் கிடைத்துள்ள உரை.

இனி, இந்நூற்றாண்டிலும், சென்ற நூற்றாண்டிலுமாக, இவ்விலக்கணப் பனுவலுக்குப் பலவகையான உரைகள், பதிப்புகள் வெளிவந்துள்ளன. இவ்வாறு பல்வேறுபட்ட உரைகள் வெளிவந்திருக்க 'இந்த எளிய உரை ஏன்' என்ற வினா எழுவது இயல்பே.

நான் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியில் தமிழ் வித்துவான் வகுப்பில் பயின்றபோது (1951-1953) தொல்காப்பியத்தைப் பல்வேறு உரைகளுடன் சிறந்த பேராசிரியர்களிடம் பாடம்கேட்கும் வாய்ப்புக் கிடைத்தது. தொல்காப்பிய எழுத்ததிகார நச்சினார்க்கினியர் உரையையும். சொல்லதிகாரச் சேனாவரையர் உரையையும் முதுமுனைவர். பேராசிரியர் ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் கற்பித்தார்கள். எளிமையாகவும், தெளிவாகவும் உளம் கொளும்படியும் தொல்காப்பியத்தைத் திரு. தேசிகர் ஐயா அவர்கள் கற்பித்த முறை என் நெஞ்சில் நிலைத்தது. பொருளதிகாரம் மெய்ப்பாட்டியல் முதலிய இயல்களுக்கு அமைந்த பேராசிரியர் உரையை முதுபெரும் புலவர் முத்து சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் (தம் வாழ்வின் பிற்பகுதியில் காஞ்சியில் தொண்டை மண்டல ஆதீனம் திருமடத்துத் தலைவராக அருளாட்சி செலுத்தியவர்கள்) கற்பிக்கக் கேட்டுணர்ந்தேன். அப்போதெல்லாம் எளிய உரை ஒன்று இப்பெரு நூலுக்கு அமைந்தால் எல்லோரும் கற்று உணர வாய்ப்பாகுமே என்ற எண்ணம் அடிமனத்தில் வேர் ஊன்றியது.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் இளவழகனார் குறிப்புரையுடன் வெளியிட்ட மூலப்பதிப்பும், பெரும்புலவர், என் பேராசிரியர் பு.சி. புன்னைவனநாத முதலியார் அவர்கள் வெளியிட்ட மூலப்பதிப்பும் அப்போது எங்களுக்குக் கிடைத்த மூலநூல்கள்; மனப்பாடம் செய்யவும்; அவ்வப்போது உடன் கொண்டு சிந்தித்து வரவும் இக்கையடக்கப் பதிப்புக்கள் துணை செய்தன.

சென்ற ஆண்டு வேனிற்கால விடுமுறையில் (1987) தருமையாதீனம் முதற்குரவர் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தர் குருபூசைத் திருநாட்களில் ஒருநாள், தருமைத் திருமடத்தில் பெங்களூர் ஸ்ரீ வெங்கடேசா கல்லூரி நிறுவனங்களின் தாளாளரும், செந்தமிழ்ச் செல்வரும், பிறரறியாவகையில் தமிழ்ப்பணியை அடக்கமாக ஆரவாரமின்றித் தொடர்ந்து பல ஆண்டுகளாகச் செய்து வருபவரும், சிறந்த தமிழறிஞரும், தொல்காப்பியம், திருக்குறள், சங்க இலக்கியங்களின் மீது ஆழ்ந்த ஈடுபாடும் புலமையும் கொண்டவரும் ஆயிரம் ஆயிரமாக நூல்வெளியீட்டுப் பணிக்கு அள்ளி வழங்கி வரும் வள்ளலுமாகிய டாக்டர். திரு. ம.வெ. ஜெயராமன் அவர்களைச் சந்தித்துக் கலந்து உரையாடி மகிழ்ந்தேன்; அவ்வுரையாடலின்போது, தமிழ்ப்பணி, இக்காலத் தமிழ் எழுத்தாளர்கள், ஆராய்ச்சி அறிஞர்களின் தொண்டு முதலியன பற்றி ஆர்வமாக டாக்டர் அவர்கள் பேசினார்கள்.

“திருக்குறளுக்கு டாக்டர் மு. வரதராசனார் எழுதிய தெளிவுரை போன்று தொல்காப்பியத்துக்கும் எல்லோர்க்கும் ஏற்றவகையில் தடை விடைகள் முதலிய அகல நிலையில் இல்லாமல், சுருக்கமும் தெளிவும் கொண்ட ஓர் உரையை ஏன் நீங்கள் எழுதக்கூடாது?” என்ற வினா அவர்களிடமிருந்து என்னை நோக்கி வந்தபோது நான் அயர்ந்து போனேன்; மெய்யாகத் தமிழின் மீது டாக்டர். ம.வெ.ஜெ. அவர்கள் கொண்டுள்ள பற்றும், என்மீது அவர்கள் கொண்டுள்ள அழுத்தமான நம்பிக்கையும் அவ்வினாவில் அடங்கியிருந்ததை உணர்ந்தேன்; சில வினாடிகள் தயங்கினேன்; “நீங்கள் இன்றே எழுதத் தொடங்குங்கள்; விரைந்து முடியுங்கள்; அழகான தாளில், நல்ல கட்டமைப்பில், ஆங்கிலத்தில் வெளிவரும் நூல்கள் போல எழில் ஒழுக அமைதல் வேண்டும்” என்று பணித்ததுடன். அதற்கான தம் பொருட் கொடையையும் உறுதி செய்த போது, நான் வியந்து நின்றேன். நீண்டநாட்களாக என் நெஞ்சில் புதைந்து கிடந்த அழுத்தமான எண்ணத்தை, டாக்டர். ம. வெ. ஜெயராமன், எப்படி உணர்ந்து கொண்டு ஆணையிட்டார்கள்

என்பதே அவ்வியப்பிற்கு அடிப்படை; உடனடியாகத் தருமைக் குருமுதல்வர் திருவடிமலர்களையும், செந்தமிழ்ச் சொக்கர் சேவடி மலர்களையும், எல்லாம் வல்ல முருகப் பெருமான் திருவடி மலர்களையும் வழிபட்டு எழுதத் தொடங்கினேன்; திருவருளால் நூற்பணியும் நிறைவேறியது. செந்தமிழ்ச் செல்வர் டாக்டர். ம.வே.ஜெ. அவர்களின் மணிவிழா மலராக இதனை நான் வெளியிட விழைந்த போது, அவர்கள் மறுத்தார்கள்; அம் மறுப்பு மௌனமாகவே வெளிப்பட்டது. இருப்பினும் 'தொல்காப்பிய நெறியில் வாழ்ந்து வரும் தோன்றலரான அவர்களுக்கு இதுவே பொருத்தமான வெளியீடு' என்று கருதித் துணிந்த என் வேண்டுகோள் அவர்களின் இசைவைப் பெற்றது; இது நான் பெற்ற பெரும்பேறே என மதிக்கின்றேன்.

என் ஆசிரியப் பெருந்தகையும், மதுரை காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் திருக்குறள் இருக்கைச் சிறப்பு நிலைப் பேராசிரியரும் ஆகிய மகா வித்துவான், முதுமுனைவர் ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் என் வேண்டுகோளுக்கு இசைந்து இந்நூலை நோக்கி மகிழ்ந்து ஓர் அணிந்துரை வழக்கியுள்ளார்கள். டாக்டர். உ.வே. சாமிநாத ஐயரவர்களின் மாணாக்கரும், உலகறிந்த முது பெரும் புலவரும், சிவபூசைச் செல்வரும் ஆகிய மூத்த தமிழ்ப் பேரறிஞர் ஐயா அவர்களின் அணிந்துரை என்றென்றும் உளம் கொண்டு நான் போற்றி வரத்தக்கதாகும்; அவர்கட்கு என் வணக்கத்தைப் புலப்படுத்திக் கொள்கின்றேன்.

இவ்வாறு "தொல்காப்பியம் எளிய உரை" பல்லாற்றானும் சிறந்து வெளிவரப் பொருட்கொடை வழங்கியதுடன், தம்மணிவிழா மலராக வெளிவரவும் உதவியவர் டாக்டர். ம.வே. ஜெயராமன் அவர்கள்.

தமிழ் அன்னையின் திருவடி மலர்களில் என் சிறு காணிக்கையாக இவ்வுரை மலரை வைத்துப் போற்றுகின்றேன்.

தமிழ் உலகம் இப்படைப்பை ஏற்றுப் பயன் கொள்ளும் என்பது என் நம்பிக்கை.

"ஞானவேல்"
2, மாயூர நாதர் சந்நிதித்தெரு
மயிலாடு துறை

அன்பன்,
சோ. சிங்காரவேலன்
தமிழ்ப் பேராசிரியர்.



# உள்ளுறை

## எழுத்ததிகாரம்



## சொல்லதிகாரம்





# தொல்காப்பியம்

## சிறப்புப் பாயிரம்

வட வேங்கடம் தென் குமரி
ஆயிடை,
தமிழ் கூறும் நல் உலகத்து,
வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி,

செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்து நூல் கண்டு, முறைப்பட எண்ணி,
புலம் தொகுத்தோனே – போக்கு அறு பனுவல்
நிலம் தரு திருவின் – பாண்டியன் அவையத்து,
அறம் கரை நாவின் நான் மறை முற்றிய

அதங்கோட்டு ஆசாற்கு அரில் தபத் தெரிந்து,
மயங்கா மரபின் எழுத்து முறை காட்டி,
மல்கு நீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப்பியன் எனத் தன் பெயர் தோற்றி,
பல் புகழ் நிறுத்த படிமையோனே.

–பனம்பாரனார்

எளிய உரை: வடக்கின்கண் வேங்கட மலையும், தெற்கின்கண் குமரித்துறையும் ஆகிய இவற்றின் இடையே நிலவிவரும் தமிழ் கூறு நல்லுலகத்தில், வழக்கு, செய்யுள் என்ற இரண்டையும் அடிப்படையாகக் கொண்டு, எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று இலக்கணங்களையும் ஆராய்ந்து, செந்தமிழ் இயற்கை பொருந்திய வழக்கொடு பொருத்தி முந்தைய நூல்களையும் கண்டு, முறைப்பட எண்ணி, அறிதற் குரிய இலக்கணங்களைக் குற்றம் இல்லாமல் சீரிய நூலாகத் தொகுத்தோன்,–

நிலந்தரு திருவிற்பாண்டியன் அவைக்களத்தில், அறத்தையே கூறும் நாநலத்தையும், நான்கு வேதங்களைக் கற்றறிந்த பேரறிவையும் உடைய அதங்கோட்டு ஆசானுக்குக் குற்றம் இல்லாமல் தெரிந்து கூறினோன்,–

தான் எழுதிய நூலில் முறைமையையும் விளக்கி அரங்கேற்றினோன்,–

கடல்சூழ்ந்த உலகின்கண் ஐந்திரம் என்னும் நூலைக் கற்று நிரம்பிய அறிவுடைய தொல்காப்பியன் என்ற பெயரை நிலைபெறச் செய்தோன்,–

பல புகழ் வாய்ந்த தவக்கோலம் உடையோன் ஆவன்.

## இயல் – 1

# எழுத்து அதிகாரம்

## நூல் மரபு

(எழுத்தின் இலக்கணம் கூறும் இயல்; மொழிக்கு உறுப்பாகிய எழுத்து 'நூல்' எனப்பட்டது)

## 1. எழுத்துக்களின் வகை

### எழுத்துக்களின் பெயர்

1. 'எழுத்து எனப்படுப,
அகரம் முதல்
னகர இறுவாய், முப்பஃது' என்ப –
'சார்ந்து வரல் மரபின் மூன்று அலங்கடையே' 1

எளிய உரை: தமிழில் எழுத்துக்கள் 'அகரம்' முதலாக 'னகரம்' இறுதியாக முப்பது; 'குறுகிய உகரம்', 'குறுகிய இகரம்', 'ஆய்தம்' என்ற மூன்றெழுத்துக்கள் சார்ந்து வருகின்ற எழுத்துக்கள்; (அவற்றையும் சேர்க்க 'முதல் எழுத்துக்கள் முப்பதும்' 'சார்பெழுத்துக்கள் மூன்றும்' ஆக முப்பத்து மூன்று எழுத்துக்கள்.)

### சார்பு எழுத்துக்கள்

2. அவைதாம்,
குற்றியலிகரம், குற்றியலுகரம்,
ஆய்தம் என்ற
முப்பாற்புள்ளியும், எழுத்து ஓரன்ன, 2

எ–ரை : சார்ந்து வரும் எழுத்துக்கள் 'குறுகியஇகரம்', 'குறுகிய உகரம்'

'ஆய்தம்' என்ற மூன்றும் ஆம்; அவை முற்கூறிய முப்பது எழுத்துக்களுடன் ஒத்துவைத்து எண்ணப்படும் தன்மை உடையனவே.

## 2. மாத்திரை

### ஒரு மாத்திரை உடைய குற்றுயிர்கள்

3. அவற்றுள்,
'அ, இ, உ,
எ, ஒ, என்னும் அப் பால் ஐந்தும்,
ஓர் அளபு இசைக்கும், குற்றெழுத்து' என்ப, 3

எ—ரை: முதல் எழுத்துக்கள் முப்பதுள், அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்து எழுத்துக்களும், ஒலிக்கும் காலத்தில் ஒரு மாத்திரை * அளவு பெறும் குற்றெழுத்துக்கள் ஆகும்.

### இரண்டு மாத்திரை உடைய நெட்டுயிர்கள்

4. 'ஆ, ஈ, ஊ, ஏ, ஐ,
ஓ, ஔ, என்னும் அப் பால் ஏழும்;
ஈர் அளபு இசைக்கும், நெட்டெழுத்து' என்ப. 4

எ—ரை: ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ என்னும் ஏழு எழுத்துக்களும் ஒலிக்கும் காலத்தில் இரண்டு மாத்திரை அளவு பெறும் நெட்டெழுத்துக்கள் ஆகும்.

### ஓர் எழுத்தே மூன்று மாத்திரை ஆகாமை

5. மூ அளபு இசைத்தல் ஓர் எழுத்து இன்றே. 5

எ—ரை: தமிழில் ஓர் எழுத்து, மூன்று மாத்திரை அளவு ஒலித்தல் இல்லை.

---

* மாத்திரை : கண்ணிமைக்கும் கால அளவும், கை நொடிக்கும் கால அளவும் தமிழில் 'மாத்திரை' என்று கூறப்பெறும்.

## மாத்திரை நீளும் நெறி

6. 'நீட்டம் வேண்டின், அவ் அளபுடைய
கூட்டி எழூஉதல்' என்மனார் புலவர். 6

எ–ரை: நீட்டி ஒலித்தலை விரும்பினால் வேண்டிய மாத்திரை அளவுள்ள அவற்றிற்கு இனமான குற்றெழுத்துக்களைக் கூட்டி ஒலி எழுப்புக என்பர் அறிஞர்.

## மாத்திரை என்பது யாது?

7. கண் இமை, நொடி, என அவ்வே மாத்திரை–
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட ஆறே. 7

எ–ரை: இயல்பாகக் கண் இமைக்கும் பொழுதையும், கை நொடிக்கும் பொழுதையும் 'மாத்திரை' என்ற கால அளவாக, நுட்பமாக உணர்ந்தோர் கண்டனர்.

# 3. எண்

## பன்னிரண்டு உயிர்கள்

8. 'ஔகார இறுவாய்ப்
பன்னீர்–எழுத்தும் உயிர்' என மொழிப. 8

எ–ரை: 'அகரம்' முதலாக 'ஔகாரம்' ஈறாக உள்ள பன்னிரண்டு எழுத்துக்களும் உயிரெழுத்துக்கள்.

## பதினெட்டு மெய்கள்

9. 'னகார இறுவாய்ப்
பதினெண் எழுத்தும் மெய்' என மொழிப. 9

எ–ரை: 'ககரம்' முதலாக 'னகரம்' ஈறாக உள்ள பதினெட்டு எழுத்துக்களும் மெய்யெழுத்துக்கள்.

## உயிர்மெய்க்கு அளவு

10. மெய்யொடு இயையினும், உயிர் இயல் திரியா. 10

எ–ரை: மெய்யெழுத்துக்களோடு இயைந்து 'உயிர்மெய் எழுத்துக்கள்' எனப்பட்டாலும், உயிர் எழுத்துக்கள் தமக்கு உரிய மாத்திரை முதலிய இயல்பில் வேறுபடமாட்டா.

## தனிமெய்க்கு அளவு

11. 'மெய்யின் அளபே அரை' என மொழிப. 11

எ–ரை: தனி மெய்யெழுத்துக்கு அளவு அரை மாத்திரையே.

## சார்பு எழுத்துக்கு அளவு

12. அவ் இயல் நிலையும், ஏனை மூன்றே. 12

எ–ரை: சார்பு எழுத்துக்கள் மூன்றும் அரை மாத்திரை அளவே பெறும்.

## மகரக் குறுக்கம்

13. அரை அளபு குறுகல் மகரம் உடைத்தே;
இசையிடன் அருகும், தெரியும் காலை. 13

எ–ரை: மகரம் தனக்குரிய அரை மாத்திரையிலும் குறுகிக் கால் மாத்திரை பெறும் இடம் உண்டு; ணகரம் போன்ற வேறோர் எழுத்தோசையினிடத்து அவ்வாறு நிற்கும் குறுகிய மகரம், மகரக் குறுக்கம் என்று கூறப்பெறும்.

# 4. வடிவம்

## மகரத்தின் வடிவம்

14. உட் பெறு புள்ளி உரு ஆகும்மே. 14

எ–ரை: அக்குறுகிய மகரத்துக்கு வடிவம், எழுதுங்கால் உள்ளே புள்ளி கொடுத்து எழுதப்பெற வேண்டும்.

## மெய்யெழுத்தின் இயல்பு

**15. மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்.** 15

எ–ரை: தனி மெய்யெழுத்தின் இயல்பு, மேலே புள்ளியோடு நிலை பெறுவது.

## எகர ஒகரங்களின் இயல்பு

**16. எகர ஒகரத்து இயற்கையும் அற்றே.** 16

எ–ரை: எ, ஒ – என்ற இரண்டு உயிர் எழுத்துக்களும் மேலே புள்ளி பெற்று நிற்பனவே.

## உயிர்மெய் எழுத்தின் இயல்பு

**17. புள்ளி இல்லா எல்லா மெய்யும்**
**உரு உரு ஆகி அகரமொடு உயிர்த்தலும்**
**ஏனை உயிரொடு உருவு திரிந்து உயிர்த்தலும்**
**ஆயீர் இயல – உயிர்த்தல் ஆறே.** 17

எ–ரை: உயிரெழுத்துக்களோடு கூடிப் புள்ளி இல்லாமற் போன எல்லா மெய்யெழுத்துக்களும், முன் கூடாதிருந்த போது பெற்ற வடிவே பின்னும் வடிவாகும்; அகர ஒலியோடு கூடி நிற்கும்; ஏனைய உயிர் ஒலிகளோடு கூடும்போது கொம்பு பெறுதல், கீழ் வளைவு பெறுதல் முதலிய வடிவம் வேறுபட்டு உயிர்ஒலி பெறும். இவ்விரண்டு உயிர்க்கும் இயல்புகளை இவை பெற்று உயிர்மெய் எழுத்துக்களாகித் திகழும்.

## உயிர்மெய் ஒலிக்கும் நெறி

**18. மெய்யின் வழியது உயிர் தோன்று நிலையே.** 18

எ–ரை: உயிர்மெய் எழுத்துக்களில், மெய்யொலிகளை அடுத்து உயிரொலிகள் தோன்றுமாறு ஒலியமைப்பு விளங்கும்.

### வல்லின மெய்

19. 'வல்லெழுத்து' என்ப – 'க, ச, ட, த, ப, ற' 19

எ–ரை: க, ச, ட, த, ப, ற என்னும் ஆறும் 'வல்லெழுத்து' எனப்பெறும்.

### மெல்லின மெய்

20. 'மெல்லெழுத்து' என்ப – 'ங, ஞ, ண, ந, ம, ன.' 20

எ–ரை : ங, ஞ, ண, ந, ம, ன, என்னும் ஆறும் 'மெல்லெழுத்து' எனப்பெறும்.

### இடையின் மெய்

21. 'இடையெழுத்து' என்ப – 'ய, ர, ல, வ, ழ, ள,' 21

எ–ரை: ய, ர, ல, வ, ழ், ள என்னும் ஆறும் 'இடையெழுத்து' எனப்பெறும்.

## 5. மயக்கம்

### மெய் மயங்கும் நிலை

22. அம் மூ–ஆறும் வழங்கு இயல் மருங்கின்,
மெய்ம்மயக்கு, உடனிலை, தெரியும் காலை. 22

எ–ரை: அத்தகைய பதினெட்டு மெய் எழுத்துக்களும், சொல்லாகி வழங்கும்போது, மெய்களின் கூட்டாகிய உடன் இயையும் நிலை பெறும்.

### தனி மெய் பிற மெய்யுடன் மயங்கும் நிலை

23. ட, ற, ல, ள, என்னும் புள்ளி முன்னர்.
க, ச, ப, என்னும் மூஎழுத்து உரிய. 23

எ–ரை: ட, ற, ல, ள, என்ற தனி மெய் எழுத்துக்களை அடுத்து க, ச, ப என்ற மெய்யெழுத்துக்கள் கூடி இயைந்து நிற்கும்.

24. அவற்றுள்
ல ளஃகான் முன்னர், ய, வ–வும் தோன்றும். 24

எ–ரை : ல, ள, என்ற தனி மெய்களை அடுத்து ய, வ என்ற மெய்யெழுத்துக்கள் கூடி இயைந்து நிற்கும்

25. ங, ஞ, ண, ந, ம, ன, எனும் புள்ளி முன்னர்,
தம் தம் மிசைகள் ஒத்தன நிலையே. 25

எ–ரை: ங, ஞ, ண, ந, ம, ன, என்ற தனிமெய்களை அடுத்து, தத்தம் இன எழுத்துக்கள் இயைந்து நிற்றலைப் பெறும்.



26. அவற்றுள்,
ண–னஃகான் முன்னர்,
க, ச, ஞ, ப, ம, ய, வ, ஏழும் உரிய. 26

எ–ரை: ண, ன என்ற இரண்டு தனி மெய்களை அடுத்து க, ச, ஞ, ப, ம, ய, வ என்ற ஏழு எழுத்துக்களும் இயைந்து நிற்கும்.

27. ஞ, ந, ம, வ என்னும் புள்ளி முன்னர்,
யஃகான் நிற்றல் மெய் பெற்றன்றே. 27

எ–ரை: ஞ, ந, ம, வ என்ற தனி மெய்களை அடுத்து 'ய' என்ற மெய்யெழுத்து இயைந்து நிற்றலாகிய மெய்ம்மையைப் பெற்றது.

28. மஃகான் புள்ளி முன் 'வ' வ்வும் தோன்றும். 28

எ–ரை: ம என்ற தனி மெய்யை அடுத்து 'வ' என்ற மெய் இணைந்து தோன்றுதலும் உண்டு.

29. ய, ர, ழ, என்னும் புள்ளி முன்னர்,
முதல் ஆகு எழுத்து ஙகரமொடு தோன்றும். 29

எ–ரை: ய, ர, ழ, என்ற தனி மெய்களை அடுத்து மொழிக்கு முதலாக வரும் எழுத்துக்களும் ஙகரமும் இணைந்து தோன்றும்.

## தனிமெய் தன்மெய்யோடு மயங்கும் நிலை

**30.** மெய்ந் நிலை சுட்டின் எல்லா எழுத்தும்
தம் முன் தாம் வரூஉம் – ர, ழ, அலங்கடையே. 30

எ–ரை: ர, ழ என்ற இரண்டு மெய்களைத் தவிரப் பிற எல்லா மெய்களும் தம் முன் தாம் வரும் மெய்ந்நிலை உடையனவாம்.

# 6. எழுத்துக்களின் ஏனைய மரபுகள்

## சுட்டெழுத்துக்கள்

**31.** அ, இ, உ, – அம் மூன்றும் சுட்டு. 31

எ–ரை : அ, இ, உ ஆகிய மூன்று எழுத்துக்களும் சுட்டெழுத்துக்கள்.

## வினாவெழுத்துக்கள்

**32.** ஆ, ஏ, ஓ, – அம் மூன்றும் வினா. 32

எ–ரை: ஆ, ஏ, ஓ ஆகிய மூன்று எழுத்துக்களும் வினாவெழுத்துக்கள்.

## இசை நூல் முறையில் எழுத்தொலிகள்

**33.** 'அளபு இறந்து உயிர்த்தலும் ஒற்று இசை நீடலும்.
உள' என மொழிப; – இசையொடு சிவணிய
நரம்பின் மறைய' என்மனார் புலவர். 33

எ–ரை: முன்னே கூறப்பட்ட எழுத்தொலிகள், தத்தமக்குக் கூறப்பட்ட மாத்திரை அளவுகளைவிட நீண்டு ஒலித்தலும் உண்டு; ஒற்றுக்கள் மாத்திரை அளவுகளைவிட நீண்டு ஒலித்தலும் உண்டு; இவை இன்னிசையோடு பொருந்திய யாழ்நூலிடத்தே நிகழும் என்று கூறுவர் அறிஞர்.

## இயல் 2

# மொழி மரபு

(மொழிக்கண் நின்ற எழுத்தின் இலக்கணம் கூறும் இயல்)

## 1. சார்பெழுத்துக்கள் மொழிகளில் வரும் நிலை

### தனிமொழிக் குற்றியலிகரத்திற்கு இடமும் பற்றுக்கோடும்

**34.** குற்றியலிகரம் நிற்றல் வேண்டும்–
'யா' என் சினைமிசை, உரையசைக் கிளவிக்கு,
ஆவயின் வரூஉம் மகரம் ஊர்ந்தே. 1

எ–ரை: 'மியா' என்ற உரையசைக் கிளவியில் 'யா' வென்னும் எழுத்திற்கு மேல் மகர மெய்யின் மேல் ஊர்ந்து வரும் 'இகரம்' 'குற்றியலிகரம்' ஆம்; (இது தனி மொழியில் வரும் குற்றியலிகரம்)

### குற்றியலிகரம் இரண்டு சொற்கள் இணைந்த நிலையுள் வருதல்

**35.** புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே;
உணரக் கூறின், முன்னர்த் தோன்றும். 2

எ–ரை: இரண்டு சொற்கள் கூடும் நிலையிடை வரும் 'இகரம்' குற்றியலிகரம் ஆதல் உண்டு; இது 'குற்றியலுகரப் புணரியல்' என்ற பகுதியில் மொழியப்பெறும்.

### தனிமொழிக் குற்றியலுகரத்திற்கு இடமும் பற்றுக் கோடும்

**36.** நெட்டெழுத்து இம்பரும் தொடர்மொழி ஈற்றும்
குற்றியலுகரம் வல் ஆறு ஊர்ந்தே. 3

எ–ரை: நெட்டெழுத்துக்களுக்குப் பின்னேயும்; வல்லெழுத்து முதலிய ஐவகை எழுத்துக்களைத் தொடர்ந்த 'வன்தொடர்' முதலிய ஐந்துவகை மொழிகளின் பின்னேயும் குற்றியலுகரம் வல்லெழுத்துக்கள் மீது ஏறிநிற்கும்.

## குற்றியலுகரம் இரண்டு சொற்கள் இணைந்த நிலையுள் வருதல்

**37.** **இடைப்படின், குறுகும் இடனுமார் உண்டே–**
**கடப்பாடு அறிந்த புணரியலான.** 4

எ–ரை: மேற்கூறியபடித் தனிமொழியில் வருதலேயன்றி இரண்டு மொழிகளின் இடையே தோன்றினாலும் 'குற்றிய லுகரம்' குறுகி நிற்றல் உண்டு; அது முறையை அறிந்த 'குற்றியலுகரப் புணரியலின்' கண் கூறப்படும்

## ஆய்தம் தனிச் சொல்லுள் வரும் நிலை

**38.** **குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி,**
**உயிரொடு புணர்ந்த வல் ஆறன் மிசைத்தே.** 5

எ–ரை: குற்றெழுத்துக்களுக்குப் பின்னேயும், உயிரோடு சேர்ந்த வல்லெழுத்து ஆறனுக்கு முன்னேயும் 'ஆய்தம்' வரும்.

## ஆய்தம் இரண்டு சொற்களுக்கு இடையே வரும் நிலை

**39.** **ஈறு இயல் மருங்கினும் இசைமை தோன்றும்** 6

எ–ரை: இரண்டு மொழிகள் புணர்ந்து நடக்குமிடத்தும் ஆய்தம் ஒலித்தல் உண்டு.

## ஆய்தத்தின் இயல்பு

**40.** **உருவினும் இசையினும் அருகித் தோன்றும்**
**மொழிக் குறிப்பு எல்லாம் எழுத்தின் இயலா –**
**ஆய்தம் அஃகாக் காலையான.** 7

எ–ரை: ஒரு பொருளினது உருவம், ஓசை ஆகியவற்றின்கண் சிறுபான்மை ஆய்தம் தோன்றும் குறிப்பு மொழிகள் எல்லாம் ஆய்த எழுத்தாக எழுதப்படும். அவ்வாய்தம் தனக்குரிய மாத்திரை அளவினின்று குறுகி நில்லாத இயல்புடையது.

## 2. அளபெடை

### அளபெடை நிலை

41. குன்று இசை மொழிவயின் நின்று இசை நிறைக்கும்
நெட்டெழுத்து இம்பர் ஒத்த குற்றெழுத்தே. 8

எ–ரை: இசை குறைந்து வரும் சொற்களில், (அளவு எழுதற்குரிய சொற்களில்) நெட்டெழுத்துக்களின் பின்னர் அவ்வவற்றிற்கு இனமொத்த குற்றெழுத்துக்கள் அளபெடைக்கு அடையாளமாய் நிற்கும்.

### ஐ, ஔ அளபெடுத்தல்

42. ஐ, ஔ, என்னும் ஆயிர் – எழுத்திற்கு
இகர உகரம் இசை நிறைவு ஆகும். 9

எ–ரை: ஐ, ஔ என்னும் இரண்டு நெட்டெழுத்துக்களும் அளபெடுக்குங்கால், இ, உ என்னும் இரண்டு குற்றெழுத்துக்கள் இசை நிறைத்தற்குரிய அளபெடைக் குறியீடுகளாம்.

## 3. எழுத்துக்கள் தொடர்ந்து மொழிநிலை பெறல்

### ஓரெழுத்தொருமொழி

43. நெட்டெழுத்து ஏழே ஓர் எழுத்து ஒருமொழி. 10

எ–ரை: ஆ, ஈ, ஊ, ஐ, ஏ, ஓ, ஔ என்னும் நெட்டெழுத்துக்கள் தாம் தனித்து நின்று பொருள் உணர்த்தி ' ஓரெழுத்து ஒருமொழி' யாகும் .

### குற்றெழுத்துக்கள் அந்நிலை பெறாமை

**44.** குற்றெழுத்து ஐந்தும் மொழி நிறைபு இலவே. 11

எ–ரை: அ, இ, உ, எ, ஒ என்னும் குற்றெழுத்துக்கள் ஐந்தும் மொழியாதற்கு உரிய பொருள் நிறைவு பெற நிற்க மாட்டா.

### மொழிநிலை மூவகை

**45.** ஓர் எழுத்து ஒருமொழி ஈர் எழுத்து ஒருமொழி,
இரண்டு இறந்து இசைக்கும் தொடர்மொழி உளப்பட,
மூன்றே, மொழி நிலை – தோன்றிய நெறியே. 12

எ–ரை: ஒரெழுத்தொருமொழி, இரண்டெழுத்தொருமொழி இரண்டெழுத்துக்கள் கடந்து நிற்கும் தொடர் மொழி ஆகிய மூவகை மொழிநிலைகள் உள்ளன.

## 4. எழுத்துக்களின் இயக்கம்

### தனிமெய்

**46.** மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும். 13

எ–ரை: தனி மெய்கள் அகரத்தோடு பொருந்தி இயங்கும்.

### உயிர்மெய்கள்

**47.** தம் இயல் கிளப்பின், எல்லா எழுத்தும்
மெய்ந்நிலை மயக்கம் மானம் இல்லை. 14

எ–ரை: தனி எழுத்தாகிய தமது தன்மையை உரைக்குங்கால், எல்லா எழுத்துக்களும் மெய் மயங்கி நிற்கும்; இவ்வாறு மயங்குதல் குற்றம் இல்லை.

### இரண்டு ஒற்றுக்கள் உடனாய் நிற்றல்

**48.** ய, ர, ழ, என்னும் மூன்றும் முன் ஒற்ற
க, ச, த, ப, ங, ஞ, ந, ம, ஈர் ஒற்று ஆகும். 15

எ—ரை: ய, ர, ழ என்னும் மூன்றும் ஒற்றுக்களாய் நிற்க, க, ச, த, ப, ங, ஞ, ந, ம, என்னும் எட்டும் ஈரொற்றாய் நிற்கும்.

## நெடிற்கீழ் ஒற்றுக்கள் இரண்டு

**49.** அவற்றுள்,
ரகார, ழகாரம் குற்றொற்று ஆகா. 16

எ—ரை: அவற்றுள், ர, ழ, என்னும் இரண்டு ஒற்றுக்களும், நெடிலை அடுத்து நிற்குமே யன்றிக் குறிலை யடுத்து ஒற்றாய் நில்லாத இயல்பை உடையன.

## தொடர்மொழி இயல்பு

**50.** குறுமையும் நெடுமையும் அளவின் கோடலின்,
தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத்து இயல, 17

எ—ரை: ஒலிக் குறுக்கமும், ஒலி நீட்டமும் அளவு படுத்துக் கொள்ளப் படுதலால், இரண்டு முதலிய எழுத்துக்கள் தொடர்ந்த மொழிகள் எல்லாம் நெட்டெழுத்து இயல்பை உடையனவாம்.

## செய்யுளில் ஈரொற்று

**51.** செய்யுள் இறுதிப் போலும் மொழிவயின்
னகார, மகாரம் ஈர் ஒற்று ஆகும். 18

எ—ரை: செய்யுளில், இறுதிக்கண் நிற்கும் போலும் என்னும் மொழியிடத்து, ன, ம என்ற இரண்டும் ஒற்றுக்களாய்த் தொடர்ந்து நிற்றல் உண்டு. *

## மகரம் குறுகி நிற்கும்

**52.** னகாரை முன்னர் மகாரம் குறுகும் 19

---

* "செய்யுட்கண் வரும் 'போலும்' என்னும் சொல்லின் இறுதிக்கண் னகாரம், மகாரம் வந்து ஈரொற்றாய் உடன் நிற்கும்" என்பர் நச்சினார்க்கினியர்.

எ–ரை: முன் நூற்பாவில் கூறியபடி ன, ம என்ற இரண்டும் ஒற்றாய் நிற்கும்போது, 'ம' தன் அரை மாத்திரையில் குறுகி நிற்கும்.

### மொழிக்கண்ணும் எழுத்தியல் வேறுபடாமை

**53.** மொழிப்படுத்து இசைப்பினும், தெரிந்து வேறு இசைப்பினும்,
ஏழுத்து இயல் திரியா' என்மனார் புலவர். 20

எ–ரை: எழுத்துக்களைச் சொற்கள் ஆக்கி ஒலிக்குங்காலத்தும், ஆய்ந்து தனியே ஒலிக்குங்காலத்தும், அவ்வவ் வெழுத்துக்கு ஓதப்பட்ட இயல்பு வேறுபடாது என்று கூறுவர் அறிஞர்.

## 5. போலி

### எழுத்துப்போலி

**54.** அகர இகரம் ஐகாரம் ஆகும். 21

எ–ரை: 'அ', 'இ' என்னும் இரண்டு எழுத்துக்களும் இணைந்து நின்று 'ஐ' என்ற ஒலி போன்று இசைக்கும்.

**55.** அகர உகரம் ஔகாரம் ஆகும். 22

எ–ரை: அவ்வாறே 'அ', 'உ' என்னும் இரண்டு எழுத்துக்களும் இணைந்து நின்று 'ஔ' என்ற ஒலி போன்று இசைக்கும்.

**56.** அகரத்து இம்பர் யகரப் புள்ளியும்
'ஐ' என் நெடுஞ் சினை மெய் பெறத் தோன்றும். 23

எ–ரை: அகரத்தின் பின் யகரமெய் இணைந்து நின்று 'ஐ' என்ற நெட்டெழுத்து ஒலி போல மெய்யாக ஒலிக்கும்.

### ஐ, ஔ ஒலியிற் குறுகுதல்

**57.** ஓர் அளபு ஆகும் இடனுமாருண்டே;
தேரும் காலை, மொழிவயினான. 24

எ—ரை: ஆய்ந்து நோக்குங்கால், மொழிக்கண் நிற்கும் ஐ, ஔ என்ற இரண்டு நெட்டெழுத்துக்களும், தத்தமக்கு உரிய இரண்டு மாத்திரை பெறாமல், ஒரு மாத்திரை பெற்றுக் குறுகி நிற்றலும் உண்டு.

### பிறிதொரு போலி

**58.** இகர யகரம் இறுதி விரவும் 25

எ—ரை: ஒரு மொழியின் இறுதியில் இகரமும் யகரமும் ஒரொலியாக நிற்றலும் உண்டு.

## 6. மொழி முதல் நிற்கும் எழுத்துக்கள்

### மொழி முதல் உயிர்கள்

**59.** பன்னீர்—உயிரும் மொழி முதல் ஆகும் 26

எ—ரை: பன்னிரண்டு உயிர் எழுத்துக்களும், மொழி முதலில் நிற்கும் இயல்பு உடையன.

### தனிமெய் மொழி முதலில் நில்லாது

**60.** உயிர்மெய் அல்லன மொழி முதல் ஆகா. 27

எ—ரை: தனிமெய்கள் மொழிமுதலில் வரமாட்டா. (உயிர்மெய் எழுத்துக்களே மொழி முதற்கண் வரும்.)

### பன்னிரண்டு உயிர் எழுத்துக்களுடன் இணைந்து மொழிமுதலாகும் மெய்கள்.

**61.** க, த, ந, ப, ம, எனும் ஆவைந்து எழுத்தும்
எல்லா உயிரொடும் செல்லுமார் முதலே. 28

எ—ரை: க, த, ந, ப, ம என்னும் அவ்வைந்து மெய்களும் எல்லா (பன்னிரண்டு) உயிர் எழுத்துக்களுடன் இணைந்து மொழிக்கு முதலில் வரும்.

## சகரம் மொழி முதலில் வருதல்

**62.** **சகரக் கிளவியும் அவற்று ஓரற்றே –**
**அ, ஐ, ஔ, எனும் மூன்று அலங்கடையே.** 29

எ–ரை: அ, ஐ, ஔ என்னும் மூன்று உயிர் எழுத்துக்கள் நீங்கலாக ஏனைய ஒன்பது உயிர்களுடன் கூடிச் சகரம் மொழி முதலில் வரும்.

## வகரம் மொழி முதலில் வருதல்

**63.** **உ, ஊ, ஒ, ஓ, என்னும் நான்கு உயிர்**
**'வ' என் எழுத்தொடு வருதல் இல்லை.** 30

எ–ரை: 'வ' என்னும் மெய் உ, ஊ, ஒ, ஓ என்னும் நான்கு உயிர் எழுத்துக்கள் நீங்கலாக ஏனைய எட்டு உயிர்களுடன் கூடி மொழி முதலில் வரும்.

## ஞகரம் மொழி முதலில் வருதல்

**64.** **ஆ, எ, ஒ, எனும் மூஉயிர் ஞகாரத்து உரிய.** 31

எ–ரை: ஆ, எ, ஒ என்னும் மூன்று உயிர் எழுத்துக்களுடன் மட்டுமே கூடி 'ஞ' மொழி முதலில் வரும்.

## யகரம் மொழி முதலில் வருதல்

**65.** **ஆவொடு அல்லது யகரம் முதலாது.** 32

எ–ரை: 'ஆ' என்ற உயிர் எழுத்து ஒன்றுடன் மட்டுமே கூடி 'ய' மொழி முதலில் வரும்.

**66.** **முதலா ஏன தம் பெயர் முதலும்.** 33

எ–ரை: முதல் ஆகாத பிற எழுத்துக்கள் எல்லாம் தம் பெயர் கூறுதற்கண் முதலாக வரும்.

### மொழி முதலில் குற்றியலுகரம் வருதல்

**67.** குற்றியலுகரம் முறைப்பெயர் மருங்கின்
ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும். 34

எ–ரை: 'நுந்தை' என்னும் முன்னிலை முறைப்பெயரிடத்து 'நகர' மெய்யின் மேல் ஊர்ந்து வரும் உகரம் குற்றியலுகரம் ஆம். (இவ்வகையில் குற்றியலுகரம் மொழிக்கு முதலாதலும் உண்டு)

### மொழிமுதற் குற்றியலுகர இயல்பு

**68.** முற்றியலுகரமொடு பொருள் வேறுபடாஅது
அப் பெயர் மருங்கின் நிலையியலான. 35

எ–ரை: அவ்வாறு முற்கூறிய முன்னிலை முறைப்பெயர் மீது வரும் குற்றியலுகரம், முற்றியலுகரத்தோடு சிறிதும் பொருள் வேறுபடாது.

## 7. மொழி இறுதி எழுத்துக்கள்

### மொழியீறாய் வரும் உயிர்கள்.

**69.** உயிர், 'ஔ' எஞ்சிய இறுதி ஆகும். 36

எ–ரை: 'ஔ' என்னும் ஓர் உயிர் நீங்கலாக ஏனைய பதினோருயிர்களும் மொழி இறுதியில் வரும் இயல்புடையன.

### 'ஔ' ஈறாய் வரும் இடம்

**70.** க–வ–வொடு இயையின், ஔவும் ஆகும். 37

எ–ரை: க, வ என்னும் இரண்டு மெய்களோடு இணைந்து 'ஔ' ஈறாதலும் உண்டு.

## 'எகரவுயிர்' மெய்யோடு ஈறாகாமை

**71. 'எ' என வரும் உயிர் மெய் ஈறாகாது.** 38

எ–ரை: 'எ' மெய்யோடு கூடி உயிர் மெய்யாகி ஈறாகாது.

## 'ஒ' தகரமெய்யுடன் கூடி ஈறாதல்

**72. ஒவ்வும் அற்றே, 'ந' அலங்கடையே** 39

எ–ரை: நகரத்தோடு மட்டுமே கூடி ஒகரம் ஈறாகும்,

## 'ஏ' 'ஒ' ஞகாரத்தோடு கூடி ஈறாகாமை

**73. ஏ, ஒ, எனும் உயிர் ஞகாரத்து இல்லை.** 40

எ–ரை: 'ஏ' 'ஒ' என்னும் இரண்டு நெட்டெழுத்துக்களும் ஞகாரத்தோடு கூடி ஈறாதல் இல்லை.

## 'உ', 'ஊ' நகரவகரங்களோடு ஈறாகாமை

**74. உ, ஊ காரம் ந–வ–வொடு நவிலா.** 41

எ–ரை: 'உ' 'ஊ' என்னும் இரண்டு உயிர்களும், நகரத்தோடும் வகரத்தோடும் கூடி ஈறாக மாட்டா.

## சகரவுகரம் இருமொழியில் மட்டுமே ஈறாதல்

**75. உச் சகாரம் இருமொழிக்கு உரித்தே.** 42

எ–ரை: 'சு' என்னும் எழுத்து (உச்சகாரம்) உசு. முசு என்னும்) இருமொழிகளில் மட்டுமே ஈறாகும்.

## பகர வுகரம் ஒருமொழியில் மட்டுமே ஈறாதல்

**76.** 'உப் பகாரம் ஒன்று' என மொழிப;
இரு வயின் நிலையும் பொருட்டு ஆகும்மே. 43

எ—ரை: 'பு' என்னும் எழுத்து ('உப்பகாரம்') (த பு என்னும்) ஒரு மொழியில் மட்டுமே ஈறாகும்; என்பர் அறிஞர் ; (தன் வினை, பிறவினை என்னும்) இரண்டிடத்து நிலையும் அவ்வொரு சொல்லுக்கு அமைந்த பொருளில் உண்டு.

## ஈறாகாத பிற உயிர்மெய்கள்

**77.** எஞ்சிய எல்லாம் எஞ்சுதல் இலவே. 44

எ—ரை : ஏனைய உயிர்மெய்கள் எல்லாம், ஒரோவழி தம்பெயர் கூறுங்கால் ஈறாக வருதல் உண்டு.

## மொழியீறாம் மெய்கள்

**78.** ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள, என்னும்
அப் பதினொன்றே புள்ளி இறுதி. 45

எ—ரை : புள்ளி எழுத்துக்களில் மொழிக்கு இறுதியாகி வருவன : ஞ, ண, ந, ம, ன, ய; ர, ல, வ, ழ, ள, என்னும் பதினொன்றாம்.

## நகரமெய் இருமொழிக்கு ஈறாதல்

**79.** உச் சகாரமொடு நகாரம் சிவணும் 46

எ—ரை : 'சு' எழுத்துப்போல நகர மெய்யும் (பொருந், வெரிந் என்னும்) இருமொழிகளில் மட்டுமே ஈறாய் வரும்.

## ஞகரமெய் ஒருமொழிக்கண் மட்டுமே ஈறாதல்

**80.** உப் பகாரமொடு ஞகாரையும் அற்றே;
அப் பொருள் இரட்டாது இவணையான. 47

எ–ரை: 'பு' எழுத்துப் போல ஞகரமெய்யும், (உரிஞ் என்னும்) ஒருமொழிக்கண் மட்டுமே ஈறாய் வரும்; ஆனால் தன்வினை, பிறவினைப் பொருளில் அங்கு இரண்டு பொருள்பட்டது போல இவ்விடத்தில் இரண்டு பொருள் படாது; பொருள் ஒன்றே.

## வகரமெய் நான்குமொழிக்கு ஈறாதல்

**81.** வகரக் கிளவி நான்மொழி ஈற்றது. 48

எ–ரை: வகர மெய் (அவ், இவ், உவ், தெவ் என்னும்) நான்கு மொழிகளில் மட்டுமே ஈறாய் நிற்கும்.

## அஃறிணையில் னகர வீற்றுமொழிகள் ஒன்பது

**82.** 'மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த
னகரத் தொடர்மொழி ஒன்பஃது' என்ப –
'புகர் அறக் கிளந்த அஃறிணை மேன.' 49

எ–ரை: மகர ஈற்றுத் தொடர்மொழியோடு மயங்குதல் பொருந்தாது என்று வரையறுக்கப்பட்ட னகரத்தொடர் மொழி (உகின், செகின், விழன், பயின், குயின், அழன், புழன், கடான், வயான் என்னும்) ஒன்பது என்பர் அறிஞர்; இவை குற்றமறக் கூறப்பட்ட அஃறிணைப் பெயர்களே யாம்.

### இயல்–3

# பிறப்பு இயல்

(எழுத்துக்களின் பிறப்பு இலக்கணம் கூறும் இயல்)

## 1. எழுத்துக்களின் பொதுப்பிறப்பு

83. உந்தி முதலா முந்து வளி தோன்றி,
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇ,
பல்லும், இதழும், நாவும், மூக்கும்,
அண்ணமும் உளப்பட எண் முறை நிலையான்
உறுப்பு உற்று அமைய நெறிப்பட நாடி,
எல்லா எழுத்தும் சொல்லும் காலை,
பிறப்பின் ஆக்கம் வேறு வேறு இயல –
திறப்படத் தெரியும் காட்சியான. 1

எ–ரை: தமிழ் எழுத்துக்கள் எல்லாம் ஒருவன் முறைப்பட ஆராய்ந்து சொல்லும் காலத்துக் கொப்பூழ் அடியாக மேலே கிளர்ந்து எழுகின்ற 'உதானன்' என்ற காற்றுத் தோன்றி, தலை, கழுத்து, நெஞ்சு ஆகியவற்றில் நிலைபெற்று நிற்கும். பல், இதழ், நா, மூக்கு, அண்ணம் ஆகிய இடங்களில் ஓர் உறுப்போடு ஓர் உறுப்புத் தம்மோடு பொருந்தி அமைதி பெறப் பிறப்பினது ஆக்கம் வேறு வேறு இயல்புடன் புலப்பட்டு வழங்கும்; இது ஆராயும் அறிவிற்கு இனிது விளங்கும்.

## 2. உயிர் எழுத்துக்களின் பிறப்பு

### பொது

84. அவ் வழி,
பன்னீர்–உயிரும் தம் நிலை திரியா,
மிடற்றுப் பிறந்த வளியின் இசைக்கும். 2

எ–ரை: அவ்விடத்துப் பன்னிரண்டு உயிர் எழுத்துக்களும் தத்தம் நிலை திரியாமல், மிடற்றிடத்துப் பிறக்கும் வளியால் ஒலிக்கும்.

### அ, ஆ பிறக்குமாறு

**85.** அவற்றுள்,
அ, ஆ, ஆயிரண்டு அங்காந்து இயலும். 3

எ–ரை: பன்னீருயிர்களுள், அ, ஆ என்னும் இரண்டும் அங்காந்து சொல்லுதலால் பிறக்கும்.

### இ, ஈ, எ, ஏ, ஐ பிறக்குமாறு

**86.** இ, ஈ, எ, ஏ, ஐ, என இசைக்கும்
அப் பால் ஐந்தும் அவற்று ஓரன்ன;
அவைதாம்
அண்பல் முதல் நா விளிம்பு உறல் உடைய 4

எ–ரை: இ, ஈ, எ, ஏ, ஐ என்னும் ஐந்து உயிர்களும் அகர ஆகாரங்கள் போல் அங்காந்து சொல்லப் பிறக்கும். அவ்வாறு சொல்லப் பிறக்குமிடத்துப் பல்லினது அண்மையிடத்து நாவினது அடியின் விளிம்பு சென்று பொருந்துதலை அவை உடையன.

### உ, ஊ, ஒ, ஓ, ஔ பிறக்குமாறு

**87.** உ, ஊ, ஒ, ஓ, ஔ, என இசைக்கும்
அப் பால் ஐந்தும் இதழ் குவிந்து இயலும் 5

எ–ரை: உ, ஊ, ஒ, ஓ, ஔ என்னும் ஐந்து உயிர்களும் இதழ் குவித்துச் சொல்லுதலால் பிறக்கும்.

### உயிர்க்கும் மெய்க்கும் ஒரு பொது விதி

**88.** 'தம்தம் திரிபே சிறிய' என்ப. 6

எ–ரை: எழுத்துக்கள் ஓர் இடத்தினின்று ஓர் உறுப்புக் கூறப் பிறக்கும் என இவ்வாறு கூறப்பட்டன எனினும் தத்தம் வேறுபாடுகளும் சிறிய உடையன என்பர் அறிஞர்.

# 3. மெய் எழுத்துக்களின் பிறப்பு

## க, ங பிறக்குமாறு

**89.** ககார ஙகாரம் முதல் நா அண்ணம். 7

எ–ரை: நாவின் முதலும், அண்ணத்தின் முதலும் பொருந்தினால், க, ங என்ற மெய்கள் பிறக்கும்.

## ச, ஞ பிறக்குமாறு

**90.** சகார ஞகாரம் இடை நா அண்ணம். 8

எ–ரை: நாவின் இடையும் அண்ணத்தின் இடையும் பொருந்தினால் ச, ஞ என்ற மெய்கள் பிறக்கும்.

## ட, ண பிறக்குமாறு

**91.** டகார ணகாரம் நுனி நா அண்ணம் 9

எ–ரை: நாவின் நுனியும், அண்ணத்தின் நுனியும் பொருந்தினால் ட, ண என்ற மெய்கள் பிறக்கும்.

## ஓர் ஐயம் தீர்த்தல்

**92.** அவ் ஆறு எழுத்தும் மூவகைப் பிறப்பின. 10

எ–ரை: மேற்கூறப்பட்ட வல்லின எழுத்து ஆறும் நிரனிறை வகையால் அறுவகைப் பிறப்பின என்று கொள்ளலாகாது; மூவகைப் பிறப்பினவே யாம்.

## த, ந – பிறக்குமாறு

**93.** அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கில்
நா நுனி பரந்து மெய் உற ஒற்ற,
தாம் இனிது பிறக்கும் – தகார நகாரம். 11

எ–ரை: அண்ணத்தைப் பொருந்திய பல்லினது அடியாகிய இடத்தின் கண், நாவின் நுனி பரந்து வடிவு பொருந்த ஒற்றினால், த, ந என்ற இரண்டு மெய்கள் பிறக்கும்.

## ற, ன – பிறக்குமாறு

**94.** **அணரி நுனி நா அண்ணம் ஒற்ற,**
**றஃகான், னஃகான், ஆயிரண்டும் பிறக்கும்.** 12

எ–ரை: நுனி நா, மேனோக்கிச் சென்று அண்ணத்தை ஒற்றினால் ற, ன என்னும் இரண்டு மெய்கள் பிறக்கும்.

## ர, ழ – பிறக்குமாறு

**95.** **நுனி நா அணரி அண்ணம் வருட,**
**ரகார, ழகாரம், ஆயிரண்டும் பிறக்கும்.** 13

எ–ரை: நுனி நா, மேனோக்கிச் சென்று அண்ணத்தை ஒற்றினால் ற , ன என்னும் இரண்டு மெய்கள் பிறக்கும்.

## ல, ள பிறக்குமாறு

**96.** **நா விளிம்பு வீங்கி, அண்பல் முதல் உற,**
**ஆவயின் அண்ணம், ஒற்றவும், வருடவும்,**
**வகார, ளகாரம், ஆயிரண்டும் பிறக்கும்.** 14

எ–ரை: நாவினது விளிம்பு தடித்துப் பல்லினது அடியாகிய இடத்தைப் பொருந்தினால், அவ்விடத்து முதல் நா அவ்வண்ணத்தை ஒற்ற லகரமும், அதனைத் தடவ ளகரமும் பிறக்கும்.

## ப, ம – பிறக்குமாறு

**97.** **இதழ் இயைந்து பிறக்கும் – பகார, மகாரம்** 15

எ–ரை: கீழ் இதழும், மேல் இதழும், தம்மில் இயைந்தால் ப, ம என்னும் இரண்டு மெய்கள் பிறக்கும்.

### வ– பிறக்குமாறு

98. பல் இதழ் இயைய, வகாரம் பிறக்கும். 16

எ–ரை: மேற்பல்லும், கீழ் இதழும் தம்மில் இயைந்தால் வ என்னும் மெய் பிறக்கும்.

### ய – பிறக்குமாறு

99. அண்ணம் சேர்ந்த மிடற்று எழு வளி இசை
கண்ணுற்று அடைய, யகாரம் பிறக்கும். 17

எ–ரை: அண்ணத்தை நாச் சேர்ந்த இடத்து மிடற்றினின்றும் எழும் வளியான் ஆகிய இசை, அவ்வண்ணத்தை இணைந்து செறிய யகாரம் பிறக்கும் *

### மெல்லின மெய்களின் பிறப்புக்கு ஒரு சிறப்பு விதி

100. மெல்லெழுத்து ஆறும் பிறப்பின் ஆக்கம்
சொல்லிய பள்ளி நிலையின ஆயினும்,
மூக்கின் வளிஇசை யாப்புறத் தோன்றும். 18

எ–ரை: மெல்லெழுத்துக்கள் ஆறும் தத்தம் பிறப்பினது ஆக்கம் மேற் சொல்லப்பட்ட இடத்தே நிலைபெற்றனவாயினும், அவை மூக்கின்கண் எழும் வளியான் ஆகிய இசையால் தோன்றும். (இடை யெழுத்திற்கு மிடற்று வளியும், வல்லெழுத்திற்குத் தலை வளியும் ஆம்.)

## 4. சார்பு எழுத்துக்களின் பிறப்பு

101. 'சார்ந்து வரின் அல்லது தமக்கு இயல்பு இல' எனத்
தேர்ந்து வெளிப்படுத்த ஏனை மூன்றும்

---

* "உரலாணி யிட்டாற் போலச் செறிய யகாரவொற்றுப் பிறக்கும்" என்பர் நச்சினார்க்கினியர், "உரலாணி – உரற்குழி பள்ளமாகியாகி அடியில் துளை விழுந்தபின் அதை அடைக்கும்படி செறிக்கும் மரத்துண்டு" என்பது பாவாணர் குறிப்பு.

தம்தம் சார்பின் பிறப்பொடு சிவணி,
ஒத்த காட்சியின் தம் இயல்பு இயலும். 19

எ–ரை: சில எழுத்துக்களைச் சார்ந்து வரின் அல்லது தமக்குத் தாமே வரும் தனி இயல்பு இல்லாதவை என்று ஆராய்ந்து வெளிப்படுத்தப் பட்ட குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் ஆகிய மூன்று சார்பெழுத்துக்களும் தத்தமக்குச் சார்பாகிய எழுத்துக்களின் பிறப்பிடத்தே பிறத்தலைப் பொருந்தும், அவ்விடத்தே தமக்குரிய இயல்புடன் நடக்கும்.

## 5. எழுத்துக்களின் பிறப்பிற்கு ஒரு புறனடை *

102. எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்து,
சொல்லிய பள்ளி எழுதரு வளியின்
பிறப்பொடு விடுவழி உறழ்ச்சி வாரத்து,
அகத்து எழு வளி இசை அரில் தப நாடி,
அளபின் கோடல் அந்தணர் மறைத்தே.
அஃது இவண் நுவலாது எழுந்து புறத்து இசைக்கும்
மெய் தெரி வளி இசை அளபு நுவன்றிசினே. 20

எ–ரை: எல்லா எழுத்துக்களும் வெளிப்படையாக விதந்து சொல்லப் பட்ட இடத்தின்கண், தாம் பிறக்கும் இயல்புடையன; தம்மைச் சொல்லும் இடத்து, திரிகின்ற கூற்றை (பகுதியை) உடைய உள்ளேயிருந்து எழும்வளியான் ஆகிய இசையை மாத்திர வகையான் வரையறுத்துக் கொள்ளுதல் அந்தணர்க்கு உரிய மறையின்கண் உள்ளது; அதனை இந்நூலிடத்துச் சொல்லாமல், உள்ளே யிருந்து புறத்துப் போந்து இசைக்கும் பொருண்மை தெரிகின்ற வளியான் ஆகிய இசையின் மாத்திரையையே யான் இங்குக் கூறினேன்.

* 102–ஆம் நூற்பாவை ஒன்றாகக் கொள்வர் நச்சினார்க்கினியர்; "அஃதிவண் நுவலாது.." என்ற பகுதியைத் தனி நூற்பாவாகக் கொள்வர் இளம் பூரணர்.

## இயல் 4

# புணரியல்

(எழுத்துக்களின் புணர்ச்சி இலக்கணம் கூறும் இயல்)

## 1. மொழிகளின் முதலும் ஈறும்

### மொழிக்கு முதலிலும் இறுதியிலும் வரும் எழுத்துக்கள்

103. மூன்று தலை இட்ட முப்பதிற்று எழுத்தின்,
இரண்டு தலை இட்ட முதல் ஆகு இருபஃது,
அறு–நான்கு ஈறொடு நெறி நின்று இயலும்
எல்லா மொழிக்கும் இறுதியும் முதலும்,
மெய்யே, உயிர், என்று ஆயீர் இயல. 1

எ–ரை: முதல் எழுத்தும், சார்பு எழுத்தும் ஆகிய முப்பத்து மூன்று எழுத்துக்களுள். மொழிக்கு முதலாக வரும் இருபத்திரண்டு எழுத்துக்களும், மொழிக்கு இறுதியாக வரும் இருபத்தி நான்கு எழுத்துக்களும், உரைநடை வழக்கு. செய்யுள் வழக்கு என்னும் இருவகை நெறிகளிலும் நின்று இயங்கும் எல்லாச் சொற்களிலும், மெய்யெழுத்து அல்லது உயிர் எழுத்துக்களை முதலிலும் ஈற்றிலுமாக உடையன; இவ்வகையில் இவை இரண்டு வகைப் படுவன.

### மொழியிறுதி மெய்கள் புள்ளி பெறுதல்

104. அவற்றுள்,
மெய் ஈறு எல்லாம் புள்ளியொடு நிலையல். 2

எ–ரை: மெய்யும், உயிரும் ஆகிய இரண்டினுள், மொழிக்கு ஈறாகிய மெய்கள் எல்லாம் புள்ளி பெற்று நிற்கும், மொழிக்கு முதலாகிய மெய்கள் எல்லாம் புள்ளி இழந்து நிற்கும்.

### குற்றியலுகரம் ஒற்றெழுத்து ஒத்தல்

105. 'குற்றியலுகரமும் அற்று' என மொழிப. 3

எ–ரை: குற்றியலுகரமும் ஒற்றெழுத்துப் போலப் புள்ளி பெற்று நிற்கும் *

## உயிர்மெய் ஈறு உயிர் ஈற்றது

**106.** உயிர்மெய் ஈறும் உயிர் ஈற்று இயற்றே. 4

எ–ரை: மொழியீற்றில் நிற்கும் உயிர்மெய்கள், உயிர் ஈற்றின் இயல்பையே உடையன. (இடையில் நிற்பனவும் உயிருள் அடங்குவன; முதலில் நிற்பன மட்டும் மெய்யுள் அடங்கும்)

## புணர்ச்சிக்குரிய இருமொழிகளின் இயல்பு

**107.** உயிர் இறு சொல் முன் உயிர் வரு வழியும்,
உயிர் இறு சொல் முன் மெய் வரு வழியும்,
மெய் இறு சொல் முன் உயிர் வரு வழியும்,
மெய் இறு சொல் முன் மெய் வரு வழியும், என்று
இவ் என அறியக் கிளக்கும் காலை –
நிறுத்த சொல்லே, குறித்து வரு கிளவி, என்று
ஆயிர் இயல – புணர் நிலைச் சுட்டே. 5

எ–ரை: எழுத்து வகையில் நான்கு வகைப்படும் இவ்விரு மொழிப் புணர்ச்சி; அந்நான்கு வகையாவன : (1) உயிர் ஈற்றுச் சொல் முன் உயிர் முதன் மொழி வரும் இடம். (2) உயிர் ஈற்றுச் சொல் முன் மெய்ம் முதன் மொழி வரும் இடம். (3) மெய் ஈற்றுச் சொல் முன் உயிர் முதன் மொழி வரும் இடம். (4) மெய் ஈற்றுச் சொல் முன் மெய்ம் முதன் மொழி வரும் இடம்.

---

* ''குற்றியலுகரமும் புள்ளியீறுபோல உயிர் ஏற இடங்கொடுக்கும்'' என்பர் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும், (''இம் மாட்டேறு ஒரு புடைச் சேறல் என வுணர்க'' என்பது இளம்பூரணர் குறிப்பு. இம்மாட்டேறு ஒருபுடைச் சேறல் புள்ளி பெறாமையின்'' என்பது நச்சினார்க்கினியர் குறிப்பு.) ''புள்ளியொடு நிலையல்'' என்று முன் நூற்பாவில் குறித்தார் (அவ்வியல்புடையது) ஆதலின், 'புள்ளி பெறுதலையே–' அற்று – என்று குறித்துள்ளார் என்று கொள்ளுதலே இயல்பான உரை.

புணரும் நிலைமைக் கண் இவை 'நிறுத்த சொல் (நிலை மொழி), 'குறித்துவரு கிளவி' (வருமொழி) என்ற இரண்டு நிலைகளை உடையனவாம்.

## 2. புணர்தலின் இயல்பு

### மொழிபுணர் இயல்பு நான்கு

108. அவற்றுள்,
நிறுத்த சொல்லின் ஈறு ஆகு எழுத்தொடு
குறித்து வரு கிளவி முதல் எழுத்து இயைய,
பெயரொடு பெயரைப் புணர்க்குங் காலும்,
பெயரொடு தொழிலைப் புணர்க்குங் காலும்,
தொழிலொடு பெயரைப் புணர்க்குங் காலும்,
தொழிலொடு தொழிலைப் புணர்க்குங் காலும்,
மூன்றே திரிபு இடன், ஒன்றே இயல்பு என
ஆங்கு அந் நான்கே – மொழி புணர் இயல்பே. 6

எ–ரை: 'நிறுத்தசொல்' ஆகிய நிலைமொழியின் இறுதியில் நின்ற எழுத்தொடு, 'குறித்து வரு கிளவி' ஆகிய வருமொழியின் முதல் எழுத்துப் பொருந்தும், அவ்வாறு பொருந்தும் போது (1) பெயர்ச் சொல்லோடு பெயர்ச் சொல் புணரலாம், (2) பெயர்ச் சொல்லோடு வினைச்சொல் புணரலாம், (3) வினைச் சொல்லோடு பெயர்ச்சொல் புணரலாம், (4) வினைச் சொல்லோடு வினைச்சொல் புணரலாம். இவ்வாறு புணருங்கால், மூவகைத் திரிபு புணர்ச்சியும் (மெய் வேறுபடல், மெய் மிகுதல், மெய் குன்றல்) ஓர் இயல்பு புணர்ச்சியும் என மொழிகள் தம்மிற் புணரும் இயல்பு நான்காகும்.

### புணர்ச்சியில் மூவகைத் திரிபுகள்

109. 'அவைதாம்'
மெய் பிறிது ஆதல், மிகுதல், குன்றல், என்று
இ ஏ, என் மொழிப – திரியும் ஆறே. 7

எ–ரை: அத்திரிபு மெய் வேறுபடலும், மெய் மிகுதலும், மெய் குறைதலும் என மூன்று வகைப்படும்.

## அடைமொழிகளோடு புணரும் நிலை

110. நிறுத்த சொல்லும், குறித்து வரு கிளவியும்,
அடையோடு தோன்றினும், புணர் நிலைக்கு உரிய. 8

எ–ரை: நிலைமொழியாக நிற்கும் சொல்லும், அதனைக் குறித்து வரும் சொல்லும், தாமே வந்து சேர்தலே அன்றி, அவை யிரண்டிலும் ஒரோர் சொல் அடைமொழியாக வந்து பொருத்தித் தோன்றினும் அவை புணரும் நிலைக்கு உரியனவே.

## மரூஉமொழிப் புணர்ச்சி

111. மருவின் தொகுதி மயங்கியல் மொழியும்
உரியவை உளவே புணர் நிலை சுட்டே. 9

எ–ரை: இலக்கண வழக்குடைய சொற்கள் மட்டும் அன்றி இலக்கணத்தோடு பொருந்தியும் பொருந்தாதும் வரும் மரூஉ வழக்குச் சொற்களும் புணரும் நிலைமைக்கண் உரியனவே.

## இருவகைப் புணர்ச்சி

112. வேற்றுமை குறித்த புணர்மொழி நிலையும்,
வேற்றுமை – அல்வழிப் புணர்மொழி நிலையும்,
எழுத்தே சாரியை ஆயிரு பண்பின்,
ஒழுக்கல் வலிய – புணரும் காலை, 10

எ–ரை: வேற்றுமை உருபுகள் குறித்த புணர்நிலையும், வேற்றுமை யல்லாத புணர்நிலையும் என இருவகைப் புணர்மொழி நிலைகள் உளவாம்; எழுத்து மிகுதலும் சாரியை மிகுதலும் ஆகிய இருவகை இயல்பில் நடைபெறுதலைத் தமக்கு வலிமையாக உடையன.

# 3. உருபு புணர்ச்சி

## வேற்றுமை உருபுகள்

**113.** 'ஐ, ஒடு, கு, இன், அது, கண், என்னும்
அவ் ஆறு' என்ப – 'வேற்றுமை உருபே' 11

எ–ரை: ஐ, ஒடு, கு, இன், அது, கண், என்ற வேற்றுமை உருபுகள் ஆறுஎன்று கூறுவர்.

## வல்லெழுத்து முதலாகிய உருபு புணரும் நிலை.

**114.** வல்லெழுத்து முதலிய வேற்றுமை உருபிற்கு
ஒல்வழி ஒற்று இடை மிகுதல் வேண்டும். 12

எ–ரை: வல்லெழுத்து முதலாக நின்ற வேற்றுமை உருபிற்குப் (கு – ( க் + உ) கண் – (க் + அண்) பொருந்திய இடங்களில் ஒற்று இடையே மிகுந்து வருதல் புணரும் நிலையில் உண்டு.

## 'அது' என்னும் ஆறாம் வேற்றுமை உருபில் அகரம் கெடும் இடம்

**115.** ஆறன் உருபின் அகரக் கிளவி
ஈறு ஆகு அகர முனைக் கெடுதல் வேண்டும். 13

எ–ரை: ஆறாம் வேற்றுமை உருபு ஆகிய 'அது' என்னும் இடைச் சொல்லில் உள்ள 'அ' என்னும் எழுத்து, ஒருமொழியின் ஈறாக உள்ள அகரத்தின் முன்னே கெடுதல் வேண்டும்.

## வேற்றுமை உருபுகள் எவ்விடத்தில் நிற்கும்?

**116.** வேற்றுமை வழிய பெயர் புணர் நிலையே. 14

எ–ரை: சொற்கள் புணரும் நிலையின்கண், பெயர்ச்சொற்களின் பின்னே வேற்றுமை உருபுகள் நிற்கும்.

### பெயர்களின் பெயர், முறை, தொகை

117. 'உயர் திணைப் பெயரே, அஃறிணைப் பெயர், என்று
ஆயிரண்டு' என்ப, 'பெயர் நிலைச் சுட்டே'. 15

எ–ரை: உயர்திணைப் பெயர், அஃறிணைப் பெயர் என்னும் இரண்டு வகையாகப் பெயர்கள் அமையும்.

## 4. சாரியைப் புணர்ச்சி

### சாரியை வரும் இடம்

118. அவற்று வழி மருங்கின் சாரியை வருமே. 16

எ–ரை: வேற்றுமை உருபுகளின் பின்னாகிய இடத்தில் சாரியைகள் வரும்.

### சாரியைகளின் பெயர், முறை, தொகை

119. 'அவைதாம்,
இன்னே, வற்றே, அத்தே, அம்மே,
ஒன்னே, ஆனே, அக்கே, இக்கே,
அன் என் கிளவி உளப்பட, பிறவும்,
அன்ன' என்ப – சாரியை மொழியே. 17

எ–ரை: சாரியைகளாவன: இன், வற்று, அத்து, அம், ஒன், ஆன், அக்கு, இக்கு, அன் என்பனவும், அவை போல்வன பிறவும் ஆம்.

### 'இன்' சாரியை – புணரும் நிலையில் எய்தும் வேறுபாடுகள்

120. அவற்றுள்,
இன்னின் இகரம் ஆவின் இறுதி
முன்னர்க் கெடுதல் உரித்தும் ஆகும். 18

எ–ரை: அச்சாரியைகளுள், 'இன்' என்னும் சாரியை 'ஆ' என்ற இறுதியின் முன் கெடுதலும் உண்டு.

(கெடாது நிற்றலும் உண்டு.)

121. அளபு ஆகு மொழி முதல் நிலைஇய உயிர்மிசை
னஃகான் றஃகான் ஆகிய நிலைத்தே. 19

எ–ரை: 'இன்' என்ற சாரியை அளவுப் பெயர்களின் மேல் நிலைபெற்றிருக்கும் உயிரெழுத்துக்களின் மேல் 'ன' 'ற' ஆகும் நிலையும் உண்டு.

## 'வற்று' புணரும் நிலையில் எய்தும் வேறுபாடு

122. வஃகான் மெய் கெட, சுட்டு முதல் ஐம் முன்,
அஃகான் நிற்றல் ஆகிய பண்பே. 20

எ–ரை: அவை, இவை, முதலிய (சுட்டு முதலாகிய ஐகார ஈற்றுப்) பெயர்களின் முன் 'வற்று' என்ற சாரியை வரும்போது, 'வ' என்ற எழுத்து கெடும்; 'அ' என்ற எழுத்தாக நிற்கும்.

(வற்று > அற்று)

## னகர ஈற்றுச் சாரியை புணரும் நிலையில் எய்தும் வேறுபாடு

123. னஃகான், றஃகான், நான்கன் உருபிற்கு 21

எ–ரை: நான்காம் வேற்றுமை உருபாகிய 'கு' என்பதற்கு முன் னகர ஈற்றுச் சாரியை 'ற' ஆகத் திரியும்.

## 'ஆன்' ஈறு பொருட்புணர்ச்சியில் எய்தும் வேறுபாடு

124. ஆனின் னகரமும் அதன் ஓரற்றே,
நாள் முன் வரூஉம் வல் முதல் தொழிற்கே 22

எ–ரை: 'பரணி' முதலிய நாட்பெயர்களுக்கு முன் வல்லெழுத்தை முதலாக

உடைய வினைச்சொற்களுக்கு இடையில், 'ஆ' என்ற சாரி யையின் இறுதி 'ற' கரமாகத் திரியும்.

## 'அத்து' எய்தும் வேறுபாடு

**125.** அத்தின் அகரம் அகர முனை இல்லை. 23

எ—ரை: அகர ஈற்றின் பின் 'அத்து' என்ற சாரியையின் அகரம் கெடும். (அத்து > த்து)

## 'இக்கு' எய்தும் வேறுபாடு

**126.** இக்கின் இகரம் இகர முனை அற்றே. 24

எ—ரை: இக்கு என்ற சாரியையின் முதலில் நிற்கும் இகரம் இகர ஈற்றின் பின் கெடும்.

(இக்கு > க்கு)

**127.** ஐயின் முன்னரும் அவ் இயல் நிலையும். 25

எ—ரை: 'ஐ' ஈற்றின் முன்னரும் 'இக்கு' இகரம் கெடுதலாகிய அவ்வி யல்பைப் பெற்று நிற்கும்.

## 'அக்கு' எய்தும் வேறுபாடு

**128.** எப் பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி
அக்கின் இறுதி மெய்ம் மிசையொடும் கெடுமே;
குற்றியலுகரம் முற்றத் தோன்றாது. 26

எ—ரை: எவ்வகைப்பட்ட பெயர்களின் முன்னரும், வல்லெழுத்து வரும்போது, 'அக்கு' என்ற சாரியையின் இறுதியில் நின்ற மெய், தனக்குமேல்நின்ற மெய்யெழுத்தோடும் கெடும்; குற்றியலுகரம் முழுதும் கெடும்.

(அக்கு > அ)

## ‘அம்’ எய்தும் வேறுபாடுகள்

129. அம்மின் இறுதி, க, ச, த – க் காலை,
தன் மெய் திரிந்து, ங, ஞ, ந ஆகும். 27

எ–ரை: ‘அம்’ என்ற சாரியையின் இறுதியில் நிற்கும் ‘ம்’ ஈறு, க, ச, த, என்பன முன்னே வரும் போது முறையே ங, ஞ, ந, என்று திரியும்.

130. ‘மென்மையும் இடைமையும் வரூஉம் காலை
இன்மை வேண்டும்’ என்மனார் புலவர். 28

எ–ரை: மெல்லெழுத்து, இடையெழுத்து முன்னே வரும்போது ‘ம்’ ஈறு முழுதும் கெடும்.

## ‘இன்’ சாரியை முழுதும் கெடும் இடம்

131. இன் என வரூஉம் வேற்றுமை உருபிற்கு
இன் என் சாரியை இன்மை வேண்டும். 29

எ–ரை: ‘இன்’ என்று வரும் வேற்றுமை உருபிற்கு முன் ‘இன்’ என்ற சாரியை தான் முழுவதும் கெட்டு நிற்கும்.

## புணர்மொழிகளில் சாரியை வருதல்

132. பெயரும் தொழிலும் பிரிந்து ஒருங்கு இசைப்ப,
வேற்றுமை உருபு நிலைபெறு வழியும்,
தோற்றம் வேண்டாத் தொகுதிக்கண்ணும்,
ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கொடு சிவணி,
சொற் சிதர் மருங்கின், வழி வந்து விளங்காது
இடை நின்று இயலும், சாரியை இயற்கை;
உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும். 30

எ–ரை: பெயர்ச் சொல்லும், தொழிற்சொல்லும் தாம் பெயரும் தொழிலுமாய்ப் பிரிந்தும், பெயரும் பெயருமாய்க் கூடியும், இசைப்ப, வேற்றுமை

உருபுகள் நிலைபெற்ற இடத்தும், நிலைபெறாது தொகையாகி வரும் இடத்தும், தாம் பொருந்துதற்கு ஏற்ற வழக்கோடே பொருந்திச் சாரியை பெறும் புணர்மொழிகளைப் பிரித்துக்காணும் இடத்து, அச்சாரியைகளின் தன்மை அச்சொற்களின் பின்னே விளங்காது நடுவே நின்று நடக்கும். 'ஒடு' என்னும் உருபு வரும்போது அச்சாரியை இருத்தலும் உண்டு; இல்லாது போதலும் உண்டு.

## 'அத்து' 'வற்று' வருமிடத்து நிகழும் வேறுபாடு

**133.** அத்தே, வற்றே, ஆயிரு மொழிமேல்
ஒற்று மெய் கெடுதல் தெற்றென்றற்றே;
அவற்று முன் வரூஉம் வல்லெழுத்து மிகுமே. 31

எ–ரை: 'அத்து' 'வற்று' என்பன வற்றின்மேல் நின்ற ஒற்று தன் வடிவு கெடும்; அவற்றின்முன் வரும் வல்லெழுத்து மிகும்.

# 5. எழுத்துச்சாரியை

## பெயர்

**134.** காரமும் கரமும் கானொடு சிவணி,
நேரத் தோன்றும், எழுத்தின் சாரியை. 32

எ–ரை: 'காரம்' 'கரம்' என்பனவும், 'கான்' என்ற சாரியையோடு பொருந்தி நிகழத் தோன்றும் எழுத்தின் சாரியைகளாம்.

## நெட்டெழுத்துச் சாரியை

**135.** அவற்றுள்,
கரமும் கானும் நெட்டெழுத்து இலவே. 33

எ–ரை: அவற்றுள் 'கரம்' 'கான்' என்பன நெட்டெழுத்துக்களோடு பொருந்தா. (காரம் மட்டுமே நெட்டெழுத்துக்களுக்கு ஏற்கும்)

### குற்றெழுத்துச் சாரியை

136. வரன்முறை மூன்றும் குற்றெழுத்து உடைய. 34

எ–ரை: வரலாற்று முறையில், முற்கூறிய ‘காரம்’ ‘கரம்’ ‘கான்’ என்ற மூன்றும் குற்றெழுத்துக்களுக்குப் பொருந்தும் சாரியைகளாம்.

### ‘ஐ’ ‘ஔ’ – சாரியை

137. ஐகார ஔகாரம் கானொடும் தோன்றும் 35

எ–ரை: ‘ஐ’ ‘ஔ’ என்ற இரண்டு நெட்டெழுத்துக்களும் ‘காரம்’ என்பதனோடு ‘கான்’ என்ற சாரியையும் ஏற்கும்.

## 6. உயிரெழுத்தின் புணர்ச்சி இயல்புகள்

### மெய் ஈற்றின் முன் உயிர் புணர்தல்

138. புள்ளி ஈற்று முன் உயிர் தனித்து இயலாது;
மெய்யொடும் சிவணும், அவ் இயல் கெடுத்தே. 36

எ–ரை: மெய் ஈற்றில் முன் உயிர் தனித்து நில்லாது; தனித்து நிற்கும் அவ்வியல்பைக் கெடுத்து மெய் எழுத்தோடும் பொருந்தி நிற்கும்.

### உயிர் பிரிந்த மெய்யின் இயல்பு

139. மெய் உயிர் நீங்கின், தன் உரு ஆகும். 37

எ–ரை: உயிர் பிரிந்த மெய் எழுத்து முன்னைய தன் வடிவே வடிவாய் நிற்கும்.

### உடம்படு மெய் தோன்றும் இடம்

140. எல்லா மொழிக்கும் உயிர் வரு வழியே,
உடம்படு மெய்யின் உருபு கொளல் வரையார். 38

எ—ரை: உயிர் ஈற்றில் நிற்கும் எல்லா மொழிகளுக்கும் வருமொழி முதலிலும் உயிர் வருமாயின், 'ய', 'வ' என்ற உடம்படு மெய் யெழுத்துக்களின் வடிவு பொருந்தி நிற்றலை நீக்க மாட்டார்; கொள்ளுவர்.

## 7. புணர்ச்சியில் பொருள் வேறுபடும் இடம்

### ஒலி வேற்றுமையால் பொருள் வேறுபடல்

141. எழுத்து ஓரன்ன பொருள் தெரி புணர்ச்சி
இசையின் திரிதல் நிலைஇய பண்பே. 39

எ—ரை: எழுத்தின் ஒருதன்மைப் பட்ட கருத்தில், எடுத்தல், படுத்தல், நலிதல் என்ற ஒலி வேறு பாட்டால் பொருள் வேறுபடுதல் நிலை பெற்ற பண்பு ஆகும்.

142. அவைதாம்
முன்னப் பொருள் புணர்ச்சிவாயின்
இன்ன என்னும் எழுத்துக் கடன் இலவே. 40

எ—ரை: அவ்வாறு வருவனவற்றைப் புணர்ச்சியிடத்துக் குறிப்பால் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்; 'இன்னதே' இதன் பொருள் என்னும் எழுத்து முறைமை இல்லை.

## இயல் 5

# தொகை மரபு

(எழுத்துப் புணர்ச்சியுள் தொகுத்துக் கூறுவதற்கு உரிய புணர்ச்சி இலக்கணங்களைத் தொகுத்துக் கூறும் இயல்)

## 1. உயிர் ஈறு மெய் ஈறுகளின் பொதுப்புணர்ச்சி

### மெல்லினம் தோன்றும் இடம்

143. க, ச, த, ப, முதலிய மொழிமேல் தோன்றும்
மெல்லெழுத்து இயற்கை சொல்லிய முறையான்,
ங, ஞ, ந, ம, என்னும் ஒற்று ஆகும்மே
அன்ன மரபின் மொழிவயினான. 1

எ—ரை: உயிர் ஈறும், மெய் ஈறும் முன்னர் நிற்ப, க, ச, த, ப என்ற மெய்களை முதலாக உடைய மொழிகள் வந்தால், அவற்றிற்கு மேலே தோன்றும் இயல்பை உடைய, மெல்லெழுத்துக்கள் முறையே ங, ஞ, ந, ம, என்னும் ஒற்றுக்கள் ஆகும்; அவ்வாறு வருவது அத்தகு மரபைக் கொண்ட மொழிகளின் இடத்தேயாம்.

### வருமொழி இயல்பாய் முடிவன

144. ஞ, ந, ம, ய, வ என்னும் முதல் ஆகு மொழியும்,
உயிர் முதல் ஆகிய மொழியும், உளப்பட,
அன்றி அனைத்தும், எல்லா வழியும்,
நின்ற சொல் முன் இயல்பு ஆகும்மே. 2

எ—ரை: ஞ, ந, ம, வ, ய என்னும் எழுத்துக்கள் முதலாய் நின்ற சொற்களும், உயிர் எழுத்துக்கள் முதலாய் நின்ற சொற்களும் தம்மிற் கூட. அவ் வனைத்துச் சொற்களும் அவ்வழி வேற்றுமை என்ற எல்லா இடத்தும், இருபத்து நான்கு ஈற்றனவாய் நின்ற பெயர்ச் சொற்களின் முன்னர் இயல்பாக முடியும்.

## மெல்லெழுத்து உறழ்ச்சி முடிவு

145. அவற்றுள்,
மெல்லெழுத்து இயற்கை உறழினும் வரையார்
சொல்லிய தொடர்மொழி இறுதியான, 3

எ–ரை: மேற்குறிக்கப்பட்டவற்றுள் ஞ, ந, ம என்னும் மெல்லெழுத்துக்கள் சொல்லப்பட்ட தொடர்மொழிகளின் ஈற்றின்கண் இயல்பாக முடிவதுடன், உறழ்ந்து வரினும் நீக்க மாட்டார்கள் இலக்கணம் வல்லோர்.

## 'யா' வும் 'ஞா' வும் 'ண' 'ன' முன்

146. 'ண, ன, என் புள்ளி முன், யாவும் ஞாவும்,
வினை ஓரனைய' என்மனார் புலவர். 4

எ–ரை: ணகாரம், னகாரம் என்னும் புள்ளிகளின் முன் வந்த 'யா'வும் 'ஞா' வும் முதலாகிய வினைச்சொற்கள் ஒரு தன்மையாய் வரும்; ('யா' வரும் இடத்தில் 'ஞா' வரும்)

## 'ண', 'ன' ஈறுகள் அல்வழியில் இயல்பாதல்.

147. மொழி முதல் ஆகும் எல்லா எழுத்தும்
வருவழி, நின்ற ஆயிரு புள்ளியும்
வேற்றுமை அல் வழித் திரிபு இடன் இலவே. 5

எ–ரை: மொழி முதற்கண் வரும் இருபத்திரண்டெழுத்தும் வருமொழியாய் வரும் இடத்து, நிலைமொழி ஈற்றின் கண் உள்ள 'ண', 'ன' என்னும் அந்த இரண்டு மெய்யெழுத்துக்களும் வேற்றுமை அல்லாத இடத்துத் திரிபு உடையன அல்ல; இயல்பாக நிற்கும்.

## 'ண' 'ன' ஈறுகள் வேற்றுமையில் இயல்பாதல்:

148. வேற்றுமைக்கண்ணும் வல்லெழுத்து அல் வழி,
மேற் கூறு இயற்கை ஆவயினான. 6

எ–ரை: அல்வழியிடத்துத் திரியாது நின்ற 'ண', 'ன' என்ற அவ்விரண்டு

ஒற்றுக்களும், வேற்றுமைப் புணர்ச்சிக்கண்ணும் வருமொழி வல்லெழுத்து அல்லாத இடத்து, மேற்கூறப்பட்ட இயல்பு முடிவே பெறும்.

### 'த' 'ன' – முன் 'த' 'ந' க்கள் திரிதல்.

149. ல, ன, என வருஉம் புள்ளி முன்னர்,
த, ந, என வரின், ற, ன, ஆகும்மே. 7

எ–ரை: 'ல', 'ன' என்னும் இவ்வொற்றுக்களின் முன்னர் 'த', 'ந' என்பவை முதலாக உடைய சொற்கள் வரின் முறையே 'ற' 'ன' ஆகத் திரியும்.

### 'ண' 'ள' முன் 'த' 'ந' க்கள் திரிதல்.

150. ண, ள, என் புள்ளி முன் ட, ண, எனத் தோன்றும். 8

எ–ரை: 'ண' 'ள' என்னும் இவ்வொற்றுக்களின் முன்னர் 'த', 'ந' என்பவை முதலாக உடைய சொற்கள் வரின் முறையே 'ட', 'ண' ஆகத் திரியும்.

## 2. உயிர்ஈறு, மெய்ஈறுகளின் சிறப்புப் புணர்ச்சி

### முன்னிலை வினைச்சொல் முடிதல்

151. உயிர் ஈறு ஆகிய முன்னிலைக் கிளவியும்,
புள்ளி இறுதி முன்னிலைக் கிளவியும், –
இயல்பு ஆகுநவும், உறழ்பு ஆகுநவும், என்று
ஆயீர் இயல – வல்லெழுத்து வரினே. 9

எ–ரை: உயிர் ஈறு, மெய் ஈறுகளைக் கொண்ட முன்னிலைச் சொற்கள் நிலைமொழியாய் நிற்ப, வருமொழி முதற் கண் வல்லெழுத்து வரின், இயல்பாய் முடிவனவும் உறழ்ந்து முடிவனவும் என இரண்டு தன்மைகளை உடையன.

### சிறப்பு விதி

152. ஔ என வருஉம் உயிர் இறு சொல்லும்,
ஞ, ந, ம, வ, என்னும் புள்ளி இறுதியும்

குற்றியலுகரத்து இறுதியும் உள்பட –
முற்றத் தோன்றா – முன்னிலை மொழிக்கே. 10

எ–ரை: 'ஔ' என வரும் உயிர்ஈற்றுச் சொல்லும், 'ஞ' 'ந' 'ம' 'வ' என்ற புள்ளி ஈற்றுச் சொற்களும், குற்றியலுகரத்தை இறுதியிலே கொண்ட சொல்லும், ஆகிய முன்னிலை வினைச்சொற்கள் உகரம் இறுதியிலே பெற்று முடியும்.

## உயிர்திணைப் பெயர்களின் முடிவு

153. 'உயிர் ஈறு ஆகிய உயர்திணைப் பெயரும்,
புள்ளி இறுதி உயர்திணைப் பெயரும்,
எல்லா வழியும், இயல்பு' என மொழிப. 11

எ–ரை: உயிர்களை ஈற்றிற் கொண்ட உயர்திணைப் பெயர்களும், புள்ளிகளை ஈற்றிற்கொண்ட உயர்திணைப் பெயர்களும் வேற்றுமை, அல்வழி ஆகிய எல்லா இடங்களிலும் இயல்பாகவே நிற்கும் என்று கூறுவர் இலக்கணப் புலவர்.

## சிறப்பு விதி

154. அவற்றுள்,
இகர ஈற்றுப் பெயர் திரிபு இடன் உடைத்தே. 12

எ–ரை: முன் நூற்பாவிற் குறிக்கப்பெற்ற உயர்திணைப் பெயர்களுள், இகர ஈற்றுப் பெயர்கள் வேற்றுமை, அல்வழி ஆகிய இரண்டு இடங்களிலும் திரிந்து முடியும் இடமும் உடையனவாம்.

## விரவுப் பெயர்களுள் இயல்பு முடிவு

155. அஃறிணை விரவுப்பெயர் இயல்புமார் உளவே. 13

எ–ரை: உயர்திணைப் பெயரோடு அஃறிணை விரவும் விரவுப் பெயர்கள் இயல்பாய் முடிவனவும் உள; இயல்பின்றி முடிவனவும் உள.

## மூன்றாம் வேற்றுமை முடிபு

156. புள்ளி இறுதியும், உயிர் இறுகிளவியும்,
வல்லெழுத்து மிகுதி சொல்லிய முறையான்,

தம்மின் ஆகிய தொழிற்சொல் முன் வரின்,
மெய்ம்மை ஆகலும் உறழத் தோன்றலும்,
அம் முறை இரண்டும் உரியவை உளவே;
வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும். 14

எ–ரை: மூன்றாம் வேற்றுமைக்கு உரிய வினைமுதற் பொருளால் உளவாகிய வினைச்சொல், புள்ளி ஈற்றுச் சொல்லின் முன்னரும், உயிர் ஈற்றுச் சொல்லின் முன்னரும் வருமாயின், 'இயல்பு ஆதல்' 'உறழ்ச்சி ஆதல்' என்னும் இரண்டு முடிவுகளையும் பெறுதற்குரியன; வேற்றுமைக்கு ஓதப்பட்ட வல்லெழுத்து மிகாமையைக் காத்தல் வேண்டும்.

## இரண்டாம் வேற்றுமைத் திரிபு

157. 'மெல்லெழுத்து மிகு வழி வலிப்பொடு தோன்றலும்,
வல்லெழுத்து மிகு வழி மெலிப்பொடு தோன்றலும்
இயற்கை மருங்கின் மிகற்கை தோன்றலும்,
உயிர் மிக வரு வழி உயிர் கெட வருதலும்,
சாரியை உள் வழிச் சாரியை கெடுதலும்,
சாரியை உள் வழித் தன் உருபு நிலையலும்,
சாரியை இயற்கை உறழத் தோன்றலும்,
உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும்,
அஃறிணை விரவுப்பெயர்க்கு அவ் இயல் நிலையலும்,
மெய் பிறிது ஆகு இடத்து இயற்கை ஆதலும்,
அன்ன பிறவும், – தன் இயல் மருங்கின்
மெய் பெறக் கிளந்து பொருள் வரைந்து இசைக்கும்
ஐகார வேற்றுமைத் திரிபு என மொழிப. 15

எ–ரை: மெல்லெழுத்து வல்லெழுத்து என்பவை மிக வேண்டிய விடத் து மாறுபட்டு வல்லெழுத்து மெல்லெழுத்து ஆகியவை மிகுதல். இயல்பாக வேண்டிய விடத்து மிகுதல், உயிர் மிகுந்த விடத்து உயிர் கெடுதல், சாரியை வர வேண்டிய விடத்து சாரியை வாராமல் இருத்தல் சாரியை, உருபு ஆகிய இரண்டுமே இருத்தல். சாரியை, உறழத் தோன்றல் உயர்திணைப் பெயர், விரவுப் பெயர் ஆகிய இரண்டிடத்துமே ஐகார வேற்றுமை ஒழியாது இருத்தல் மெய் வேறுபடுதலுக்கு மாறாக இயல்பாக இருத்தல். அவ்வாறு உள்ளவை பிறவும் –

வேற்றுமைப் பொருட் புணர்ச்சியினது முடிவைத் தான் நீங்கி வேறு முடிவாக நின்று ஒலிக்கும் ஐகார வேற்றுமைத் திரிபுகளாம் என்று இலக்கணப் புலவர் கூறுவர்.

## இகர ஐகார ஈற்று அல்வழி முடிபு

158. 'வேற்றுமை அல் வழி, இ, ஐ, என்னும்
ஈற்றுப் பெயர்க் கிளவி மூவகை நிலைய
அவைதாம்,
இயல்பு ஆகுநவும், வல்லெழுத்து மிகுநவும்,
உறழ் ஆகுநவும், என்மனார் புலவர். 16

எ–ரை: வேற்றுமை அல்லாத விடத்து 'இ', 'ஐ' என்னும் ஈற்றை உடைய பெயர்ச் சொற்கள் மூன்று வகையான முடிவுகளை நிலையாக உடையன. அவைதாம் (1) இயல்பாக முடிவனவும், (2) வல்லெழுத்து மிகுந்து முடிவனவும், (3) உறழ்ச்சியாய் முடிவனவும் என்று கூறுவர் இலக்கணம் வல்ல புலவர்.

## இகர ஐகார ஈற்று ஏழாம் வேற்றுமை முடிவு

159. 'சுட்டு முதல் ஆகிய இகர இறுதியும்,
எகர முதல் வினாவின் இகர இறுதியும்,
சுட்டுச் சினை நீடிய ஐ என் இறுதியும்,
யா என் வினாவின் ஐ என் இறுதியும்,
வல்லெழுத்து மிகுநவும், உறழ் ஆகுநவும்,
சொல்லிய மருங்கின் உள' என மொழிப. 17

எ–ரை: சுட்டெழுத்தை முதலாக உடைய இகர ஈற்று இடைச் சொற்கள் ஆகிய 'அதோளி', 'இதோளி', 'உதோளி' என்பனவும்; எகரமாகிய வினாவெழுத்தை முதலாக உடைய இகர ஈற்று இடைச் சொல்லாகிய 'எதோளி' என்பதும்; சுட்டாகிய உறுப்பெழுத்து நீண்ட ஐகாரஈற்று இடைச் சொல்லாகிய 'ஆண்டை', 'ஈண்டை', 'ஊண்டை' என்பனவும்; 'யா' என்னும் வினாவினை முதலெழுத்தாக உடைய ஐகார ஈற்று இடைச்சொல்லாகிய 'யாண்டை' என்பதும் வல்லெழுத்து மிக்கு முடிவனவும், உறழ்ந்து முடிவனவும் என்ற இரு முடிவுகளைக் கொள்ளும் என்று கூறுவர் இலக்கணம் வல்ல புலவர்.

## நெடில் முன்னும் குறில் முன்னும் ஒற்றுக்கள்

160. ‘நெடியதன் முன்னர் ஒற்று மெய் கெடுதலும்,
குறியதன் முன்னர்த் தன் உருபு இரட்டலும்,
அறியத் தோன்றிய நெறி இயல்’ என்ப. 18

எ–ரை: நெட்டெழுத்தின் முன்னர் நின்ற ஒற்றுத் தன் வடிவு கெடுதலும், குற்றெழுத்தின் முன்னர் நின்ற ஒற்றுத் தன் வடிவு இரட்டித்தலும் அறியும்படித் தோன்றிய வழக்கியல் ஆம். (வழக்கின் கண் தொடரும் மரபு என்றவாறு.)

## குறில் முன் ஒற்று இரட்டாத இடம்

161. ஆறன் உருபினும் நான்கன் உருபினும்
கூறிய குற்றொற்று இரட்டல் இல்லை;
ஈறு ஆகு புள்ளி அகரமொடு நிலையும்;
நெடுமுதல் குறுகும் மொழி முன் ஆன. 19

எ–ரை: நெடிதாகிய முதலெழுத்துக் குறுகி முடியும் அறுவகைப்பட்ட மொழிகளின் முன்னர், ஆறாம் உருபின் கண்ணும், நான்காம் உருபின் கண்ணும் ஈறாகும் புள்ளியெழுத்துக்கள் அகரத்தோடு நிலைபெறும்; குறில் எழுத்துக்களின் முன்னர் உள்ள ஒற்றுக்கள் இரட்டல் இல்லை.

## ‘நும்’ என்ற மொழிக்கும் அவ்விதியே

162. நும் என் இறுதியும் அந் நிலை திரியாது. 20

எ–ரை: ஆறாம் வேற்றுமை, நான்காம் வேற்றுமை உருபுகளின் முன்னர் ‘நும்’ என்ற சொல்லின் இறுதியும் முற்கூறப்பட்டபடி, ஈறாகும் புள்ளியெழுத்து அகரத்தோடு நிலை பெறலும், குற்றொற்று இரட்டாமையும் ஆகிய அந்நிலையிலிருந்து மாறுபடாது.

## புள்ளி இறுதி உகரம் பெறாத இடம்

163. உகரமொடு புணரும் புள்ளி இறுதி,
யகரமும் உயிரும் வரு வழி, இயற்கை. 21

எ—ரை: .உகரப் பேற்றினை அடையும் புள்ளி யீறுகள், யகரமும் உயிரும் வருமொழி முதலாக வரும் இடத்து, அவ்வுகரம் பெறாது இயல்பாகவே முடியும்.

## அளவுப் பெயர்களும் நிறைப் பெயர்களும் தம்மிற் புணரும் நெறி

164. 'உயிரும் புள்ளியும் இறுதி ஆகி,
அளவும் நிறையும் எண்ணும் சுட்டி
உள எனப்பட்ட எல்லாச் சொல்லும்
தம்தம் கிளவி தம் அகப்பட்ட
முத்தை வரூஉம் காலம் தோன்றின்,
ஒத்தது' என்ப, 'ஏ என் சாரியை'. 22

எ—ரை: உயிர் ஈறும், புள்ளி ஈறும் ஆக வரும் அளவுப் பெயர்களும் நிறைப் பெயர்களும், தமக்கு இனமாகவுள்ள சொற்களாய்த் தம்மிற் குறைந்தனவாயுள்ள சொற்கள் வருமொழிகளாய் வரும் இடத்து 'ஏ' என்னும் சாரியை பெற்று முடிதலைப் பொருந்தும் என்பர் இலக்கணப் புலவர்.

## அவை, 'அரை' என்பதனோடும் புணரும் போது பெறும் விதி

165. 'அரை' என வரூஉம் பால் வரை கிளவிக்கு,
புரைவது அன்றால், சாரியை இயற்கை. 23

எ—ரை: 'அரை' என்ற பொருட்கூற்றை உணர்த்தும் சொல் வரு மொழியாக வரும் இடத்து, 'ஏ' என்னும் சாரியை பெறும் தன்மை பொருந்தாது.

## அவை 'குறை' என்னும் வருமொழியோடும் புணரும் போது எய்தும் விதி

166. 'குறை' என் கிளவி முன் வரு காலை,
நிறையத் தோன்றும் வேற்றுமை இயற்கை. 24

எ–ரை: அவை 'குறை' என்ற சொல்லோடு புணரும் போது வேற்றுமைக்குக் கூறப்பட்ட முடிவாகிய ஒற்றுமிகுதலை இயல்பாகப் பொருந்தும்.

## அவற்றுள், குற்றுகர மொழிக்குச் சாரியை

**167.** குற்றிய லுகரக்கு இன்னே சாரியை 25

எ–ரை: குற்றியலுகர ஈற்று அளவுப் பெயர், நிறைப் பெயர், எண்ணுப் பெயர் முதலியவற்றிற்குக் 'குறை என்ற சொல் வருமொழி ஆயின், 'இன்' என்னும் சாரியை பொருந்தும்.

## 'கலம்' 'அத்து' ச்சாரியை பெறுதல்

**168.** அத்து இடை வரூஉம், 'கலம்' என் அளவே. 26

எ–ரை: 'கலம்' என்னும் அளவுப் பெயர் 'குறை' என்பதனோடு புணரும் இடத்து 'அத்து' என்னும் சாரியை இடையில் வரும்.

## 'பனை' 'கா' என்பன 'இன்' சாரியை பெறுதல்

**169.** 'பனை' என் அளவும், 'கா' என் நிறையும்
நினையும் காலை, இன்னொடு சிவணும். 27

எ–ரை: 'பனை' என்னும் அளவுப் பெயரும் 'கா' என்னும் நிறைப்பெயரும், ஆராயுங் காலத்துக் 'குறை' என்பதனோடு புணரும் இடத்து, 'இன் என்னும் சாரியையோடு பொருந்தும்.

## அளவுப்பெயர், நிறைப்பெயர்களின் மொழி முதல் எழுத்துக்கள்

**170.** அளவிற்கும் நிறையிற்கும் மொழி முதல் ஆகி
உள எனப்பட்ட, ஒன்பதிற்று எழுத்தே; அவைதாம்,
க, ச, த, ப, என்றா; ந, ம, வ, என்றா;
அகர உகரமொடு அவை' என மொழிப. 28

எ–ரை: அளவுப் பெயர், நிறைப் பெயர் ஆகிய இருவகைப் பெயர்களுக்கும் முதலாய் உள என்று சொல்லப்பட்டவை ஒன்பது எழுத்துக்கள்; அவைதாம் 'க', 'ச', 'த', 'ப', 'ந', 'ம', 'வ', 'அ', 'உ' என்பனவாம்.

## 3. புறனடை

### 'தொகை மரபு' என்ற இந்த இயலுக்கு உரிய புறனடை

171. 'ஈறு இயல் மருங்கின் இவை இவற்று இயல்பு' எனக்
கூறிய கிளவிப் பல் ஆறு எல்லாம்
மெய்த் தலைப்பட்ட வழக்கொடு சிவணி,
ஒத்தவை உரிய, புணர் மொழி நிலையே. 29

எ–ரை: உயிரும் புள்ளியும் இறுதியாகிய சொற்கள் வருமொழியோடு கூடி நடக்கும் இடத்து, முடிவு இவையெனக் கூறி முடிக்கப்பட்ட சொற்களினது அவ்வாற்றான் முடியாது நின்ற பல்வேறு முடிவுகள் எல்லாம், உண்மையைத் தலைப்பட்ட வழக்கோடு கூடிப் புணர்மொழி களின் நிலைமைக்கண் பொருந்தினவை உரியவாம்.

### 'யாவர்', 'யாது' என்ற சொற்களின் மரூஉ

172. பலர் அறி சொல் முன் யாவர் என்னும்
பெயரிடை வகரம் கெடுதலும், ஏனை
ஒன்று அறி சொல் முன் யாது என் வினா இடை
ஒன்றிய வகரம் வருதலும், இரண்டும்
மருவின் பாத்தியின் திரியுமன் பயின்றே. 30

எ–ரை: பலரை யறியும் சொல்லாகிய 'அவர்' என்னும் சொல்லின் முன்னர் வருகின்ற 'யாவர்' என்னும் பெயர் இடையில் வகரம் கெட்டு 'யார்' என்று வருதலும்; மற்றைய ஒன்றன் பாற் பெயராகிய 'அது' என்னும் சொல்லின் முன்னர் வருகின்ற 'யாது' என்னும் வினாச் சொல்லின் இடையில் வகரம் தோன்றி 'யாவது' என்று வருதலும் ஆகிய அவை இரண்டும் மரூஉ முடிபின் வகையில் திரிந்து பயிலும்.

## இயல் 6

# உருபியல்

(உருபு எழுத்துக்களின் புணர்ச்சியை உணர்த்தும் இயல்)

## 1. உயிர் ஈற்றுச் சொற்களின் முன் உருபுகள்

### அகராஈறு முதலியவற்றில் வேற்றுமை உருபிற்கு 'இன்' சாரியை

173. அ, ஆ, உ, ஊ, ஏ, ஔ, என்னும்
அப் பால் ஆறன் நிலைமொழி முன்னர்,
வேற்றுமை உருபிற்கு இன்னே சாரியை. 1

எ—ரை: 'அ', 'ஆ', 'உ', 'ஊ', 'ஏ', 'ஔ', என்றும் அப்பகுதியவாகிய ஆறினையும் ஈற்றில் கொண்ட நிலைமொழிகளின் முன்னர் வருகின்ற வேற்றுமை உருபுகளுக்கு இடையில் வரும் சாரியை 'இன்' ஆகும்.

### அகர ஈற்றுப் பன்மைப் பெயர்க்கு 'வற்றுச் சாரியை'

174. பல்லவை நுதலிய அகர இறுபெயர்
வற்றொடு சிவணல் எச்சம் இன்றே. 2

எ—ரை: பன்மை சுட்டிய அகர ஈற்று நிலைமொழிகளுக்கு 'வற்று'ச் சாரியை பொருந்துதல் ஒழிதல் இல்லை.

### 'யா' வென்னும் வினாவிற்கு 'வற்று'ச் சாரியை

175. 'யா' என் வினாவும் ஆயியல் திரியாது. 3

எ—ரை: 'யா' என நின்ற ஆகார ஈற்று வினாப் பெயரும் 'வற்று'ச் சாரியை பெறும் இயல்பிலிருந்து மாறுபடாது.

### உகர ஈற்றுச் சுட்டுக்கு 'அன்' சாரியை

176. சுட்டு முதல் உகரம் அன்னொடு சிவணி
ஒட்டிய மெய் ஒழித்து, உகரம் கெடுமே. 4

எ–ரை: சுட்டெழுத்தை முதலாக உடைய உகர ஈற்றுச் சொல், ‘அன்’ சாரியையோடு பொருந்தித் தான் பொருந்திய மெய்யை நிறுத்தி உகரம் கெடும்.

### ஐகார ஈற்றிற்கு ‘வற்று’ ச் சாரியை

177. சுட்டு முதல் ஆகிய ஐ என் இறுதி
வற்றொடு சிவணி நிற்றலும் உரித்தே. 5

எ–ரை: சுட்டெழுத்தை முதலாக உடைய ஐகார ஈற்றுச் சொல், ‘வற்று’ ச் சாரியை பெற்று நிற்றலும், ‘வற்றோடு’ சில உருபின்கண் ‘இன்’ சாரியை பெற்று நிற்றலும் உடையது.

### ‘யா’ வென்னும் வினா ஈற்று ஐகாரத்திற்கும் ‘வற்று’ ச் சாரியை

178. ‘யா என் வினாவின் ஐ என் இறுதியும்
ஆயியல் திரியாது’ என்மனார் புலவர்;
ஆவயின் வகரம் ஐயொடும் கெடுமே. 6

எ–ரை: ‘யா’ வென்னும் வினாவை முதலாக உடைய ஐகார ஈற்றுச் சொல் ‘வற்று’ ச் சாரியை பெறும் இயல்பில் மாறுபடாது என்பர் இலக்கணப் புலவர்; அவ்விடத்து வகரம் ஐகாரத்தோடும் கூடக் கெடும்.

### ‘நீ’ என்னும் ஈகார ஈற்றிற்கு னகர ஒற்று

179. ‘நீ’ என் ஒரு பெயர் நெடு முதல் குறுகும்;
ஆவயின் னகரம் ஒற்று ஆகும்மே. 7

எ–ரை: ‘நீ’ என்னும் ஈகார ஈற்று முன்னிலை ஒருமைப் பெயர் நெடி தாகிய முதல் குறுகும்; அவ்விடத்து வரும் னகரம் ஒற்றாய் நிற்கும்.

### ஒகார ஈற்றிற்கு ‘ஒன்’ சாரியை

180. ஒகார இறுதிக்கு ஒன்னே சாரியை 8

எ–ரை: ஒகார ஈற்றிற்கு இடையே வரும் சாரியை ‘ஒன்’ ஆகும்.

### அகர ஆகார ஈற்றிற்கு 'அற்று' ச் சாரியை

181. அ, ஆ, என்னும் மரப்பெயர்க் கிளவிக்கு
அத்தொடும் சிவணும் ஏழன் உருபே. 9

எ–ரை: அகர ஆகார ஈற்று மரப்பெயர்களுக்கு ('விள', 'பலா' முதலியன) முன்னே கூறிய 'இன்' சாரியையோடு 'அத்து' ச் சாரியை பொருந்திவரும் ஏழாம் வேற்றுமை உருபு.

## 2. மெய் ஈறுகள்

### 'ஞ', 'ந' மெய் ஈற்றிற்கு 'இன்' சாரியை

182. ஞ, ந, என் புள்ளிக்கு இன்னே சாரியை. 10

எ–ரை: 'ஞ', 'ந' என்ற புள்ளியீறுகட்கு வரும் சாரியை 'இன்' சாரியை.

### வகர ஈற்றுச் சுட்டுக்கு 'வற்று' ச் சாரியை

183. சுட்டு முதல் வகரம் ஐயும் மெய்யும்
கெட்ட இறுதி இயல் திரிபு இன்றே. 11

எ–ரை: சுட்டெழுத்தை முதலாக உடைய வகர ஈற்றுச் சொல், ஐகாரமும், ஐகாரத்தால் ஊரப்பட்ட மெய்யும் கெட்டு வற்றுப் பெற்று முடிந்த 'யாவை' என்னும் ஐகார ஈற்றுச் சொல்லின் இயல்பிலிருந்து மாறுபடாது முடியும்.

### ஏனை வகர ஈற்றிற்கு 'இன்' சாரியை

184. ஏனை வகரம் இன்னொடு சிவணும் 12

எ–ரை: ஒழிந்த உரிச்சொல் வகரம் ('தெவ்' – பகைமை) இன்சாரியையோடு பொருந்தி முடியும். (வேறு வகர ஈற்றுச் சொல் தமிழ் மொழிக்கண் இல்லை என்பதும் இதனால் உணரப்படும்.)

### மகர ஈற்றிற்கு 'அத்து' ச் சாரியை

185. மஃகான் புள்ளி முன் அத்தே சாரியை. 13

எ–ரை: மகரமாகிய புள்ளியீற்றுச் சொல்லின் முன்னர் 'அத்து'ச்சாரியை வரும்.

### சில மகர ஈறு 'இன்' சாரியை பெறல்

186. இன் இடை வரூஉம் மொழியுமார் உளவே. 14

எ–ரை: மகர ஈற்றுச் சொற்களுள் 'இன்' சாரியை இடையில் வந்து முடியும் சொற்களும் உள.

### 'நும்' என்னும் மகர ஈறு 'இன்' சாரியை பெறாமை

187. 'நும்' என் இறுதி இயற்கை ஆகும். 15

எ–ரை: நும் என்னும் முன்னிலைப் பெயரின் மகர ஈறு 'இன்' சாரியை பெறாது இயல்பாய் நிற்கும்.

### 'தாம்', 'நாம்' 'யாம்' என்னும் மகர ஈறுகளும் சாரியை பெறாமை

188. 'தாம் நாம்' என்னும் மகர இறுதியும்
'யாம்' என் இறுதியும் அதன் ஓரன்ன;
ஆ எ ஆகும், யாம் என் இறுதி;
ஆவயின் யகர மெய் கெடுதல் வேண்டும்;
ஏனை இரண்டும் நெடு முதல் குறுகும். 16

எ–ரை: 'தாம்' 'நாம்' என்னும் மகர ஈற்றுச் சொற்களும், 'யாம் என்னும் மகர ஈற்றுச் சொல்லும், முன்நும்' என்னும் சொல்லிற்குக் கூறியது போலவே சாரியை பெறாது முடியும்; 'யாம்' என்ற சொல்லில் உள்ள 'ஆ' என்ற எழுத்து 'எ' என்ற எழுத்து ஆகும்; அங்கு நின்ற 'ய' கர ஒற்றுக் கெட்டு நிற்கும்; 'தாம்' 'நாம்' என்ற ஏனை இரண்டும் நெடுமுதல் குறுகித் 'தம்', 'நம்' என்று நிற்கும்,

### 'எல்லாம்' என்னும் மகர ஈறு, 'வற்று' 'உம்' என்ற சாரியைகளைப் பெறுதல்

189. 'எல்லாம்' என்னும் இறுதி முன்னர்,
'வற்று' என் சாரியை முற்றத் தோன்றும்;
உம்மை நிலையும் இறுதியான. 17

எ—ரை: 'எல்லாம்' என்னும் மகர ஈற்றுச் சொல் முன் வேற்றுமை உருபுகள் வரின், இடையில் 'வற்று' என்னும் சாரியை முழுதும் தோன்றும்; இறுதிக்கண் உம்மை நிலை பெறும்.

## அவ் 'எல்லாம்' என்ற இறுதி உயர்திணையில் 'நம்' சாரியை பெறுதல்

190. உயர்திணை ஆயின் நம் இடை வருமே. 18

எ—ரை: 'எல்லாம்' என்னும் 'சொல் உயர் திணையாய் நிற்கும் இடத்து 'நம்' என்னும் சாரியை இடைநின்று புணரும்.

## 'எல்லாம்' என்னும் மகர ஈற்று உயர்திணைப் பெயர்களுக்கு முடிபு

191. 'எல்லாரும் என்னும் படர்க்கை இறுதியும்,
எல்லீரும் என்னும் முன்னிலை இறுதியும்,
ஒற்றும் உகரமும் கெடும், ' என மொழிப
நிற்றல் வேண்டும் ரகரப் புள்ளி;
உம்மை நிலையும் இறுதியான;
தம் இடை வரூஉம், படர்க்கை மேன
நும் இடை வரூஉம், முன்னிலை மொழிக்கே. 19

எ—ரை: 'எல்லாரும்' என்னும் படர்க்கை உணர்த்தும் மகர ஈற்று உயர்திணைச் சொல்லும், 'எல்லீரும்' என்னும் முன்னிலை உணர்த்தும் மகர ஈற்று உயர்திணைச் சொல்லும், மகர ஒற்றும் அதன் முன் நின்ற உகரமும் கெட்டு முடியும் என்று மொழிவர்; ஈற்றில் அவ்வுகரம் ஏறி நின்ற ரகர ஒற்றுக் கெடாது நிற்றலை விரும்பும் ஆசிரியன்; அவ்விரு மொழியின் இறுதிக் கண்ணும் 'உம்' என்னும் சாரியை நிலைபெறும்; படர்க்கைச் சொல்லுக்குத் 'தம்' என்னும் சாரியை இடைவரும்; முன்னிலைச் சொல்லிற்கு 'நும்' என்னும் சாரியை இடைவரும்.

## னகர ஈற்றில் சிலவற்றிற்கு முடிபு

192. 'தான், யான்' என்னும் ஆயிர் இறுதியும்
மேல் முப் பெயரொடும் வேறுபாடு இலவே. 20

எ–ரை: 'தான்', 'யான்' என்னும் அவ்விரண்டு னகர ஈற்றுச் சொற்களும் மேற் கூறப்பட்ட 'தாம்', 'யாம்', 'நாம்' என்னும் முப்பெயர்களோடு வேறுபாடு உடையன அல்ல; 'தான்' என்பது 'தன்' எனக் குறுகியும், 'யான்' என்பதன் கண் ஆகாரம் எகரமாய், யகர ஒற்றுக் கெட்டும் முடியும்.

193. 'அழனே, புழனே, ஆயிரு மொழிக்கும்
அத்தும் இன்னும் உறழத்தோன்றல்
ஒத்தது' என்ப, உணருமோரே. 21

எ–ரை: 'அழன்' 'புழன்' என்னும் அவ்விரண்டு மொழிகளுக்கும், 'அத்து' என்னும் சாரியையும், 'இன்' என்னும் சாரியையும், உறழ்ந்து தோன்றுதல் ஒத்தது என்று உணர்ந்தோர் உரைப்பர்.

## 3. முற்றுகரக் குற்றுகர ஈறுகள்

### 'ஏழு' என்னும் எண்ணுப் பெயர்க்கு 'அன்' சாரியை

194. 'அன் என் சாரியை ஏழன் இறுதி
முன்னர்த் தோன்றும் இயற்கைத்து', என்ப. 22

எ–ரை: 'ஏழு' என்னும் சொல்லின் இறுதி முன்னர் வேற்றுமை உருபு வரின், இடையில் 'அன்' சாரியை தோன்றும் இயல்பு உளது.

### குற்றுகர ஈற்றிற்கு 'இன்' சாரியை

195. குற்றியலுகரத்து இறுதி முன்னர்,
முற்றத் தோன்றும், 'இன்' என் சாரியை. 23

எ–ரை: குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட சொற்களின் முன்னர் வேற்றுமை உருபு வரின், 'இன்' சாரியை தோன்றும்.

### சில குற்றுகர ஈறுகள் இரட்டித்தல்

196. நெட்டெழுத்து இம்பர் ஒற்று மிகத் தோன்றும்
அப் பால் மொழிகள் அல்வழியான. 24

எ–ரை: நெட்டெழுத்தின் பின்னர் வருகின்ற குற்றுகரங்களுக்கு, ஒற்று மிகத் தோன்றாத க, ச, த, ப–க்கள் ஈறாகிய மொழிகள் அல்லாத இடத்து இனவொற்றுமிகத் தோன்றும்.

## இரட்டித்து முடிவன சாரியை பெறாமை

197. 'அவைதாம்,
இயற்கைய ஆகும் செயற்கைய' என்ப. 25

எ–ரை: அவ்வாறு இனவொற்று மிகும் சொற்கள் சாரியை பெறாது இயல்பாய் நிற்கும் தன்மையை உடையன என்பர்.

## குற்றுகர ஈற்று எண்ணுப் பெயர்க்கு 'அன்' சாரியை

198. எண்ணின் இறுதி அன்னொடு சிவணும் 26

எ–ரை: குற்றுகர ஈற்று எண்ணுப் பெயர்கள் 'அன்' சாரியை பொருந்தும்.

## 'ஒரு பஃது' முதலிய குற்றுகர ஈறுகள் 'ஆன்' சாரியையும் பெறுதல்

199. ஒன்று முதல் ஆக, பத்து ஊர்ந்து வரூஉம்
எல்லா எண்ணும் சொல்லும் காலை,
ஆன் இடை வரினும் மானம் இல்லை;
அஃது என் கிளவி ஆவயின் கெடுமே;
உய்தல் வேண்டும் பஃகான் மெய்யே. 27

எ–ரை: பத்தால் தொடரப் பெறும் ஒன்று முதலான எல்லா எண்களையும் வேற்றுமை உருபிற்கு முன்னர்ச் சொல்லும் காலத்து, 'ஆன்' சாரியை இடையில் வரினும் குற்றம் இல்லை; அப்போது 'அஃது' என்னும் சொல் கெடும்; பகர ஒற்று நிற்கும்.

## 'யாது', 'அஃது' என்னும் குற்றுகர ஈறுகளுக்கு 'அன்' சாரியை

200. 'யாது' என் இறுதியும், சுட்டு முதல் ஆகிய
ஆய்த இறுதியும், அன்னொடு சிவணும்;
ஆய்தம் கெடுதல் ஆவயினான. 28

எ–ரை: 'யாது' என்னும் குற்றுகர இறுதியும், சுட்டெழுத்தை முதலாகவும், ஆய்தத்தை இடையினதாகவும் கொண்ட 'அஃது' என்னும் ஆய்தத் தொடர் மொழிக் குற்றியலுகர இறுதியும் 'அன்' சாரியையோடு பொருந்தும் அவ்விடத்து வந்த ஆய்தம் கெடும்.

## குற்றுகர ஈற்றுத் திசைப்பெயர் ஏழன் உருபிற்குச் சாரியை பெறாமலும் வருதல்

201. ஏழன் உருபிற்குத் திசைப் பெயர் முன்னர்
சாரியைக் கிளவி இயற்கையும் ஆகும்,
ஆவயின் இறுதி மெய்யொடும் கெடுமே. 29

எ–ரை: திசைப் பெயர்களின் முன்னர் ஏழாம் வேற்றுமை யுருபு வரின், முற்கூறிய 'இன்' சாரியை நின்று முடிதலே அன்றி நில்லாது இயல்பாகவும் முடியும்; அவ்விடத்துக் குற்றியலுகரத் திறுதி அதன் மெய்யெழுத்துடனும் கெடும்.

## 4. புறனடை

202. புள்ளி இறுதியும் உயிர் இறு கிளவியும்
சொல்லிய அல்ல ஏனைய எல்லாம்,
தேரும் காலை, உருபொடு சிவணி,
சாரியை நிலையும் கடப்பாடு இலவே. 30

எ–ரை: மெய்யீற்றுச் சொற்களுள்ளும், உயிர் ஈற்றுச் சொற்களுள்ளும், சொல்லப் பெற்றவற்றை நீக்கிய எஞ்சிய சொற்கள் எல்லாம், ஆராயும் இடத்து உருபோடு பொருந்தும்போது சாரியையோடு நிலைபெற வேண்டும் என்னும் கடப்பாடு இல்லை.

## இயல் – 7

# உயிர் மயங்கியல்

(உயிர் ஈறுகளின் புணர்ச்சி இலக்கணத்தை
விரித்துரைக்கும் இயல்)

## 1. அகர ஈறு

### அல்வழியில் அகர ஈறுடைய பெயர்கள் புணரும் நெறி

203. அகர இறுதிப் பெயர் நிலை முன்னர்,
வேற்றுமை அல் வழி, க, ச, த, ப, தோன்றின்,
தம்தம் ஒத்த ஒற்று இடை மிகுமே. 1

எ–ரை: அகர ஈறு பெயராக நிலைபெற்றிருப்பதன் முன்னர், வேற்றுமை அல்லாத இடத்துக் க, ச, த, ப, என்னும் எழுத்துக்களை முதலாக உடைய சொற்கள் வரின், பொருந்தும் இடங்களில் அவ்வவற்றின் மெல்லின எழுத்துக்கள் (ங், ஞ், ந், ம்) மிகுந்து தோன்றும்.

### அகர ஈற்று வினைச்சொல், இடைச்சொல்முன்

204. 'வினை எஞ்சு கிளவியும் உவமக் கிளவியும்
'என' என் எச்சமும், சுட்டின் இறுதியும்,
'ஆங்க' என்னும் உரையசைக் கிளவியும்,
ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே. 2

எ–ரை: அகர ஈற்று வினையெச்சமும், அகர ஈற்று உவம உருபும், 'என' என்னும் எச்சமும், அகரச் சுட்டும் 'ஆங்க' என்னும் உரையசைச் சொல்லும், முன் நூற்பாவில் கூறப்பட்ட வல்லெழுத்து மிக்கு முடியும்.

### அகரச் சுட்டின் முன் 'ஞ', 'ந', 'ம'

205. சுட்டின் முன்னர் ஞ, ந, ம, தோன்றின்,
ஒட்டிய ஒற்று இடை மிகுதல் வேண்டும். 3

எ—ரை: அகரச் சுட்டின் முன்னர், 'ஞ', 'ந', 'ம', முதலாகிய மொழிகள் வருமாயின், அவற்றை ஒட்டிய ஒற்றுக்கள் இடையில் மிகுதல் வேண்டும்.

## அகரச் சுட்டின் முன் 'ய' 'வ'

**206. ய, வ, முன் வரினே, வகரம் ஒற்றும்.** 4

எ—ரை: அகரச் சுட்டின் முன்னர், 'ய', 'வ' முதலாகிய மொழிகள் வருமாயின், இடையே வகர ஒற்று மிகும்.

## அசரச் சுட்டின் முன் உயிர் எழுத்துக்கள்

**207. உயிர் முன் வரினும், ஆயியல் திரியாது.** 5

எ—ரை: அகரச் சுட்டின் முன்னர் உயிர் எழுத்துக்களை முதலாகிய மொழிகள் வருமாயின், முன்னே கூறப்பட்ட வகர ஒற்று மிகுதலாகி ய அவ்வியல்பு வேறுபடாது தோன்றும்.

## அகரச் சுட்டு செய்யுளில் பெறும் வேறு விதி

**208. நீட வருதல் செய்யுளுள் உரித்தே** 6

எ—ரை: அகரச் சுட்டு செய்யுளில் 'ஆ' என்று நீண்டு வருதலை உடையது.

## 'சாவ' என்னும் சொல்

**209. 'சாவ' என்னும் 'செய' என் எச்சத்து**
**இறுதி வகரம் கெடுதலும் உரித்தே.** 7

எ—ரை: 'சாவ' என்ற செய என்னும் வாய்பாட்டு அகர ஈற்று வினையெச்சத்தின் இறுதியில் உள்ள அகரமும், அதனால் பற்றப்பட்ட வகரமும் கெடுதலும் உண்டு; கெடாது நிற்றலும் உண்டு. (கெடாது நிற்றலே பெரும்பான்மை வழக்கு).

## இயல்பு முடிபு பெறும் அகர ஈற்றுச் சொற்கள்

210. 'அன்ன' என்னும் உவமக் கிளவியும்,
அண்மை சுட்டிய விளிநிலைக் கிளவியும்,
'செய்ம்மன' என்னும் தொழில் இறு சொல்லும்,
ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்,
'செய்த' என்னும் பெயர் எஞ்சு கிளவியும்,
'அம்ம' என்னும் உரைப் பொருட் கிளவியும்,
பலவற்று இறுதிப் பெயர்க்கொடை, உளப்பட, –
அன்றி அனைத்தும் இயல்பு என மொழிப. 8

எ–ரை: (1) 'அன்ன' என்னும் உவம உருபும், (2) அண்மை விளிச் சொற்களும், (3) 'செய்ம்மன' என்னும் வினைமுற்றுச் சொல்லும், (4) ஏவலோடு பொருந்திய வியங்கோள் வினைமுற்றுச் சொற்களும், (5) 'செய்த' என்னும் பெயரெச்சச் சொல்லும், (6) 'செய்யிய' என்னும் வினை யெச்சச் சொல்லும், (7) 'அம்ம' எனவரும் உரையசைச் சொல்லும் (கேள் என்ற பொருளில் வரும்), (8) பலவற்றை உணர்த்தும் அகர ஈற்றுப் பெயர்களாகிய 'பல' 'சில' முதலியவற்றைச் சேர்த்தல் உளப்பட அவ்வெல்லாச் சொல்லும் நிலைமொழியாய் நிற்க' வருமொழி முதலில் 'க', 'ச', 'த', 'ப' தோன்ற வரும் புணர்ச்சி, இயல்பு புணர்ச்சியாம் என்று கூறுவர்.

## 'வாழிய' என்னும் சொல் *

211. 'வாழிய' என்னும் சேயென் கிளவி
இறுதி யகரம் கெடுதலும் உரித்தே; 9

எ–ரை: 'வாழிய' என்னும், வாழுங்காலம் நீண்டகாலம் ஆகுக என்ற பொருளை உணர்த்தும் சொல், இறுதியில் உள்ள அகரமும், அதனால் பற்றப்பட்ட யகரமும் கெட்டு முடிதலும் உண்டு. (கெடாது முடிதலும் உண்டு)

---

* "வாழிய என்னும் செயவென் கிளவி" என்ற பாடமும் உண்டு. "சேயென் கிளவி" என்றதனான் அம்முடிவு இவ் "வாழிய" என்பதற்கு ஏவல் கண்ணாத நிலைய்தென்பது விளக்க நின்றது (இளம்பூரணர் உரை)

### 'அம்ம' என்னும் சொல்லுக்கு மற்றொரு விதி

**212.** உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார். 10

எ–ரை: 'கேள்' என்னும் பொருளை உடைய 'அம்ம' என்னும் உரையசைச் சொல், தன் ஈற்று அகரம் இயல்பாக நிற்றலே யன்றி, ஆகாரமாகி நீண்டு ('அம்மா') முடிதலையும் நீக்க மாட்டார்கள்.

### 'பல' என்னும் சொல்லிற்குச் செய்யுள் முடிபு

**213.** பலவற்று இறுதி நீடு மொழி உளவே –
செய்யுள் கண்ணிய தொடர்மொழியான. 11

எ–ரை: 'பல' என்னும் சொல்லினது இறுதியில் நிற்கும் அகரம், செய்யுட்கண் பொருந்திய தொடர்மொழிகளில், நீளுகின்ற மொழிகளும் உள்ளன. * (இப் 'பல' என்பது நீளும் வழி, வருமொழியாக வருவது 'சில' என்பதே என்று கொள்ளவேண்டும் என்பர் இளம்பூரணர்).

### 'பல' 'சில' என்பன திரிபு முடிவும் பெறல்

**214.** தொடர் அல் இறுதி தம் முன் தாம் வரின்,
லகரம் றகர–ஒற்று ஆதலும் உரித்தே. 12

எ–ரை: தொடர்மொழி, அல்லாத தனிச் சொற்களாகிய 'பல', 'சில' என்னும் அகர ஈற்றுச் சொற்கள் தம்முன்னே தாம் வரும் வழி, 'ல' ஈறு 'ற' ஈறாகத்திரிதலும் உடையன.

### மேலும் ஒரு முடிபு

**215.** வல்லெழுத்து இயற்கை உறழத் தோன்றும் 13

---

* "இதன் சொல்நிலை பல சில என்னும் செவ்வெண்" (இளம்பூரணர்), செவ்வெண் எண்ணும்மை தொக்கு வருவது என்பது பாவாணர் குறிப்பு. ('பலவும் சிலவும்' என்பது பொருள்).

எ—ரை: மேற்கூறப்பட்ட 'பல', 'சில' என்னும் இரண்டு சொற்களுக்கும், அகர ஈற்றுப் பொது விதியிற் கூறப்பட்ட வல்லெழுத்து மிகுதியது இயல்பு மிகுதலும் மிகாமையும் ஆகிய உறழ்ச்சி முடிவும் தோன்றும்.

## வேற்றுமையில் அகர ஈறு

**216.** வேற்றுமைக்கண்ணும் அதன் ஓரற்றே. 14

எ—ரை: அகர ஈற்று வேற்றுமைப் புணர்ச்சிக் கண்ணும் முற்கூறப்பட்ட அல்வழி முடிபோடு ஒருதன்மைத்தாகி, 'க்', 'ச்', 'த்', 'ப்' முதலாகிய மொழிகள் வரும்வழி தத்தம் ஒற்று இடையில் மிக்கு முடியும்.

## மரப் பெயர்க்கு வேறு விதி

**217.** மரப்பெயர்க் கிளவி மெல்லெழுத்து மிகுமே. 15

எ—ரை: அகர ஈற்று மரப் பெயர் மெல்லெழுத்து மிக்கு முடியும்.

## 'மக' என்னும் பெயர் ஏற்கும் முடிபுகள்

**218.** மகப்பெயர்க் கிளவிக்கு இன்னே சாரியை. 16

எ—ரை: 'மக' என்னும் அகர ஈற்றுச் சொல்லுக்கு 'இன்' சாரியை யே வரும்.

**219.** அத்து அவண் வரினும், வரை நிலை இன்றே. 17

எ—ரை: மேற்கூறிய 'இன்' சாரியையே அன்றி, 'அத்து' என்னும் சாரியை அம் 'மக' என்னும் சொல்லுக்கு வந்து முடிதலும் நீக்கும் நிலைமையை உடையது அன்று.

## அகர ஈற்றுப் பன்மைச் சொற்கள்

**220.** பலவற்று இறுதி உருபு இயல் நிலையும். 18

எ—ரை: பலவற்றைக் குறிக்கும் அகர இறுதிச் சொற்கள், உருபியலின்கண்

'வற்று'ச் சாரியை பெற்றுப் புணர்ந்தாற் போலப் பொருட் புணர்ச்சிக்கண்ணும் பெறும்.

## 2. ஆகார ஈறு

### அல்வழியில் ஆகார ஈற்றுப் பெயர் *

221. ஆகார இறுதி அகர இயற்றே. 19

எ–ரை: ஆகார ஈற்றுச் சொற்கள் அகர ஈற்றுச் சொற்களுக்குச் சொல்லப்பட்ட தத்தம் ஒற்றுப் பெற்று முடிதலாகிய முடிவை உடையன.

### ஆகார ஈற்று வினை

222. 'செய்யா என்னும் வினை எஞ்சு கிளவியும்
அவ் இயல் திரியாது' என்மனார் புலவர். 20

எ–ரை: 'செய்யா' என்னும் வாய்பாட்டில் அமைந்த வினையெச்சச் சொற்களும், முற்கூறியவாறே வல்லெழுத்து மிக்கு முடியும் இயல்பில் மாறுபடாது என்று புலவர் கூறுவர்.

### உம்மைத் தொகையில் வரும் ஆகார ஈறு

223. உம்மை எஞ்சிய இரு பெயர்த் தொகைமொழி
மெய்ம்மையாக அகரம் மிகுமே. 21

எ–ரை: உம்மை தொக்கு நின்ற இருபெயராகிய தொகைச் சொற்கள், மெய்யாக நிலைமொழியீற்றில் அகரம் மிகுந்து முடியும்.

---

* இந்நூற்பா 203 ஆம் நூற்பாவின் பொருளை மாட்டேற்றிக் கூறியது.

## இயல்பாகும் ஆகார ஈற்றுச் சொற்கள்

224. 'ஆவும், மாவும், விளிப்பெயர்க் கிளவியும்,
யா என் வினாவும், பலவற்று இறுதியும்,
ஏவல் குறித்த உரையசை மியாவும்,
தன் தொழில் உரைக்கும் வினாவின் கிளவியொடு,
அன்றி அனைத்தும் இயல்பு' என மொழிப. 22

எ–ரை: (1) 'ஆ', 'மா' என்னும் சொற்களும், (2) ஆகார ஈற்று விளிப்பெயர்களும், (3) 'யா' என்னும் வினைப் பெயரும், (4) பலவற்றைக் குறிக்கும் ஆகார ஈற்று வினைச் சொற்களும், (5) முன்னிலை ஏவல் வினையைக் கருதிய 'மியா' என்னும் உரையசைச் சொல்லும், (6) கூறுவோன் தொழிலைக் குறிக்கும் ஆகார ஈற்று வினாக்களும் ஆகிய அவ்வனைத்தும் இயல்பாகி முடிவனவாம்.

## வேற்றுமையில் ஆகார ஈறு*

225. வேற்றுமைக்கண்ணும் அதன் ஓரற்றே. 23

எ–ரை: ஆகார ஈற்றுப் பெயர், அல்வழியில் மட்டுமின்றி, வேற்றுமையிலும் அகர விறுதிப் பெயரோடு ஒரு தன்மை உடையதாய், வல்லெழுத்து வந்த இடத்து அவ்வல்லெழுத்து மிக்கு முடியும்.

## குறிற் கீழ் வரும் ஆகார ஈறும், தனி மொழி ஆகார ஈறும்

226. குறியதன் முன்னரும், ஓரெழுத்து மொழிக்கும்,
அறியத் தோன்றும், அகரக் கிளவி. 24

எ–ரை: குற்றெழுத்தின் முன்னர் உள்ள ஆகார ஈற்றுச் சொற்களுக்கும், ஆகார ஈற்று ஓரெழுத்து ஒருமொழிக்கும் அகர எழுத்துப் பேறு விளங்கத் தோன்றும்.

---

* இந்நூற்பா, 203 ஆம் நூற்பாவின் பொருளை மாட்டேற்றிக் கூறியது.

## 'இரா' என்னும் சொல்

227. 'இரா' என் கிளவிக்கு அகரம் இல்லை. 25

எ–ரை: 'இரா' என்னும் ஆகார ஈற்றுச் சொல்லிற்கு முற்கூறப்பட்ட அகர எழுத்துப் பேறு இல்லை; வல்லெழுத்துப் பெற்றே முடியும்.

## 'நிலா' என்னும் சொல்

228. 'நிலா' என் கிளவி அத்தொடு சிவணும் 26

எ–ரை: 'நிலா' என்னும் சொல், 'அத்து' என்னும் சாரியையோடு பொருந்தி முடியும்.

## ஆகார ஈற்றை உடைய சிலமரப் பெயர்கள்

229. யா–மரக்கிளவியும், பிடாவும், தளாவும்,
ஆ முப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே. 27

எ–ரை: 'யா' என்னும் மரப் பெயர்ச் சொல்லும் 'பிடா', 'தளா' என்னும் சொற்களுமாகிய அம் முப்பெயர்களும் வல்லெழுத்து மிகாது, மெல்லெழுத்து மிக்கு முடியும்.

## அம்மரப் பெயர்களுக்கு மேலும் ஒரு முடிவு

230. வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை. 28

எ–ரை: அம்மரப்பெயர்கள் மூன்றிற்கும் மெல்லெழுத்துக்கள் மிக்கு முடியாது. வல்லெழுத்துக்கள் மிக்கு முடியினும் குற்றம் இல்லை.

## 'மா' என்னும் மரப்பெயர்; 'ஆ', 'மா' என்னும் விலங்கின் பெயர்கள்

231. மா–மரக்கிளவியும், ஆவும், மாவும்,
ஆ முப் பெயரும் அவற்று ஓரன்ன;

அகரம் வல்லெழுத்து அவை அவண் நிலையா;
னகரம் ஒற்றும் ஆவும் மாவும். 29

எ–ரை: 'மா' என்னும் மரப்பெயர்ச் சொல்லும், 'ஆ' 'மா' என்னும் விலங்குப் பெயர்ச் சொற்களும் ஆகிய அம் முப்பெயர்ச் சொற்களும், 'யா' 'பிடா', 'தளா' என்பவற்றோடு ஒரு தன்மை உடையனவாய், மெல்லெழுத்துப் பெற்று முடியும். 'ஆ' 'மா' என்னும் இரண்டிலும் அகரமும், வல்லெழுத்தும் ஆகிய அவை நிலையாதிருக்க, னகர ஒற்றுப் பெற்று முடியும்.

## 'ஆன்' என்னும் சொல்

232. ஆன ஒற்று அகரமொடு நிலை இடன் உடைத்தே. 30

எ–ரை: 'ஆன்' என்னும் சொல், அகர ஒற்றுப் பெற்று நிற்கும் இடமும் ('ஆன') உண்டு.

233. ஆன் முன் வரூஉம் ஈகார பகரம்
தான் மிகத் தோன்றிக் குறுகலும் உரித்தே. 31

எ–ரை: 'ஆன்' என்னும் நிலைமொழியின் முன், வரு மொழியாய் வரும் ஈகார பகரம் ('பீ') தான்மிகுந்து நிற்ப, நிலைமொழி னகரத்திற்குக் கேடு தோன்றி, ஈகாரம் இகரமாகக் குறுகுதலும் உரியது.

## சிலவற்றிற்குச் செய்யுளின் கண் உகரப் பேறு

234. குறியதன் இறுதிச் சினை கெட, உகரம்
அறிய வருதல் செய்யுளுள் உரித்தே. 32

எ–ரை: குற்றெழுத்தின் பின்னர் வரும் ஆகார இறுதியின் சினையாகிய அகரம் கெட, உகரம் விளங்க வருதல் செய்யுளின்கண் உரியது.

# 3. இகர ஈறு

## வேற்றுமையில் இகர ஈற்றுப் பெயர்

235. இகர இறுதிப் பெயர்நிலை முன்னர்,
வேற்றுமை ஆயின், வல்லெழுத்து மிகுமே. 33

எ–ரை: இகரத்தை ஈற்றிற் கொண்ட பெயர்ச் சொல்லின் முன்னர், 'க', 'ச', 'த', 'ப' – ஆகியவற்றை முதலாகக் கொண்ட சொற்கள் வந்த இடத்து, வேற்றுமைப் புணர்ச்சி யாயின், தமக்குப் பொருந்திய வல்லெழுத்துக்கள் மிகுந்து முடியும்.

## இகர ஈற்று வினைச்சொல்லும், இடைச்சொல்லும்

236. 'இனி, அணி' என்னும் காலையும் இடனும்,
வினை எஞ்சு கிளவியும், சுட்டும், அன்ன. 34

எ–ரை: 'இனி' என்றும், 'அணி' என்றும் சொல்லப்படுகின்ற காலத்தையும் இடத்தையும் உணர்த்தும் இடைச்சொற்களும், இகர ஈற்று வினைச் சொற்களும், இகர ஈற்றுச் சுட்டும் மேற்கூறியவாறே வல்லெழுத்து மிக்கு முடியும்.

## 'இன்றி' என்னும் சொல்லுக்குரிய செய்யுள் விதி

237. 'இன்றி' என்னும் வினை எஞ்சு இறுதி
நின்ற இகரம் உகரம் ஆதல்
தொன்று இடல் மருங்கின் செய்யுளுள் உரித்தே. 35

எ–ரை: 'இன்றி' என்னும் வினை யெச்சத்தின் இறுதியில் நின்ற இகரம் உகரமாய்த் திரிந்து முடிதல், தொன்றுதொட்டு வரும் செய்யுளுள் உள்ளது.

## சுட்டுப் பெயர்

238. சுட்டின் இயற்கை முன் கிளந்தற்றே * 36

எ–ரை: இகர ஈற்றுச் சுட்டின் இயல்பு, முன் அகர ஈற்றுச் சுட்டிற்குச் சொல்லப்பட்ட தன்மையை உடையது. (மென்கணம் வரும் வழி மெல்லெழுத்து மிக்கு முடிதல், இடைக்கணம் வரும் வழியும், உயிர்க்கணம் வரும்வழியும், நிலைமொழி வகரம் பெற்றும், செய்யுளின்கண் சுட்டு நீண்டும் முடிதல் – முன்னே அகர ஈற்றிற்குச் சொல்லப்பட்டவை.)

---

*நூற்பா 205, 206, 207, 208 ஆகியவற்றின் பொருண்மை மாட்டேற்றிக் கூறப்பட்டது.

## 'தூணி' முன் 'பதக்கு'

239. பதக்கு முன் வரினே தூணிக் கிளவி
முதல் கிளந்து எடுத்த வேற்றுமை இயற்றே. 37

எ–ரை: இகர ஈற்று அளவுப் பெயர்களுள், 'தூணி' என்னும் சொல்லின் முன் 'பதக்கு' என்னும் சொல் வருமொழியாக வரும் இடத்து, முன்னே கூறப்பட்ட வேற்றுமை முடிபின் இயல்பைக் கொண்டு (வல்லெழுத்து மிக்கு) முடியும்.

## 'நாழி' முன் 'உரி'

240. உரி வரு காலை, நாழிக் கிளவி
இறுதி இகரம் மெய்யொடும் கெடுமே
டகாரம் ஒற்றும் ஆவயினான. 38

எ–ரை: 'உரி' என்னும் சொல் வருமொழியாக வருங்காலத்து, 'நாழி' என்னும் சொல், தன் ஈற்றில் நின்ற இகரம் தான் ஊர்ந்து நின்ற மெய்யோடும் கெடும்; அவ்விடத்து டகரம் மெய்யாய் வரும்.

## 'பனி' என்னும் காலப்பெயர்

241. பனி என வரூஉம் கால வேற்றுமைக்கு
அத்தும் இன்னும் சாரியை ஆகும். 39

எ–ரை: கால வேறுபாட்டை உணர்த்தும் 'பனி' என்னும் சொல்லிற்கு 'அத்து'ம், 'இன்'னும் சாரியைகளாக வரும்.

## 'வளி' என்னும் பூதப்பெயர்

242. 'வளி என வரூஉம் பூதக் கிளவியும்
அவ் இயல் நிலையல் செவ்விது' என்ப. 40

எ–ரை: 'வளி' என்னும் பூதத்தை உணர்த்தும் சொல்லிற்கும் முற்கூறப் பட்டவாறே 'அத்தும்' 'இன்'னும் சாரியைகளாக வரும் அவ்வியல்பு நிலைபெறுதல் தக்கது என்பர் புலவர்.

## 'உதி' என்னும் மரப்பெயர்

243. உதி–மரக்கிளவி மெல்லெழுத்து மிகுமே. 41

எ—ரை: 'உதி' என்னும் மரத்தை உணர்த்தும் சொல், வல்லெழுத்து மிக்கு முடியாது மெல்லெழுத்து மிக்கு முடியும்.

## 'புளி' என்னும் மரபுப் பெயர்

**244.** புளி—மரக்கிளவிக்கு அம்மே சாரியை. 42

எ—ரை: 'புளி' என்னும் மரத்தினை உணர்த்தும் சொல்லிற்கு 'அம்' என்னும் சாரியையே வரும்.

## 'புளி' என்னும் சுவைப்பெயர்

**245.** ஏனைய புளிப் பெயர் மெல்லெழுத்து மிகுமே. 43

எ—ரை: மரப்பெயர் அல்லாத 'புளி' என்னும் சுவைப் பெயர் வல்லெழுத்து மிகாது மெல்லெழுத்து மிகுந்து முடியும்.

## 'புளி' சுவைப் பெயர்க்கு மேலும் ஒரு முடிபு

**246.** வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை;
ஒல்வழி அறிதல், வழக்கத்தான. 44

எ—ரை: 'புளி' என்னும் சுவை யுணர்த்தும் பெயர் வல்லெழுத்து மிகுந்து முடியினும் குற்றம் இல்லை; அது பொருந்தும் இடத்தை வழக்கைக் கண்டு அறிதல் வேண்டும்.

## இகர ஈற்று நாட்பெயர்கள்

**247.** நாள் முன் தோன்றும் தொழில்நிலைக் கிளவிக்கு
ஆன் இடை வருதல் ஐயம் இன்றே. 45

எ—ரை: இகர ஈற்றை உடைய நாட்பெயர்களுக்கு முன்னே தோன்றும், தொழில் நிலைச் சொற்கள் ஆகிய வினைச்சொற்களுக்கு இடையே 'ஆன்' சாரியை வருதலில் ஐயம் இல்லை.

## இகர ஈற்றுத் திங்கட்பெயர்கள்

**248.** திங்கள் முன் வரின் இக்கே சாரியை. 46

எ–ரை: இகர ஈற்றை உடைய திங்கட்பெயர்கள் (மாதப்பெயர்கள்) வினைச்சொற்களோடு சேருங்கால் இடையே 'இக்கு'ச் சாரியை வரும்.



## 4. ஈகார ஈறு

### அல்வழியில் ஈகார ஈற்றுப்பெயர்

**249.** ஈகார இறுதி ஆகார இயற்றே. 47

எ–ரை: ஈகாரத்தை ஈற்றில் உடையசொற்கள் அல்வழியில், ஆகார ஈற்று அல்வழிக்குக் கூறப்பெற்ற தன்மையை உடையனவாய், வல்லெழுத்து முதன்மொழி வரும்போது அவ்வெழுத்து மிக்கு முடியும்.

### 'நீ', 'மீ' முதலிய பெயர்கள்

**250.** 'நீ' என் பெயரும், இடக்கர்ப் பெயரும்,
'மீ' என மரீஇய இடம் வரை கிளவியும்
ஆவயின் வல்லெழுத்து இயற்கை ஆகும். 48

எ–ரை: 'நீ' என்னும் முன்னிலை ஒருமைப்பெயரும், 'பீ' என்னும் இடக்கர்ப் பெயரும், 'மீ' என்னும் இடத்தை உணர்த்தும் மரூஉப் பெயரும், புணரும் இடத்து வல்லெழுத்துப் பெறாது இயல்பு முடிவை ஏற்கும்.

### 'மீ' என்னும் சொல்லிற்கு மேலும் ஒரு முடிபு

**251.** 'இடம் வரை கிளவி முன் வல்லெழுத்து மிகூஉம்
உடன் நிலை மொழியும் உள' என மொழிப. 49

எ–ரை: இடத்தை வரைந்து உணர்த்தும் 'மீ' என்னும் சொல்லின் முன்னர் இயல்பாக முடிதலே அன்றி, வல்லெழுத்து மிகுதலைப் பெறும் உடனிலைச் சொற்களும் உள்ளன என்று கூறுவர்.

### வேற்றுமையில் ஈகார ஈற்றுப்பெயர்

**252.** வேற்றுமைக்கண்ணும் அதன் ஓரற்றே. 50

எ–ரை: ஈகார, ஈற்றுப் பெயர்கள் வேற்றுமையிலும், அல்வழிக்கு முன்னே ஓதப்பட்டபடி வல்லெழுத்து முதன் மொழி வரும் போது வல்லெழுத்து மிக்கு முடியும்.

## 'நீ' என்னும் முன்னிலை ஒருமைப்பெயர்

**253.** 'நீ' என் ஒரு பெயர் உருபு இயல் நிலையும்
ஆவயின் வல்லெழுத்து இயற்கை ஆகும். 51

எ–ரை: 'நீ' என்னும் முன்னிலை ஒருமைப் பெயர், உருபு புணர்ச்சியின்கண் நெடுமுதல் குறுகி, னகரம் ஒற்றாய் வந்தாற் போன்று ஈண்டுப் பொருட்புணர்ச்சிக்கண்ணும் அவ்வாறே முடியும்; அங்கு இயைபு வல்லெழுத்து மிக்கு முடியாது.

## 5. உகர ஈறு

## அல்வழியில் உகர ஈற்றுப் பெயர்

**254.** உகர இறுதி அகர இயற்றே. 52

எ–ரை: உகர இறுதிப் பெயர், அல்வழிப் புணர்ச்சியில், வல்லெழுத்து முதன்மொழி வரும் பொழுது, வல்லெழுத்து மிக்கு முடியும்; இது முன்பு அகர ஈற்று அல்வழிக்குக் கூறிய இயல்பே.

## உகரச் சுட்டு

**255.** சுட்டின் முன்னரும் அத் தொழிற்று ஆகும். 53

எ–ரை: உகர ஈற்றுச் சுட்டின் முன்னரும், வல்லெழுத்து முதன்மொழி வரும்பொழுது, வல்லெழுத்து மிகுந்து முடியும்.

**256.** ஏனவை வரினே, மேல் நிலை இயல்பே. 54

எ–ரை: உகர ஈற்றுச் சுட்டின் முன்னர், வல்லெழுத்து அல்லாத மெல்லெழுத்து முதலாகிய மொழிகள் வரும் ஆயின், 'ஞ', 'ந', 'ம' விற்கு ஒற்று

மிகுந்தும், 'ய' 'வ' விற்கு வகர ஒற்று மிகுந்தும் முடியும்; இது முன் அகரச் சுட்டிற்கு ஒதிய இயல்பே.

## சுட்டின் முன் வல்லெழுத்து இயல்புமுடிபு

**257.** சுட்டு முதல் இறுதி இயல்பு ஆகும்மே. 55

எ–ரை: சுட்டெழுத்தை முதலாகவும், உகரத்தை இறுதியாகவும் கொண்ட உகர ஈற்றுப் பெயர் ('அது' 'இது') வல்லெழுத்து மிகாது இயல்பாக முடியும்.

## சுட்டுப் பெயர்க்குச் செய்யுள் முடிபு

**258.** 'அன்று வரு காலை, ஆ ஆகுதலும்;
ஐ வரு காலை, மெய் வரைந்து கெடுதலும்;
செய்யுள் மருங்கின் உரித்து' என மொழிப. 56

எ–ரை: ('அது' 'இது' முதலிய) சுட்டு முதல் உகர ஈற்றுப் பெயர்களின் முன், 'அன்று' என்னும் வினைக்குறிப்புச் சொல் வரும் ஆயின், அத்தகரவொற்றின் மேல் ஏறி நின்ற உகரம் ஆகாரமாய்த் திரிந்து முடிதலும், அதன் முன் 'ஐ' என்னும் சாரியை வரும் ஆயின், அத்தகர வொற்று நிற்க, அதன் மேல் ஏறிய உகரம் கெடுதலும் செய்யுட்கண் உரித்தென மொழிவர்.

## வேற்றுமையில் உகர ஈற்றுப் பெயர்

**259.** வேற்றுமைக்கண்ணும் அதன் ஓரற்றே. 57

எ–ரை: உகர இறுதிப் பெயர் அல்வழிக்கு ஒதியவாறே வல்லெழுத்து முதன்மொழி வந்த இடத்து வல்லெழுத்து மிக்கு முடியும்.

## 'எரு' 'செரு' என்னும் இருசொற்கள்

**260.** எருவும் செருவும் அம்மொடு சிவணி,
திரிபு இடன் உடைய, தெரியும் காலை;
அம்மின் மகரம் செருவயின் கெடுமே;
தம் ஒற்று மிகூஉம் வல்லெழுத்து இயற்கை. 58

எ–ரை: 'எரு' 'செரு' என்னும் இருசொற்களும், 'அம் சாரியையோடு பொருந்தி, வல்லெழுத்துப் பெறாது திரியும் இடம் உடையன; ஆராயும் இடத்து, 'செரு' என்னும் சொல் முன் வந்த 'அம்' என்னும் சாரியையில் மகர ஒற்றுக் கெட்டு வல்லெழுத்து மிக்கு முடியும்.

### ழகர உகர ஈறு

261. ழகர உகரம் நீடு இடன் உடைத்தே
உகரம் வருதல் ஆவயினான. 59

எ–ரை: உகர ஈற்றுச் சொற்களுள், ழகரத்தோடு கூடிய உகர வீற்றுச் சொல், நீண்டு முடியும் இடம் உடையது; அவ்விடத்து உகரம் வந்து முடியும்.

### ஒடு என்னும் மரப்பெயர்

262. ஒடு மரக்கிளவி உதி–மர இயற்றே. 60

எ–ரை: 'ஒடு' என்னும் மரத்தினை உணர்த்தும் பெயர்ச் சொல், 'உதி' என்னும் மரத்தினை உணர்த்தும் பெயர்ச் சொல்லிற்குக் கூறப்பட்ட தன்மையோடு ஒத்தது; மெல்லெழுத்துப் பெற்று முடியும்.

### சுட்டுப் பெயர்க்குச் சாரியை

263. சுட்டு முதல் இறுதி உருபு இயல் நிலையும்
ஒற்று இடை மிகா, வல்லெழுத்து இயற்கை. 61

எ–ரை: சுட்டெழுத்தை முதலாகவும், உகரத்தை இறுதியாகவும் உடைய ('அது' 'இது') பெயர்கள், பொருட் புணர்ச்சியிலும், உருபு புணர்ச்சிக்கு ஒதிய இயல்பில் நின்று 'அன்' சாரியை பெற்று, உகரம் கெட்டு முடியும்.

## 6. ஊகார ஈறு

### அல்வழியில் ஊகார ஈற்றுப் பெயர்

264. ஊகார இறுதி ஆகார இயற்றே. 62

எ—ரை: ஊகார ஈற்றுப் பெயர்கள், அல்வழியிடத்து ஆகார ஈற்றுப் பெயர்களுக்கு ஓதிய இயல்பை உடையனவாய், வல்லெழுத்து முதன்மொழி வருமிடத்து வல்லெழுத்து மிக்கு முடியும்.

## ஊகார ஈற்று வினைச்சொல்

265. வினை எஞ்சு கிளவிக்கும் முன்னிலை மொழிக்கும்.
நினையும் காலை, அவ் வகை வரையார். 63

எ—ரை: ஊகார ஈற்றை உடைய வினையெச்சத்திற்கும், ஊகார ஈற்றை உடைய முன்னிலை வினைச் செல்லிற்கும் ஆராயுங் காலத்து அவ்வல்லெழுத்து மிக்கு முடிதலை நீக்கமாட்டார்.

## வேற்றுமையில் ஊகார ஈறு

266. வேற்றுமைக்கண்ணும் அதன் ஓரற்றே. 64

எ—ரை: ஊகார ஈற்றுப் பெயர், வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக் கண்ணும், அல்வழிக்குக் கூறியபடி வல்லெழுத்து மிக்கு முடியும்.

## குறிற்கீழ் ஊகாரமும், தனிமொழி ஊகாரமும்

267. குற்றெழுத்து இம்பரும் ஒரெழுத்து மொழிக்கும்
நிற்றல் வேண்டும், உகரக் கிளவி. 65

எ—ரை: குற்றெழுத்தின் பின் வந்த ஊகார ஈற்று மொழிக்கும், ஒரெழுத்து ஒருமொழியாகிய ஊகார ஈற்று மொழிக்கும், உகரம் ஆகிய எழுத்து நிற்றலை விரும்புவர் ஆசிரியர்.

## ‘பூ’ என்னும் ஒரெழுத்து ஒருமொழி

268. ‘பூ’ என் ஒரு பெயர் ஆயியல்பு இன்றே;
ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே. 66

எ—ரை: 'பூ' என்னும் ஓரெழுத்து ஒருமொழியாகிய ஊகார ஈற்றுப் பெயர் மட்டும், மேற்கூறிய உகரப் பேறும் வல்லெழுத்துப் பேறும் பெற்று முடியும் அவ்வியல்பை உடையதன்று; அவ்விடத்து மெல்லெழுத்து மிக்கு முடிதலன்றி வல்லெழுத்து மிக்கு முடிதலும் உரியது.

## 'ஊ' என்னும் ஓரெழுத்து ஒருமொழி

**269.** 'ஊ' என் ஒரு பெயர் ஆவொடு சிவணும். 67

எ—ரை: 'ஊ' என்னும் இறைச்சியை உணர்த்தும் ஓரெழுத்து ஒருமொழி, ஆகார ஈற்றில் 'ஆ' என்னும் சொல்வல்லெழுத்துப் பெறாது னகர வொற்றுப் பெற்று முடிந்தாற் போல, னகர வொற்றுப் பெற்று முடியும்.

**270.** 'அக்கு' என் சாரியை பெறுதலும் உரித்தே
தக்க வழி அறிதல் வழக்கத்தான. 68

எ—ரை: 'ஊ' என்னும் அவ்வோரெழுத்து ஒருமொழி 'அக்கு' என்னும் சாரியை பெற்று முடிதலும் உரித்து; அதனை வழக்கின்கண் தக்கவழியான் அறிதல் வேண்டும்.

## 'அடூஉ' 'மகடூஉ' என்னும் பெயர்கள்

**271.** ஆடூஉ, மகடூஉ, ஆயிரு பெயர்க்கும்,
இன் இடை வரினும் மானம் இல்லை. 69

எ—ரை: 'ஆடூஉ', 'மகடூஉ' என்னும் உயர்திணைப் பெயர்கள் இரண்டிற்கும், முன் எய்திய வல்லெழுத்தே அன்றி, 'இன்' வரினும் குற்றம் இல்லை.

# 7. எகர ஒகர ஈறு

## அல்வழியில் எகர ஒகர ஈறுகள்

**272.** 'எகர ஒகரம் பெயர்க்கு ஈறு ஆகா;
முன்னிலை மொழிய' என்மனார் புலவர்
'தேற்றமும் சிறப்பும் அல் வழியான'. 70

எ–ரை: தெளிவுப் பொருள் உணர்த்தும் எகரமும் சிறப்புப் பொருள் உணர்த்தும் ஒகரமும் ஆகிய இடைச் சொற்கள் அல்லாத நிலையில், அளபெடுத்துக் கூறுதலினால் உளவாகிய எகர ஒகரங்கள் பெயர்க்கு ஈறாய் வாரா; வினைக்கு ஈறாய் வரும்; அவைதாம் தன்மையிலும் படர்க்கையிலும் வாரா; முன்னிலை இடத்தனவாம்.

### எகர ஒகர இடைச்சொற்கள்

**273.** தேற்ற எகரமும், சிறப்பின் ஒவ்வும்,
மேற் கூறு இயற்கை வவ்லெழுத்து மிகா. 71

எ–ரை: தெளிவுப் பொருளில் வரும் எகரமும், சிறப்புப் பொருளில் வரும் ஒகரமும், மூன்றிடத்தும் வரும் இயல்பை உடையன; வல்லெழுத்து மிக்கு முடியா.

## 8. ஏகார ஈறு

### அல்வழியில் ஏகார ஈற்றுப் பெயர்

**274.** ஏகார இறுதி ஊகார இயற்றே. 72

எ–ரை: ஏகார ஈற்றுப் பெயர்கள், அல்வழிக்கண், ஊகார ஈற்றுப் பெயர்களின் தன்மையை உடையனவாய் வல்லெழுத்து முதன்மொழி வரும் இடத்து, அவ்வல்லெழுத்து மிக்குமுடியும்.

### ஏகார இடைச்சொற்கள்

**275.** மாறு கொள் எச்சமும், வினாவும் எண்ணும்,
கூறிய வல்லெழுத்து இயற்கை ஆகும். 73

எ–ரை: எதிர்மறைப் பொருளில் வரும் ஏகார ஈற்று இடைச் சொல்லும், வினாப் பொருளில் வரும் ஏகார ஈற்று இடைச் சொல்லும் எண்ணுப் பொருளில் வரும் ஏகார ஈற்று இடைச் சொல்லும், முற்கூறப் பெற்ற வல்லெழுத்துப் பெறாது, இயல்பாக முடியும்.

### வேற்றுமையில் ஏகார ஈறு

**276.** வேற்றுமைக்கண்ணும் அதன் ஈரற்றே. 74

எ–ரை: வேற்றுமையில், ஏகார ஈற்றுச் சொற்கள் ஊகார ஈற்று முடிபை ஒத்து, வல்லெழுத்து முதலாகிய மொழி வந்த இடத்து, வல் லெழுத்து மிக்கு முடியும்.

### அதற்கு மேலும் ஒரு முடிபு

277. 'ஏ' என் இறுதிக்கு எகரம் வருமே. 75

எ–ரை: அவ்வேற்றுமை யிடத்து, 'ஏ' என்னும் இறுதிக்கு எகரம் வரும் .

### 'சே' என்னும் மரப்பெயர்

278. 'சே' என் மரப்பெயர் ஒடு மர இயற்றே. 76

எ–ரை: 'சே' என்னும் மரத்தை உணர்த்தும் சொல், 'ஒடு' என்னும் மரத்தை உணர்த்தும் சொல்லிற்குக் கூறப்பட்டவாறே, மெல்லெழு த்துப் பெற்று முடியும்.

### 'சே' என்னும் விலங்குப் பெயர்

279. பெற்றம் ஆயின் முற்ற இன் வேண்டும். 77

'சே' என்னும் பெயர் பெற்றத்தை (காளை) உணர்த்துமாயின் 'இன்' சாரியை பெற்று முடிதல் வேண்டும்.

## 9. ஐகார ஈறு

### வேற்றுமையில் ஐகார ஈற்றுப் பெயர்

280. ஐகார இறுதிப் பெயர்நிலை முன்னர்,
வேற்றுமைஆயின், வல்லெழுத்து, மிகுமே. 78

எ–ரை: ஐகாரத்தை இறுதியில் உடைய பெயர்ச் சொற்களின் முன்னர், வேற்றுமைப் புணர்ச்சியாயின் 'க' 'ச' 'த' 'ப' முதலாகிய மொழிகள் வரும் இடத்து, தத்தமக்குப் பொருந்திய வல்லெழுத்துக்கள் மிக்கு முடியும்.

### சுட்டுப் பெயர்

281. சுட்டு முதல் இறுதி உருபு இயல் நிலையும் 79

எ–ரை: சுட்டெழுத்தை முதலாக உடைய ஐகார ஈற்றுப் பெயர், உருபியலில் கூறப்பட்ட தன்மையை உடையதால் 'வற்று'ச் சாரியை பெற்று முடியும்.

## 'விசை', 'ஞெமை', 'நமை' என்னும் மரப்பெயர்கள்

282. விசை–மரக்கிளவியும், ஞெமையும், நமையும்,
ஆ முப் பெயரும் சே–மர இயல. 80

எ–ரை: 'விசை', 'ஞெமை', 'நமை' ஆகிய அம் மூன்று மரப்பெயர்களும், 'சே' என்னும் மரப்பெயர்க்கு ஏகார ஈற்றில் ஒதியவாறு வல்லெழுத்து மிக்கு முடியாது மெல்லெழுத்துப் பெற்று முடியும்.

## 'பனை', 'அரை', 'ஆவிரை' என்னும் மரப்பெயர்கள்

283. 'பனையும், அரையும், ஆவிரைக் கிளவியும்,
நினையும் காலை அம்மொடு சிவணும்;
ஐ என் இறுதி அரை வரைந்து கெடுமே,
மெய் அவண் ஒழிய' என்மனார் புலவர். 81

எ–ரை: 'பனை', 'அரை', 'ஆவிரை' என்னும் மரப்பெயர்கள், ஆராயும் காலத்து 'அம்' என்னும் சாரியைகளைப் பொருந்தும்; 'அரை' என்னும் சொல்லைத் தவிர்த்து ஏனைய 'பனை', 'ஆவிரை' என்னும் இரண்டு சொற்களுக்கும் ஐகாரம் கெடும்; தன்னால் ஊரப்பட்ட மெய் கெடாது நிற்கும்; என்று கூறுவர் புலவர்.

## 'பனை' முன் 'அட்டு' என்னும் சொல்

284. பனையின் முன்னர், அட்டு வரு காலை,
நிலை இன்று ஆகும், ஐ என் உயிரே;
ஆகாரம் வருதல் ஆவயினான. 82

எ–ரை: 'ப்னை' என்னும் சொல்லின் முன் 'அட்டு' என்னும் சொல் வருமொழியாய் வருங்காலத்து, 'ஐ' என்னும் உயிர்கெட்டு, அவ்விடத்து ஆகாரம் வந்து அம்மெய்யின் மேல் ஏறி முடியும்.

## 'பனை' முன் 'கொடி' என்னும் சொல்

285. கொடி முன் வரினே ஐ அவண் நிற்ப,
கடி நிலை இன்றே, வல்லெழுத்து மிகுதி. 83

எ—ரை: 'பனை' என்னும் சொல்லின் முன்னர், கொடி என்னும் சொல் வருமொழியாய் வருங்காலத்து, அவ்விடத்துக் கெடும் என்று கூறப்பட்ட ஐகாரம் கெடாது நிற்க, அவ்வல்லெழுத்து மிக்கு முடிதலும் நீக்கும் நிலை உடையதன்று.

## ஐகார ஈற்றுத் திங்கட்பெயர், நாட்பெயர்கள்

286. திங்களும் நாளும் முந்து கிளந்தன்ன. 84

எ—ரை: ஐகார ஈற்றை உடைய திங்கட் பெயர்களும், நாட்பெயர்களும் இகர ஈற்றுத் திங்கட் பெயர்களும் நாட்பெயர்களும் 'இக்கு'ச் சாரியையும், 'இன்' சாரியையும் பெற்று முடிந்ததைப் போன்று, தாமும் பெற்று முடியும்.

## 'மழை' என்னும் சொல்

287. 'மழை' என் கிளவி வளி இயல் நிலையும். 85

எ—ரை: 'மழை' என்னும் ஐகார ஈற்றுச் சொல் 'வளி' என்னும் சொல்லின் தன்மையைப் பெறும். ('அத்து', 'இன்' சாரியைகளைப் பெற்று முடியும்)

## 'வேட்கை' முன் 'அவா' என்னும் சொல்

288. 'செய்யுள் மருங்கின் வேட்கை என்னும்
ஐ என் இறுதி அவா முன் வரினே,
மெய்யொடும் கெடுதல்' என்மனார் புலவர்;
டகாரம் ணகாரம் ஆதல் வேண்டும். 86

எ—ரை: செய்யுள் வழக்கில், 'வேட்கை' என்னும் ஐகார ஈற்றுச் சொல், நிலைமொழியாய் நிற்ப, 'அவா' என்னும் சொல் வருமொழியாய் வருமாயின், ஐகாரம் தான் ஏறிநின்ற மெய்யோடும் கெடும் என்று கூறுவர்; அவ்விடத்து டகர வொற்று ணகர வொற்றாகத் திரிதல் வேண்டும்.

## 10. ஒகார ஈறு

### ஒகார ஈற்று அல் வழி முடிபு

**289. ஒகார இறுதி ஏகார இயற்றே.** 87

எ–ரை: ஒகார இறுதிப் பெயர்ச்சொல், ஏகார ஈற்றுச் சொல்லிற்குரிய அல்வழி முடிபையே பெறும்;. (வல்லெழுத்து முதன்மொழி வரும் இடத்து அவ்வல்லெழுத்து மிக்கு முடியும்.)

### ஒகார இடைச்சொல்

**290. மாறு கொள் எச்சமும், வினாவும் ஐயமும்,**
**கூறிய வல்லெழுத்து இயற்கை ஆகும்.** 88

எ–ரை: மாறுபாட்டினைக் கொண்ட எச்சப் பொருண்மையை ஒழிபாக உடைய ஒகாரமும், வினாப் பொருண்மையை உடைய ஒகாரமும், ஐயப் பொருண்மையை உடைய ஒகாரமும், முன்னே கூறப்பட்ட வல்லெழுத்து மிகுதல் இன்றி இயல்பாக முடியும்.

### 'ஒழியிசை' ஒகாரமும் முன் விதியைப் பெறல்

**291. ஒழிந்ததன் நிலையும் மொழிந்தவற்று இயற்றே.** 89

எ–ரை: 'ஒழியிசைப்' பொருண்மையை உடைய ஒகாரமும், முன் நூற்பாவில் கூறப்பட்ட ஒகாரங்களைப் போன்றே இயல்பு முடிபைப் பெறும்.

### வேற்றுமையில் ஒகார ஈற்றுப் பெயர்

**292. வேற்றுமைக் கண்ணும் அதன் ஓரற்றே;**
**ஒகாரம் வருதல் ஆவயினான.** 90

எ–ரை: ஒகார ஈற்று வேற்றுமையிடத்தும், ஒகார ஈற்று அல்வழி முடிபை ஏற்று, வல்லெழுத்து மிக்கு முடியும்; ஒகர எழுத்துப் பேறும் அவ்விடத்துப் பெற்று முடியும்.

### 'கோ' முன் 'இல்' வரும் இடத்து விதி

**293.** இல்லொடு கிளப்பின், இயற்கை ஆகும். 91

எ–ரை: ஒகார ஈற்று ஒரெழுத்து ஒரு மொழியாகிய 'கோ' என்பது நிலைமொழியாய் நிற்க, 'இல்' என்பது வருமொழியாய் வரும் ஆயின், முன் நூற்பாவில் கூறப்பட்ட ஒகர எழுத்துப்பேறு இன்றி இயல்பாக முடியும்.

### ஒகார ஈற்றுள் சில 'ஒன்' சாரியை பெறல்

**294.** உருபு இயல் நிலையும் மொழியுமார் உளவே;
ஆவயின் வல்லெழுத்து இயற்கை ஆகும். 92

எ–ரை: ஒகார ஈற்றுள் சில, பொருட் புணர்ச்சிக்கண் உருபியலில் சொல்லப்பட்ட இயல்பில் நின்று 'ஒன்' சாரியை பெற்று முடிவனவும் உள்ளன; அவ்விடத்து வல்லெழுத்து மிகுதல் இன்றி இயல்பாக முடியும்.

## 11. ஔகார ஈறு

### 'அல்வழி', 'வேற்றுமை' ஆகிய இருவழிகளிலும் ஔகார ஈறு

**295.** 'ஔகார இறுதிப் பெயர்நிலை முன்னர்,
அல்வழியானும், வேற்றுமைக்கண்ணும்,
வல்லெழுத்து மிகுதல் வரை நிலை இன்றே;
அவ் இரு ஈற்றும் உகரம் வருதல்
செவ்விது' என்ப, சிறந்திசினோரே. 93

எ–ரை: ஔகார ஈற்றுப் பெயர்ச் சொல்லின் முன்னர் வல்லெழுத்தை முதலாக உடைய வருமொழிகள் வரின் அல்வழி, வேற்றுமை ஆகிய இருவழிகளிலும் வல்லெழுத்து மிக்கு முடிதல் நீக்கப்படாது; அவ்விரு ஈறுகளிலும் நிலைமொழிக்கண் உகரம் வருதல் சிறந்தது என்று புலமையிற் சிறந்தோர் கூறுவர்.

## இயல் – 8.

# புள்ளி மயங்கியல்

(மெய் ஈறுகளின்புணர்ச்சி இலக்கணத்தை விரித்துரைக்கும் இயல்)



## 1. மெல்லொற்று ஈறுகள்

### 'அல்வழி' 'வேற்றுமை' இருவழிகளிலும் ஞகார ஈற்றுத் தொழிற்பெயர்.

296. ஞகாரை ஒற்றிய தொழிற்பெயர் முன்னர்,
அல்லது கிளப்பினும், வேற்றுமைக்கண்ணும்,
வல்லெழுத்து இயையின், அவ் எழுத்து மிகுமே;
உகரம் வருதல் ஆவயினான. 1

எ–ரை: ஞகாரம் ஈற்றின்கண் ஒற்றாக நின்ற தொழிற் பெயரின் முன்னர், 'அல்வழி' 'வேற்றுமை' ஆகிய இரு வழிகளிலும், வல்லெழுத்து முதன்மொழி வரும் ஆயின் அவ்வல்லெழுத்து மிக்கு முடியும்; அவ்விடத்து உகரம் வருதல் வேண்டும்.

297. ஞ, ந, ம, வ, இயையினும் உகரம் நிலையும். 2

எ–ரை: ஞகார ஈற்றுத் தொழிற் பெயரின் முன் வன்கணம் அன்றி, 'ஞ', 'ந', 'ம', 'வ' முதன்மொழி வருமொழியாய் வரினும், நிலைமொழிக்கண் உகரம் நிலைபெற்று முடியும்.

### அல்வழியில் நகர ஈறு

298. நகர இறுதியும் அதன் ஓரற்றே. 3

எ–ரை: நகர ஈற்றுப்பெயரும், வருமொழி முதலில் வல்லெழுத்தும், 'ஞ', 'ந', 'ம', 'வ' ஆகியவையும் வரும் இடத்தும் அவ்வழியில் ஞகர ஈற்றுப் பெயர்க்குக் கூறியவாறே முடியும்.

## பற்றுமையில் நகர ஈறு

299. வேற்றுமைக்கு உ–க் கெட, அகரம் நிலையும். 4

எ–ரை: நகர ஈற்றுப் பெயர்கள், வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக் கண், முன் கூறிய உகரம் கெட அகரத்தோடும் நிலைபெற்றுப் புணரும்.

## 'வெரிந்' என்னும் சொல்

300. 'வெரிந்' என் இறுதி முழுதும் கெடுவழி,
வரும் இடம் உடைத்தே, மெல்லெழுத்து இயற்கை. 5

எ–ரை: 'வெரிந்' என்னும் சொல்லின் நகர இறுதியானது, முழுவதும் கெடும்பொழுது மெல்லெழுத்துப் பெறுகின்ற தன்மை வந்து முடியும் இடம் உடையது.

## 'வெரிந்' என்பதற்கு மேலும் ஒரு முடிபு

301. ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே. 6

எ–ரை: 'வெரிந்' என்ற சொல் இறுதி, கெட்டு நின்ற இடத்து மெல்லெழுத்தே அன்றி, வல்லெழுத்து மிக்கு முடிதலும் உரியதாகும்.

## வேற்றுமையில் ணகர ஈறு

302. ணகார இறுதி வல்லெழுத்து இயையின்,
டகாரம் ஆகும், வேற்றுமைப் பொருட்கே. 7

எ–ரை: ணகார ஈற்றுப் பெயர், வல்லெழுத்து முதன் மொழி வந்து பொருந்துமாயின், வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண் டகாரமாகத் திரிந்து முடியும்.

## 'ஆண்' 'பெண்' என்னும் சொற்கள்

303. ஆணும் பெண்ணும் அஃறிணை இயற்கை. 8

எ–ரை: 'ஆண்' 'பெண்' என்ற விரவுப் பெயர்கள், அஃறிணைப் பெயர்கள் முடிந்த இயல்பு போலவே தாமும் வேற்றுமைக்கண் இயல்பு முடிவைப் பெறும்.

## 'ஆண்' என்னும் மரப்பெயர்

304. ஆண்–மரக்கிளவி அரை–மர இயற்றே. 9

எ–ரை: 'ஆண்' என்னும் பாலை உணர்த்தாது 'ஆண்' என்னும் மரத்தை உணர்த்தும் பெயர், 'அரை' என்னும் (அளவை உணர்த்தாத) மரப்பெயர்ச் சொல்லைப் போலத் தானும் 'அம்' சாரியை பெற்று முடியும்.

## 'விண்', என்னும் சொல் செய்யுளில் ஏற்கும் முடிவு

305. 'விண்' என வரூஉம் காயப் பெயர்வயின்,
உண்மையும் உரித்தே, 'அத்து' என் சாரியை;
செய்யுள் மருங்கின் தொழில் வரு காலை. 10

எ–ரை: வானத்தை உணர்த்தும் 'விண்' என்னும் சொல்லின்கண், வினைச்சொல் வருங்காலத்து 'அத்து' என்னும் சாரியை உண்டாதலும் உரியது; இல்லை யாதலும் உரியது; இது செய்யுள் விதி.

## ணகர ஈற்றுத் தொழிற்பெயர்

306. தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல. 11

எ–ரை: ணகர ஈற்றுத் தொழிற்பெயர் எல்லாம் அல்வழி வேற்றுமை என்ற இருவழியிலும் நகர ஈற்றுத் தொழிற் பெயர் பெற்ற முடிவுகளை ஏற்கும் இயல்பை உடையன. (வல்லெழுத்து முதன் மொழி வரின் வல்லெழுத்தும் உகரமும் பெறல், மென்கணம் இடைக்கணம் முதன் மொழிவரின் வகரம் பெறல்.)

## ணகர ஈற்றுக் கிளைப்பெயர்

307. கிளைப் பெயர் எல்லாம் கொளத் திரிபு இலவே. 12

எ–ரை: ணகர ஈற்றுள் ஒர் இனத்தை உணர நின்ற பெயர் எல்லாம், வேற்றுமைவழிக் கொள்ளத்தக்க திரிபுகள் ஏதும் பெற மாட்டா.

## 'எண்' என்னும் உணவுப்பெயர்

308. வேற்றுமை அல்வழி, 'எண்' என் உணவுப் பெயர்
வேற்றுமை இயற்கை நிலையலும் உரித்தே. 13

எ-ரை: வேற்றுமை அல்லாத, அல்வழி இடத்து, எண் எனப்பெறும் உணவினை உணர்த்தும் பெயர், வல்லெழுத்து முதன்மொழி வரும் இடத்து, வேற்றுமைக்கண் கூறப்பட்ட திரிபு முடிபைப் பெறும் (இயல்பு முடிவே பெரும்பான்மை)

## 'முரண்' என்னும் தொழிற்பெயர்

309. 'முரண்' என் தொழிற்பெயர் முதல் இயல் நிலையும். 14

எ-ரை: 'முரண்' என்னும் தொழிற்பெயர், இயல்பும் திரிபுமாய் முடிதலாகிய முற்கூறிய இயல்பைப் பெற்று முடியும்.

## வேற்றுமையின் மகரஈறு

310. மகர இறுதி வேற்றுமை ஆயின்,
துவரக் கெட்டு, வல்லெழுத்து மிகுமே. 15

எ-ரை: மகர இறுதிப் பெயர், வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண் வல்லெழுத்து முதன் மொழி வரும் ஆயின் மகரம் முற்றக்கெட்டு வல்லெழுத்து மிகுந்து முடியும்.

## மகர ஈற்றிற்கு மேலும் இருமுடிபுகள்

311. அகர ஆகாரம் வரூஉம் காலை,
ஈற்றுமிசை அகரம் நீடலும் உரித்தே. 16

எ-ரை: வருமொழி முதலில் அகர ஆகாரங்கள் வரும் இடத்து, மகர ஒற்றின்மேல்நின்ற அகரம் நீளுதலும் உரித்து; நீளாமையே பெரும்பான்மை.

312. மெல்லெழுத்து உறழும் மொழியுமார் உளவே;
செல் வழி அறிதல் வழக்கத்தான. 17

எ–ரை: மகர ஈற்றுச் சொற்களுள், வல்லெழுத்தினோடு மெய்யெழுத்துப் பெற்று உறழ்ந்து முடியும் சொற்களும் உள்ளன; அவற்றை வழக்கின்கண் வரும் இடத்தை அறிதல் வேண்டும்.

## இல்லம் என்னும் மரப்பெயர்

**313.** இல்லம்–மரப்பெயர் விசை–மர இயற்றே. 18

எ–ரை: வீட்டினை உணர்த்தாது 'இல்லம்' என்னும் மரத்தினை உணர்த்தும் சொல், 'விசை' என்னும் மரத்தினை உணர்த்தும் சொல் பெற்ற முடிபே போல், மெல்லெழுத்துப் பெற்று முடியும்.

## அல்வழியில் மகர ஈறு

**314.** அல்வழி எல்லாம் மெல்லெழுத்து ஆகும். 19

எ–ரை: மகர ஈறு, அல்வழி இடத்து எல்லாம் மெல்லெழுத்தாய்த் திரிந்து முடியும்.

## 'அகம்' என்னும் சொல் முன் 'கை'

**315.** 'அகம்' என் கிளவிக்குக் 'கை' முன் வரினே,
முதல்நிலை ஒழிய முன்னவை கெடுதலும்,
வரை நிலை இன்றே ஆசிரியர்க்க;
மெல்லெழுத்து மிகுதல் ஆவயினான. 20

எ–ரை: 'அகம்' என்னும் சொல்லின் முன்னர் 'கை என்னும் சொல் வருமாயின், முன்னின்ற அகரம் கெடாது நிற்ப, அதன் முன்னின்ற 'க' என்ற எழுத்தும், மகர ஒற்றும் கெட்டு முடிதலும், கெடாது முடிதலும் ஆசிரியர்க்கு நீக்கும் நிலைமை இல்லை; அவை கெட்ட இடத்து மிக்கு முடியும்.

## 'இலம்' என்னும் சொல் முன் 'படு'; செய்யுள்விதி

**316.** 'இலம்' என் கிளவிக்குப் படு வரு காலை,
நிலையலும் உரித்தே, செய்யுளான,

எ–ரை: 'இல்லாமை' என்னும் பொருள்ள உணர்த்தும் 'இலம்' என்னும் சொல்லிற்கு முன்னர், 'படு' என்னும் தொழிற்பெயர் வரும் இடத்து, மகரம் கெடாது நிலைத்து நிற்றலும் உண்டு; இது செய்யுள் வழக்கு.

## ஆயிரம் என்னும் எண்ணுப் பெயர்

317. அத்தொடு சிவணும், ஆயிரத்து இறுதி–
ஒத்த எண்ணும் முன் வருகாலை. 22

எ–ரை: 'ஆயிரம்' என்னும் எண்ணுப்பெயரின் மகர இறுதி, தன்னோடு ஒத்த எண்ணுப் பெயர் வருமொழியாய் வரும் இடத்து 'அத்து' என்னும் சாரியையோடு பொருந்தி முடியும்.

## அடையடுத்த ஆயிரம் என்னும் நிலைமொழி

318. அடையொடு தோன்றினும், அதன் ஓரற்றே. 23

எ–ரை: 'ஆயிரம்' என்னும் எண்ணுப் பெயர் அடைமொழியோடு அடுத்துத் தோன்றினும், முற்கூறியவாறு 'அத்துச்' சாரியை பெற்று முடியும்.

## ஆயிரத்தின் முன் அளவுப்பெயரும் நிறைப்பெயரும்

319. அளவும் நிறையும் வேற்றுமை இயல. 24

எ–ரை: 'ஆயிரம்' தானே நின்ற இடத்தும், அடைமொழியை அடுத்து நின்ற இடத்தும், அளவுப் பெயரும் வருமொழியாய் வரும் ஆயின், மகர ஈற்று வேற்றுமை நிறைப்பெயரின் விதியே ஏற்கும். (வல்லெழுத்து வந்துழி கெட்டு மகரம் வல்லெழுத்துமிக்கு முடியும்; இயல்பு கணம் வந்துழி எய்திய மகரம் கெட்டு முடியும்.

## வேற்றுமையில் உயர்திணைப் பெயரும் விரவுப்பெயரும்

320. படர்க்கைப் பெயரும், முன்னிலைப் பெயரும்,
தொடக்கம் குறுகும் பெயர்நிலைக் கிளவியும்
வேற்றுமை ஆயின், உருபு இயல் நிலையும்;
மெல்லெழுத்து மிகுதல் ஆவயினான. 25

எ–ரை: 'எல்லாரும்', 'எல்லீரும்', 'தாம்', 'நாம்' 'யாம்' என்னும் பெயர்களும், வேற்றுமைப் பொருட் புணர்ச்சியில், உருபுபுணர்ச்சியில், கூறிய இயல்பில் நின்று முடியும் தன்மையைப் பெறும்; அவ்விடத்து மேல் நெடு முதல் குறுகும் மொழிக்கண் மெல்லெழுத்து மிக்கு முடியும்.

## அல்வழியில் உயர்திணைப் பெயரும் விரவுப் பெயரும்

**321.** அல்லது கிளப்பின், இயற்கை ஆகும். 26

எ–ரை: மேற்கூறிய சொற்கள் அனைத்தும் அல்வழியைச் சொல்லும் இடத்து இயல்பு முடிபு பெறும்.

## 'எல்லாம்' என்னும் விரவுப் பெயர்

**322.** அல்லது கிளப்பினும், வேற்றுமைக்கண்ணும்
'எல்லாம்' எனும் பெயர் உருபு இயல் நிலையும்;
வேற்றுமை அல்வழிச் சாரியை நிலையாது. 27

எ–ரை: 'எல்லாம்' என்னும் சொல், அல்வழி வேற்றுமை என்ற இருவழி இடத்தும், உருபு புணர்ச்சியின் தன்மையைப் பெற்று முடியும்; அல்வழிக்கண்சாரியை நில்லாது.

## எல்லாம் என்னும் சொல்லுக்கு மேலும் ஒரு முடிவு

**323.** மெல்லெழுத்து மிகினும் மானம் இல்லை 28

எ–ரை: 'எல்லாம்' என்னும் சொல்லின் மேல், அல்வழி இடத்து இறுதி மகரம் கெட்டு, மெல்லெழுத்து மிகுந்து முடியினும் குற்றம் இல்லை; வல்லெழுத்து மிகுதலே பெரும்பான்மை முடிவு.

## 'எல்லாம்' என்னும் சொல்லிற்கு உயர்திணைமுடிவு

**324.** உயர்திணை ஆயின், உருபு இயல் நிலையும் 29

எ–ரை: 'எல்லாம்' என்னும் சொல் உயர்திணையாய் நிற்கும் ஆயின், உருபு புணர்ச்சியின் தன்மையை உடைய, தாய், இடையில் 'நம்' என்ற சாரியையும், இறுதியில் 'உம்' என்ற சாரியையும் பெற்று முடியும்.

## வேற்றுமையில் 'நும்' என்னும் விரவுப்பெயர்

325. 'நும்' என் ஒரு பெயர் மெல்லெழுத்து மிகுமே. 30

எ–ரை: 'நும்' என்னும் விரவுப்பெயர் வேற்றுமைப் பொருட்புணர்ச்சி இடத்து, மெல்லெழுத்து மிகுந்து முடியும்.

## அல்வழியில் 'நும்' என்னும் விரவுப் பெயர்

326. அல்லதன் மருங்கின் சொல்லும் காலை,
உ–க் கெட நின்ற மெய்வயின் ஈவர
இ இடை நிலைஇ, ஈறு கெட, ரகரம்
நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே;
அப்பால் மொழிவயின் இயற்கை ஆகும். 31

எ–ரை: 'நும்' என்னும் சொல், அல்வழி இடத்து, நகரத்தின்மேல் நின்றஉகரம் கெட நின்ற நகர ஒற்றிடத்தே ஈகாரம் வந்து நிற்ப, ('நீ' என மாறி) ஓர் இகரம் இடையில் வந்துநிலை பெற்றுமகர ஈறு கெட, அவ்விடத்து நகர ஒற்று வந்து நிற்கும்; (நீ இர் > நீயிர்) அத்தகைய நிலைமொழியிடத்து வரும்சொல் இயல்பாக முடியும்.

## மகர ஈற்றுத் தொழிற்பெயர்

327. தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல. 32

எ–ரை: மகர ஈற்றுத் தொழிற்பெயர்கள் எல்லாம், அல்வழி, வேற்றுமை இரண்டு இடத்தும், ஞகார ஈற்றுத் தொழிற் பெயர் இயல்பினவாய், வன் கணத்து உகரமும் வல்லெழுத்தும் பெற்றும் ஏனைக் கணங்களின் முன் உகரமும் பெற்றும் முடியும்.

---

* 'நும்' என்பது, 'நூம்' என்னும் வழக்கற்ற பழம் பெயரின் வேற்றுமைக் குறுக்கம்'' என்பர் பாவாணர், + இவ்வாறு கூறுதல் தமிழ் இயல்பிற்கும் உத்திக்கும் பொருந்தாதென்பர் பாவாணர்.

## 'ஈம்' 'கம்' 'உரும்' என்னும் பொருட்பெயர் முடிவுகள்

**328.** 'ஈமும்' 'கம்மும், 'உரும்' என் கிளவியும்,
ஆமுப் பெயரும் அவற்று ஓரன்ன 33

எ—ரை: 'ஈமும்' கம்மும், 'உரும்' என்னும் பொருட் பெயர்ச் சொற்கள், அல்வழி வேற்றுமை என்ற இரு இடத்தும், அத்தொழிற் பெயர்களோடு ஒரு தன்மை கொண்டனவாய், அவ்விதிகளையே ஏற்கும்.

## 'ஈம்' 'கம்' என்னும் இருபெயர்க்கும் சாரியை

**329.** வேற்றுமைஆயின், ஏனை இரண்டும்
தோற்றம் வேண்டும், 'அக்கு' என் சாரியை. 34

எ—ரை: வேற்றுமைப் பொருட்புணர்ச்சி இடத்து, 'ஈம்' 'கம்' என்னும் இரண்டு பெயர்களும் 'அக்கு' என்னும் சாரியை தோன்றி முடிதல் வேண்டும்.

## 'மகரம்' குறுகும் இடம்

**330.** வகாரம் மிசையும் மகாரம் குறுகும் 35

எ—ரை: மகரம் தனிமொழிக்கண் குறுகுதல் போன்று ('போன்ம்') புணர்மொழியிடத்தும், வகர முதன் மொழி வரும் இடத்துக் குறுகி நிற்கும்.

## மகர ஈற்று நாட்பெயர்

**331.** 'நாட்பெயர்க் கிளவி மேல் கிளந்தன்ன;
அத்தும் ஆன்மிசை வரை நிலை இன்றே;
ஒற்று மெய் கெடுதல்' என்மனார் புலவர். 36

எ—ரை: மகர ஈற்று நாட்பெயர் ('மகம்') இகர ஈற்று நாட்பெயர்க்கு ('ஆடி') முன் கூறியவை போன்றே 'ஆன்' சாரியை பெற்று முடியும்; 'அத்து'ச் சாரியையும்

---

* ஈம் – இடுகாடு; கம்–கம்மியர் தொழில்; உரும் – இடி

'ஆன்' சாரியையின் மேல் நீக்கும் நிலை உடையதன்று; அவ்விடத்து நிலைமொழி மகரம் தம் உருவம் கெடும் என்று கூறுவர் புலவர்.

## வேற்றுமையில் னகர ஈறு

332. னகார இறுதி வல்லெழுத்து இயையின்,
ரகாரம் ஆகும் வேற்றுமைப் பொருட்கே. 37

எ—ரை: வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண் னகர ஈற்றுப் பெயர், வல்லெழுத்து முதன்மொழி வந்து பொருந்துமாயின் னகர ஒற்றாகத் திரிந்து முடியும்.

## சில னகர ஈற்றுச் சொற்களுக்கும் அத்திரிபு முடிபு

333. 'மன்னும், சின்னும், ஆனும், ஈனும்,
பின்னும், முன்னும், வினை எஞ்சு கிளவியும்,
அன்ன இயல' என்மனார் புலவர். 38

எ—ரை: 'மன்', 'சின்' 'ஆன்' 'ஈன்' 'பின்' 'முன்' ஆகிய சொற்களும், *முற்கூறிய னகர ஈறு றகர ஈறாகத் திரிதலாகிய முடிவைப் பெறும் என்று கூறுவர் புலவர்.

## 'வயின்' என்னும் சொல் திரிபு முடிபு பெறல்

334. 'சுட்டு முதல் வயினும், எகரம் முதல் வயினும்,
அப் பண்பு நிலையும் இயற்கைய' என்ப. 39

எ—ரை: சுட்டெழுத்தை முதலாக உடைய 'வயின்' என்னும் சொல்லும், எகரமாகிய வினா வெழுத்தை முதலாக உடைய 'வயின்' என்னும் சொல்லும், னகரம் றகரமாகத் திரியும் அப்பண்பினைக் கொள்ளும் இயல்புடையன என்று கூறுவர் புலவர்.

---

'மன்' 'சின்' – அசைச் சொற்கள், 'ஆன்' – அவ்விடத்து 'ஏன்' இவ்விடத்து

## ‘குயின்’ என்னும் சொல் இயல்பு முடிபு பெறல்

**335.** ‘குயின்’ என் கிளவி இயற்கை ஆகும். 40

எ–ரை: ‘குயின்’ என்னும் சொல் னகரம் றகரமாகத் திரியாது இயல்பாய் முடியும்.

## ‘எகின்’ என்னும் மரப்பெயர் ‘அம்’ சாரியை பெறல்

**336.** எகின்–மரம் ஆயின் ஆண்–மர இயற்றே. 41

எ–ரை: ‘எகின்’ என்னும் சொல் மரப்பெயராயின் ‘ஆன்’ என்னும் மரப்பெயர்க்கு முன் விதித்தபடி ‘அம்’ சாரியை பெற்று முடியும்.

## ‘எகின்’ என்னும் பறவைப் பெயர் முடிபு

**337.** ஏனை எகினே அகரம் வருமே;
வல்லெழுத்து இயற்கை மிகுதல் வேண்டும். 42

எ–ரை: மரம் அல்லாத பறவையைக் குறிக்கும் ‘எகின்’ என்னும் சொல், நிலைமொழிக்கண் அகரம் வந்து முடியும்; அவ்விடத்து வருமொழி வல்லெழுத்து மிக்குமுடிதல் வேண்டும்.

## னகர ஈற்றுக் கிளைப் பெயர்கள்

**338.** கிளைப் பெயர் எல்லாம் கிளைப் பெயர் இயல. 43

எ–ரை: னகர ஈற்றுக் கிளைப்பெயர்கள் எல்லாம், ணகர ஈற்றுக் கிளைப்பெயர்களைப் போலத் திரியாது இயல்பாய் முடியும். (‘எயின்’ முதலிய அனைத்து னகர ஈற்றுக் கிளைப்பெயர்களுக்கும் உரியது இவ்விதி.)

## ‘மீன்’ என்னும் சொல் முடிபு

**339.** ‘மீன்’ என் கிளவி வல்லெழுத்து உறழ்வே. 44

எ–ரை: ‘மீன்’ என்னும் சொல், திரிபு வல்லெழுத்தோடு உறழ்ந்து முடியும். (திரிந்தும் திரியாதும் முடிதலே உறழ்ந்து முடிதல்)

## 'தேன்' என்னும் சொல் பெறும் முடிபுகள்

**340.** 'தேன்' என் கிளவி வல்லெழுத்து இயையின்,
மேல் நிலை ஒத்தலும், வல்லெழுத்து மிகுதலும்,
ஆமுறை இரண்டும் உரிமையும் உடைத்தே;
வல்லெழுத்து மிகு வழி, இறுதி இல்லை. 45

எ–ரை: 'தேன்' என்னும் சொல் நிலைமொழியாய் நிற்க, வருமொழி வல்லெழுத்துடன் வரின், மேல் நூற்பாவில் கூறியவாறு திரிந்து முடிதலும் திரியாது முடிதலும் ஆகிய உறழ்ச்சி முடிபும், வல்லெழுத்து மிகும் முடிவும் ஆகிய இரண்டும் உரிமையாதலை உடையது; வல்லெழுத்து மிகும் இடத்து இறுதி னகரம் கெடும்.

**341.** மெல்லெழுத்து மிகினும், மானம் இல்லை. 46

எ–ரை: 'தேன்' என்னும் சொல், வல்லெழுத்து முதன்மொழி வரும்போது, முற்கூறியவாறு வல்லெழுத்து மிகுதலே அன்றி மெல்லெழுத்து மிகுந்து வருதலும் குற்றம் இல்லை.

**342.** மெல்லெழுத்து இயையின், இறுதியொடு உறழும் 47

எ–ரை: மெல்லெழுத்து மிகும்வழி இறுதி னகர ஒற்றுக் கெடுதலும் கெடாமையும் உண்டு.

**343.** இறாஅல் தோற்றம் இயற்கை ஆகும். 48

எ–ரை: 'தேன்' நிலைமொழியாய் நிற்க 'இறாஅல்' (கூடு) என்பது வருமொழி ஆயின். நிலைமொழியின் னகரம் கெடாது நின்று இயல்பாய் முடியும்.

**344.** ஒற்று மிகு தகரமொடு நிற்றலும் உரித்தே. 49

எ–ரை: அவ்வாறு வருதலே அன்றித் 'தேத்திறால்' என மற்றுமோர் தகர ஒற்றோடு இணைந்து நின்று முடிதலும் உரியது.

## 'மின்' 'பின்' 'பன்' 'கன்' என்னும் சொற்களின் முடிபுகள்*

**345.** மின்னும், பின்னும், பன்னும், கன்னும்,
அந் நாற் சொல்லும் தொழிற்பெயர் இயல. 50

எ–ரை: 'மின்', 'பின்', 'பன்' 'கன்' என்னும் நான்கு சொற்களும், ஞகார ஈற்றுத் தொழிற்பெயர்கள் போல, வன்கணத்து உகரமும், வல்லெழுத்தும், ஏனைய கணங்களின் முன் உகரமும் பெற்று முடியும்.

## 'கன்' என்னும் சொல்லிற்கு மற்றுமோர் முடிபு

**346.** வேற்றுமைஆயின், ஏனை எகினொடு
தோற்றம் ஒக்கும், 'கன்' என் கிளவி 51

எ–ரை: 'கன்' என்னும் சொல் வேற்றுமைப் பொருட் புணர்ச்சி இடத்து. மரத்தை உணர்த்தாத 'எகின்' என்னும் பறவையை உணர்த்தும் சொல்லைப்போல அகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும். (337 ஆம் நூற்பாவைக் காண்க.)

## இயற்பெயர் முன்னர்த் 'தந்தை' என்னும் முறைப் பெயர் **

**347.** இயற்பெயர் முன்னர்த் தந்தை முறை வரின்,
முதற்கண் மெய் கெட அகரம் நிலையும்;
மெய் ஒழித்து அன் கெடும் அவ் இயற்பெயரே. 52

எ–ரை: னகர ஈற்று இயற்பெயர்கள் நிலைமொழியாய் நிற்ப, 'தந்தை' என்னும் முறைப்பெயர் வருமொழியாய் வரும் ஆயின், 'தந்தை' என்னும் சொல்லில் முதற்கண் நின்ற தகர மெய் கெட அதன்மேல் நின்ற அகரம் கெடாது

---

* 'மின்' – மின்னல்; 'பின்' – பிறகு; 'பன் – பருத்தி; 'கன்' – சிறு தராசுத் தட்டு.

** 'சேரல் ஆதன்' 'பிசிராந்தையார்' முதலிய பழங்காலப் பெயர்களின் அமைப்பு முறை விளக்கப்பட்டது.

நிற்கும்; நிலைமொழி ஈற்றில் 'அன்' என்பதில் அகரம் ஏறி நின்ற மெய்யை ஒழித்து 'அன்' கெடும். (சாத்தன் தந்தை – சாத்தந்தை)

## 'ஆதன்' 'பூதன்' என்ற இயற் பெயர்கள்

**348.** ஆதனும் பூதனும் கூறிய இயல்பொடு
பெயர் ஒற்று அகரம் துவரக் கெடுமே. 53

எ–ரை: 'ஆதன்', 'பூதன்' என்னும் இயற்பெயர்கள் இரண்டும், முற்கூறியவாறு நிலைமொழி 'அன்' கெடுதலும், வருமொழித் தகர ஒற்றுக் கெடுதலும் ஆகிய முடிபுகளுடன், நிலைமொழியில் 'அன்' கெட நின்ற தகர ஒற்றும், வருமொழியில் தகர ஒற்றுக் கெட நின்ற அகரமும் முற்றக் கெட்டு முடியும். (ஆதன் தந்தை > ஆந்தை)

**349.** சிறப்பொடு வருவழி இயற்கை ஆகும். 54

எ–ரை: அவ்வியற்பெயர்கள், சிறப்பை உணர்த்தும் அடைமொழியோடு சேர்ந்துவரின் இவ்விருவகைத் திரிபுகளும் இன்றி இயல்பாய் முடியும்.

## இயற்பெயர் முன்னர் 'மகன்' முதலிய பிறபெயர்கள்

**350.** அப் பெயர் மெய் ஒழித்து, அன் கெடு வழியே,
நிற்றலும் உரித்தே, 'அம்' என் சாரியை;
மக்கள் முறை தொகூஉம் மருங்கினான. 55

எ–ரை: 'மக்கள்' என்னும் முறைப் பெயர் வந்து கூடும்போது, இயற்பெயர் மெய்நிற்ப அன் கெடும் வழி, 'அம்' என்னும் சாரியை பெற்று முடிதலும் உண்டு.

## 'தான்', 'பேன்', 'கோன்' என்னும் இயற் பெயர்கள்

**351.** தானும் பேனும், கோனும், என்னும்
ஆமுறை இயற்பெயர் திரிபு இடன் இலவே. 56

எ–ரை: 'தான்', 'பேன்', 'கோன்', என்னும் இயற்பெயர்கள், 'தந்தை' யோடும் மக்கள் முறைமையோடும் புணரும் இடத்து, திரிபிற்கு இடமின்றி இயல்பாக முடியும்.

## வேற்றுமையில் 'தான்', 'யான்' என்னும் சொற்கள்

**352.** 'தான், யான்' எனும் பெயர் உருபு இயல் நிலையும். 57

எ–ரை: 'தான்', 'யான்' என்னும் பெயர்ச் சொற்கள் உருபியலில் கூறிய இயல்பில் நிலைபெற்று முடியும் (தான் > தன்; யான் > என்)

## அல்வழியில் 'தான்' 'யான்' என்னும் சொற்கள்

**353.** 'வேற்றுமை அல் வழிக் குறுகலும் திரிதலும்
தோற்றம் இல்லை' என்மனார் புலவர். 58

எ–ரை: 'தான்' 'யான்' என்பன அல்வழியில் தோன்றும் இடத்து, முறையே குறுகுதலும்திரிதலும் இல்லாமல், இயல்பாய் முடியும் என்று கூறுவர் புலவர்.

## 'அழன்' என்னும் சொல்

**354.** 'அழன்' என் இறுதி கெட, வல்லெழுத்து மிகுமே. 59

எ–ரை: 'அழன்' என்னும் சொல் னகர ஈறு கெட வருமொழி வல்லெழுத்து மிக்கு முடியும்.

## 'முன்' என்பதற்கு முன் 'இல்'

**355.** 'முன்' என் கிளவி முன்னர்த் தோன்றும்
'இல்' என் கிளவிமிசை றகரம் ஒற்றல்
தொல் இயல் மருங்கின் மரீஇய மரபே. 60

எ–ரை: 'முன்' என்னும் சொல்லின் முன்னே தோன்றும் 'இல்' என்னும் சொல்லின் மேல் றகர ஒற்று வந்து ('முன்றில்') முடிதல் தொன்மையான வழக்கிடத்து மருவி வந்து மரூஉ முடிபு ஆகும்.

## 'பொன்' என்னும் சொல்லிற்கு உரிய செய்யுள் முடிபு

**356.** 'பொன்' என் கிளவி ஈறு கெட, முறையின்
முன்னர்த் தோன்றும் லகார மகாரம் –
செய்யுள் மருங்கின் தொடர் இயலான. 61

எ–ரை: செய்யுளிடத்துச் சொற்கள் தம்முன் தொடரும் இயல்பின்கண், 'பொன்' என்னும் சொல் தன் ஈறாகிய னகரம் கெடாது நிற்ப, அதன் முன்னர் லகரமும், மகர ஒற்றும் முறையாக வந்து நிற்கும். ('பொன்' > 'பொலம்')

## 2. இடையொற்று ஈறுகள்

### வேற்றுமையில் யகர ஈறு

**357.** யகர இறுதி, வேற்றுமைப் பொருள்வயின்,
வல்லெழுத்து இயையின், அவ் எழுத்து மிகுமே. 62

எ–ரை: யகர ஈற்றுப் பெயர், வேற்றுமைப் பொருட் புணர்ச்சி யிடத்து, வல்லெழுத்து முதலாகிய சொற்கள் வந்தால், அவ்வல்லெழுத்து மிக்கு முடியும்.

### 'தாய்' என்னும் சொல்

**358.** 'தாய்' என் கிளவி இயற்கை ஆகும். 63

எ–ரை: 'தாய்' என்னும் சொல் வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக் கண், வல்லெழுத்து முதலாகிய சொற்கள் வந்தால், அவ்வல்லெழுத்து மிக்கு முடியாது இயல்பாய் முடியும்.

### 'தாய்' என்னும் சொல்லுக்கு வேறொரு முடிபு

**359.** மகன் வினை கிளப்பின், முதல் நிலை இயற்றே. 64

எ–ரை: மகன் பகைமையைத் ('வினை') 'தாய்' என்னும் சொல்லோடு இயைத்துக் கூறினால், முற்கூறியபடி வல்லெழுத்து மிக்கு முடியும்.

### யகர ஈற்றிற்கு வேறொரு முடிபு

**360.** மெல்லெழுத்து உறழும் மொழியுமார் உளவே. 65

எ–ரை: யகர இறுதிப் பெயருள், வல்லெழுத்து முதன் மொழிகள் வரும் ஆயின், வல்லெழுத்து மிக்கு முடியாமல், மெல்லெழுத்து மிகுந்து உறழ்ந்து முடியும் மொழிகளும் உள்ளன.

## அல்வழியில் யகர ஈறு

**361.** 'அல்வழி எல்லாம் இயல்பு' என மொழிப. 66

எ–ரை: 'யகர ஈற்று அல்வழிப்புணர்ச்சி அனைத்தும் இயல்பு முடிவே' என்று மொழிவர் புலவர்.

## வேற்றுமையில் ரகர ஈறு

**362.** ரகார இறுதி யகார இயற்றே 67

எ–ரை: ரகார இறுதிப் பெயர், அல்வழி வேற்றுமை என்ற இருவழிகளிலும், யகர ஈற்றுப் பெயர்க்குக் கூறப்பட்ட தன்மையை உடையதாய், வல்லெழுத்து முதன்மொழி வந்த இடத்து, அவ்வல்லெழுத்து மிக்கு முடியும்.

## 'ஆர்', 'வெதிர்', 'சார்', 'பீர்' என்னும் சொற்களின் முடிபுகள்*

**363.** ஆரும், வெதிரும், சாரும், பீரும்,
மெல்லெழுத்து மிகுதல் மெய் பெறத் தோன்றும். 68

எ–ரை: 'ஆர்', 'வெதிர்', 'சார்', 'பீர்' என்னும் சொற்கள் அவ்வாறு வல்லெழுத்து முதலாகிய சொற்கள் வரும் இடத்து, மெல்லெழுத்து மிகுந்து முடிதல் உண்மையாகத் தோன்றும்.

## 'சார்' முன் 'காழ்' வரும் இடத்து முடிபு

**364.** 'சார்' என் கிளவி காழ்வயின் வலிக்கும் 69

எ–ரை: 'சார்' என்னும் சொல் நிலைமொழியாக நிற்பக் 'காழ்' (விதை) என்னும் சொல் வருமொழியாக வரும் இடத்து. இடையில் வல்லெழுத்து மிக்கு முடியும்.

---

* 'ஆர்' முதலிய நான்கும் மரப்பெயர்கள்.

## 'பீர்' என்னும் சொல்லுக்குப் பிறிதொரு முடிபு

365. 'பீர்' என் கிளவி அம்மொடு சிவணும். 70

எ–ரை: 'பீர்' என்னும் சொல், மெல்லெழுத்தே அன்றி 'அம்' என்னும் சாரியை பெற்றும் வரும்.

## வேற்றுமையில் லகர ஈறு

366. லகார இறுதி னகார இயற்றே. 71

எ–ரை: லகார இறுதிப்பெயர், வல்லெழுத்து முதன் மொழி வரும் இடத்து, னகார இறுதிப் பெயரின் தன்மையைப் (லகரம் நகரமாகத் திரிதல்) பெற்று முடியும்.

## லகர ஈற்றிற்கு மேலும் ஒரு முடிபு

367. மெல்லெழுத்து இயையின், னகாரம் ஆகும். 72

எ–ரை: லகர ஈற்றுப் பெயர், மெல்லெழுத்து முதன் மொழி வரும் இடத்து, னகரமாகத் திரிந்து முடியும்.

## அல்வழியில் லகர ஈறு

368. 'அல்வழி எல்லாம் உறழ்' என மொழிப. 73

எ–ரை: லகர ஈற்று அல்வழிக்கெல்லாம் திரிதல் முடிபு வல்லெழுத்தினோடு உறழ்ந்து முடியும்.

## லகர மெய் ஆய்தம் ஆதல்

369. 'தகரம் வருவழி ஆய்தம் நிலையலும்
புகர் இன்று' என்மனார் புலமையோரே. 74

எ–ரை: தகரம் முதலாகிய மொழி வரும் இடத்து, லகரம் நகரமாய்த் திரிதலே அன்றி, ஆய்த எழுத்தாகத் திரிந்து நிற்றலும் குற்றம் இல்லை; கொள்ளத் தக்கதே என்று அறிவுடையோர் கூறுவர்.

## லகர ஈற்றிற்கு வேறொரு முடிபு

**370.** நெடியதன் இறுதி இயல்புமார் உளவே. 75

எ–ரை: நெட்டெழுத்தை அடுத்து வரும் லகர ஈற்றுப் பெயர், திரியாது இயல்பாகி முடிதலும் உண்டு.

## 'நெல்', 'செல்', 'கொல்', 'சொல்' என்னும் சொற்கள் ஏற்கும் முடிபுகள் *

**371.** நெல்லும், செல்லும், கொல்லும், சொல்லும்,
அல்லது கிளப்பினும் வேற்றுமை இயல. 76

எ–ரை: 'நெல்' 'செல்', 'கொல்', 'சொல்' என்னும் சொற்கள், அல்வழி இடத்தும், வேற்றுமை இடத்தில் லகரம் நகரமாய்த் திரிந்து முடிந்ததைப் போன்று திரிந்து முடியும்.

## 'இல்' என்னும் 'இன்மை' உணர்த்தும் சொல் **

**372.** 'இல்' என் கிளவி இன்மை செப்பின்,
வல்லெழுத்து மிகுதலும், ஐஇடை வருதலும்,
இயற்கை ஆதலும், ஆகாரம் வருதலும்,
கொளத் தகு மரபின் ஆகு இடன் உடைத்தே. 77

எ–ரை: 'இல்' என்னும் சொல் 'இல்லாமை'யை உணர்த்தும் இடத்து, வல்லெழுத்து முதலாகிய மொழிகள் வருமாயின், அவ்வல்லெழுத்து மிகுந்து முடிதலும், இடையில் ஐகாரம் வருதலும், இரண்டும் வராது இயல்பாய் முடிதலும், இடையில் ஆகாரம் வந்துமுடிதலும் கொள்ளக் கூடிய தன்மையை உடையது.

---

* 'செல்' – இடி

** 'இல்' என்பது வாழும் 'இல்லத்தையும்' குறிக்கும் அதனை விலக்கி, ஒரு பொருளின் இல்லாமையைக் (negative) குறிக்க வரும் இடத்து இவ்விதிகளைப் பெறும் என்பது கருத்து.

## 'வல்' என்னும் சொல் முடிபுகள்

**373.** 'வல்' என் கிளவி தொழிற்பெயர் இயற்றே. 78

எ–ரை: 'வல்' என்னும் சொல் ('வல்' சூதாடு காய்) அல்வழி, வேற்றுமை என்ற ஈரிடங்களிலும், ஞகார ஈற்றுத் தொழிற் பெயர்க்குக் கூறப்பட்ட முடிபுகளை ஏற்கும். (296 ஆம் நூற்பாவை நினைந்து கூறியது.)

**374.** நாயும் பலகையும் வரூஉம் காலை,
ஆவயின் உகரம் கெடுதலும் உரித்தே;
உகரம் கெடு வழி அகரம் நிலையும். 79

எ–ரை: 'வல்' என்னும் சொல்லின் முன், 'நாய்' 'பலகை' என்பன வருமொழிகளாக வரும் இடத்து, அவ்விடத்து உகரம் கெடாது நிற்றலே அன்றிக் கெட்டு முடியவும் பெறும்; அவ்வாறு உகரம் கெடும் இடத்து அகரம் நிலைபெற்று முடியும்.

## * 'பூல்', 'வேல்', 'ஆல்' என்னும் லகர ஈற்று மரப்பெயர்கள்

**375.** 'பூல்', 'வேல்', என்றா 'ஆல்' என் கிளவியொடு
ஆ முப் பெயர்க்கும் அம் இடை வருமே. 80

எ–ரை: 'பூல்', 'வேல்', 'ஆல்' – என்ற மூன்று பெயர்களுக்கும், வேற்றுமைப் புணர்ச்சிக்கண், திரிபு இல்லை; 'அம்' என்ற சாரியை இடையில் வந்து முடியும்.

---

பூல் + குறிச்சி > பூலங்குறிச்சி எனவரும் பேச்சு வழக்கில் 'பூலாங் குறிச்சி' என்று வரும். 'பூல் மரங்கள் நிறைந்த சிற்றூர்' என்பது பொருள்; தமிழ் நாட்டுள் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் இப் பெயர் உடைய ஊர் இன்றும் உள்ளது. தொல்காப்பிய வழக்கின் தொன்மையும் செம்மையும் இதனால் இனிது உணரப்படும். இவ்வாறே 'காட்டுப்பாடி' – 'காட்பாடி' என்றும், 'கோட்டுச்சேரி' 'கோட்சேரி' என்றும் இடைப்பட்ட குற்றியலுகரம் மேலும் குறுகும் என்ற தொல்காப்பிய விதி இன்றும் தமிழகத்து மக்கள் நாவிடை நிற்றல் அறிந்து மகிழத்தக்கது; (மொழி மரபு – 37)

## லகர ஈற்றுத் தொழிற் பெயர்

**376.** தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல 81

எ–ரை: லகர ஈற்றுத் தொழிற் பெயர்கள் எல்லாம் ஞகார ஈற்றுத் தொழிற் பெயர்களுக்குக் கூறப்பட்ட முடிபையே ஏற்கும். (296 ஆம் நூற்பாப் பொருளை நினைந்தது)

## 'வெயில்' என்னும் சொல்

**377.** 'வெயில்' என் கிளவி மழை இயல் நிலையும். 82

எ–ரை: 'வெயில்' என்னும் சொல், 'மழை' என்னும் சொல்லைப் போல 'அத்தும்' 'இன்னும்' ஆகிய சாரியைகளைப் பெற்று முடியும்.

## வேற்றுமையில் வகர ஈறு

**378.** சுட்டு முதல் ஆகிய வகர இறுதி
முற்படக் கிளந்த உருபு இயல் நிலையும். 83

எ–ரை: சுட்டெழுத்துக்களை முதலாக் உடைய வகர ஈற்றுப் பெயர்கள். வேற்றுமைப் புணர்ச்சிக்கண் உருபு புணர்ச்சியைப் போன்று 'வற்று' ச் சாரியை பெற்று முடியும்.

## அச்சுட்டுப் பெயர்களுக்கு அல்வழி முடிபுகள்

**379.** வேற்றுமை அல்வழி ஆய்தம் ஆகும். 84

எ–ரை: சுட்டு முதலாகிய அம்மூன்று வகர ஈற்றுப் பெயர்களும், அல்வழியில் ஆய்த எழுத்தாகத் திரிந்து முடியும்.

**380.** மெல்லெழுத்து இயையின், அவ் எழுத்து ஆகும். 85

எ–ரை: அப்பெயர்கள், மெல்லெழுத்து முதன் மொழிகள் வரும் இடத்து அவ்வம் மெல்லெழுத்தாகத் திரிந்து முடியும்.

**381.** 'ஏனவை புணரின், இயல்பு' என மொழிப. 86

எ–ரை: இடையெழுத்து, உயிர்எழுத்து முதன்மொழிகள் வரும் ஆயின், அச்சுட்டுப் பெயர் இறுதி இயல்பாக முடியும் என்று கூறுவர் (அறிஞர்).

## வகர ஈற்று உரிச்சொல் முடிபு

**382.** ஏனை வகரம் தொழிற்பெயர் இயற்றே. 87

எ–ரை: சுட்டு வகரம் நீங்கிய 'தெவ்' என்னும் உரிச்சொல் வகர ஈறு ('தெவ்' –பகைமை) தொழிற் பெயர்க்குக் கூறப்பட்ட தன்மையை உடையது. (உகரமும் வல்லெழுத்தும் பெற்று முடிதல்)

## வேற்றுமையில் ழகர இறுதி

**383.** ழகார இறுதி ரகார இயற்றே. 88

எ–ரை: ழகர இறுதியை உடைய பெயர் வல்லெழுத்து முதன்மொழி வரும் ஆயின், வேற்றுமைக் கண் ரகார இறுதிக்கு ஓதிய இயல்பாகிய வல்லெழுத்து மிகுந்து முடிதலைப் பொருந்தும்.

## 'தாழ்' என்னும் சொல் முன் 'கோல்' வரின் பெறும் முடிபு*

**384.** 'தாழ்' என் கிளவி கோலொடு புணரின்,
அக்கு இடை வருதல் உரித்தும் ஆகும். 89

எ–ரை: 'தாழ்' என்னும் சொல், 'கோல்' என்னும் சொல்லோடு புணருமிடத்து, வல்லெழுத்து மிக்கு வருதலேயன்றி 'அக்கு' என்னும் சாரியை இடையே வருதலும் உரியது.

---

* தாழ் + கோல் 'தாழக்கோல்' 'தாழ்கோல்' என்ற இருவகை முடிபுகளும் வரும். 'தாழைத் திறக்கும் கோல்' என்று நச்சினார்க்கினியர் பொருள் காண்பர். 'தாழ்ப்பாள்' எனப் பேச்சுத் தமிழில் இச்சொல்லமைப்பு வாழ்வு பெற்றுள்ளமை கருதத்தக்கது.

## 'தமிழ்' என்னும் சொல்–முடிபு *

385. 'தமிழ்' என் கிளவியும் அதன் ஓரற்றே. 90

எ–ரை: 'தமிழ்' என்னும் சொல்லும் வல்லெழுத்து மிக்கு முடிதலே அன்றி, 'அக்கு' என்னும் சாரியை இடையே வந்து முடிதலைப் பெறும்.

## 'குமிழ்' என்னும் மரப்பெயர் முடிபு

386. 'குமிழ்' என் கிளவி மரப்பெயர் ஆயின்,
'பீர்' என் கிளவியொடு ஓர் இயற்று ஆகும். 91

எ–ரை: 'குமிழ்' என்னும் சொல் மரப்பெயராகவரின், முன்னே 'பீர்' என்னும் மரப்பெயர்க்குக் கூறப்பட்ட மெல்லெழுத்துப் பெறுதலும், சில இடங்களில் 'அம்' சாரியை பெறுதலும் உரியது.

## 'பாழ்' என்னும் சொல் முடிபு

387. 'பாழ்' என் கிளவி மெல்லெழுத்து உறழ்வே. 92

எ–ரை: 'பாழ்' என்னும் சொல், வல்லெழுத்து முதன்மொழியாயின், வல்லெழுத்துப் பெறுதலும், மெல்லெழுத்துப் பெற்று உறழ்ந்து முடிதலும் பெறும்.

## 'ஏழ்' அன் பெறுதல்

388. 'ஏழ்' என் கிளவி உருபு இயல் நிலையும் 93

எ–ரை: 'ஏழ்' என்னும் எண்ணுப்பெயர் உருபு புணர்ச்சிக்கண் கூறிய இயல்பில் நிலைபெற்று ('அன்' சாரியை பெற்று) முடியும்.

---

* 'தமிழ்' என்ற சொல்லாட்சியும் தொல்காப்பியப் புலமை உணர்த்துவது, 'தமிழ்' என்ற பெயர் வழக்கு வேற்றுமொழியாளரால், 'திராவிடம்' எனக் கூறப்பட்டது என்பதும், 'திராவிடம்', 'தமிழ்' ஆயிற்று என்று கூறுவது பிழைவழக்கே என்பதும் இங்கு உணரத் தக்கவை.

## 'ஏழ்' என்னும் எண்ணுப் பெயர் ஏற்கும் முடிபுகள்

**389.** அளவும் நிறையும் எண்ணும் வரு வழி,
நெடுமுதல் குறுகலும், உகரம் வருதலும்,
கடி நிலை இன்றே ஆசிரியர்க்க. 94

எ–ரை: 'ஏழ்' என்னும் எண்ணுப் பெயரின் முன்னர், அளவுப் பெயரும் , நிறைப்பெயரும், எண்ணுப்பெயரும் வரும் இடத்து, முன்னின்ற நெடுமுதல் குறுகுதலும், உகரம் வருதலும் (ஏழ் > எழு) ஆகிய இருநிலைகளையும் நீக்கமாட்டார்கள் ஆசிரியர்கள்.

**390.** 'பத்து' என் கிளவி ஒற்று இடை கெடு வழி,
நிற்றல் வேண்டும் ஆய்தப் புள்ளி. 95

எ–ரை: 'ஏழ்' என்ற எண்ணுப் பெயருடன் 'பத்து' என்னும் சொல் புணரும் இடத்து, அப் 'பத்து' என்னும் சொல்லின் இடையே நின்ற தகர ஒற்றுக் கெடும்; அவ்விடத்து ஆய்தமாகிய புள்ளி நிற்றலை ஆசிரியன் விரும்பும்.

**391.** ஆயிரம் வரு வழி உகரம் கெடுமே. 96

எ–ரை: 'ஏழ்' என்னும் எண்ணுப்பெயர் நிலைமொழியாக, 'ஆயிரம்' என்னும் எண்ணுப் பெயர் வருமொழியாய் வரின், நெடு முதல் குறுகி நின்று உகரம் பெறாது முடியும்.

**392.** நூறு ஊர்ந்து வரூஉம் ஆயிரக்கிளவிக்குக்
வறிய நெடு முதல் குறுக்கம் இன்றே. 97

எ–ரை: 'நூறு' என்பது ஊர்ந்து வரும் ஆயிரம் ('நூறாயிரம்') வருமொழியாய் வரின், முன் கூறப்பட்டபடி நெடு முதல் குறுகுதலும், உகரம் பெறுதலும் இல்லை; ('ஏழ்' என இயல்பாக நிற்கும்).

**393.** 'ஐ, அம், பல்' என வரூஉம் இறுதி
அல் பெயர் எண்ணும் ஆயியல் நிலையும். 98

எ—ரை: 'ஐ', 'அம்', 'பல்' என்னும் இறுதிகளைக் கொண்ட 'தாமரை', 'வெள்ளம்', 'ஆம்பல்' என்னும் எண்ணுப் பெயர்கள் வருமொழியாக வரினும், நெடு முதல் குறுகி, உகரம் பெறாது, இயல்பாக நின்றே முடியும். *

**394.** உயிர் முன் வரினும், ஆயியல் திரியாது. 99

எ—ரை: உயிர் முதன் மொழிகள் வரும் இடத்தும் நெடு முதல் குறுகி உகரம் பெறாது முடியும் இயல்பே 'ஏழ்' உடையது.

## 'கீழ்' என்னும் சொல்

**395.** 'கீழ்' என் கிளவி உறழத் தோன்றும். 100

எ—ரை: 'கீழ்' என்னும் சொல்லின்முன், வல்லெழுத்து மிகுந்து முடிதலும், மிகாது முடிதலும் ஆகிய உறழ்ச்சி முடிபு தோன்றும்.

## வேற்றுமையில் ளகர ஈறு

**396.** ளகார இறுதி ணகார இயற்றே. 101

எ—ரை: ளகர இறுதிப் பெயர் வேற்றுமைப் பொருட் புணர்ச்சி இடத்து, ணகர இறுதிக்குக் கூறப்பட்ட தன்மையை உடையதாய், வன்கணம் வந்த வழி ணகரம் டகரமாகத் திரிந்து முடியும்.

## அதற்கு மற்றொரு முடிபு

**397.** மெல்லெழுத்து இயையின், ணகாரம் ஆகும் 102

எ—ரை: ளகர ஈறு மெல்லெழுத்து முதன் மொழிகள் வரும்போது ணகரமாகத் திரிந்து முடியும்.

---

* 'தாமரை', 'வெள்ளம்', 'ஆம்பல்' என்ற மூன்று பெயர்களும், 'தாமரை மலர்', 'நீர்த்திரள்', 'ஆம்பல் மலர் ஆகிய பொருட் பெயர்களைக் குறிக்காமல், பேரெண் ஒன்றைக் குறிக்கும் இடத்தேயே இவ்விதிகள் என்பதற்காக, 'அல்பெயர்' என்றார். இவை பழங்காலத்தே வழங்கிய பேரெண் பெயர்கள்.

## அல்வழியில் ளகர ஈறு

**398.** 'அல்வழி எல்லாம் உறழ்' என மொழிப. 103

எ-ரை: ளகர ஈற்று நிலைமொழி, அல்வழிப் பொருட்புணர்ச்சிக்கண் டகரமாகத் திரிந்து முடிதலும், திரியாது முடிதலும் ஆகிய உறழ்ச்சி முடிபைப் பெறும் என்று மொழிவர் அறிஞர்.

## அதற்கு மற்றொரு முடிபு

**399.** ஆய்தம் நிலையலும் வரை நிலை இன்றே,
தகரம் வருஉம் காலையான. 104

எ-ரை: ளகர ஈற்று நிலைமொழி, தகர முதன்மொழிகள் வரும்போது, ளகரம் டகரமாகத் திரிதலே அன்றி ஆய்த எழுத்தாகத் திரிந்து நிற்றலும் நீக்கும் நிலைமை உடையதன்று, கொள்ளப்படும்.

## அதற்கு வேறொரு முடிபு

**400.** நெடியதன் இறுதி இயல்பு ஆகுநவும்
வேற்றுமை அல் வழி வேற்றுமை நிலையலும்,
போற்றல் வேண்டும் மொழியுமார் உளவே. 105

எ-ரை: நெடிலைக் கொண்ட ளகர ஈற்று இறுதி, திரியாது இயல்பாக முடிவனவற்றையும், வேற்றமைஅல்லாத இடத்து வேற்றுமைக்குக் கூறப்பட்ட படி திரிந்து முடிவனவற்றையும் போற்றிக் கொள்ளுதல் வேண்டும்.

## ளகர ஈற்றுத் தொழிற்பெயர்

**401.** தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல. 106

---

* போற்றல் வேண்டும் – காத்துத் தழீஇக் கோடல் வேண்டும்" என்பது இளவழகனார் குறிப்பு. போற்றுதல்–பேணிக் கொள்ளுதல்; வழிபடுதல் என்பது பின்னே வந்த பொருட்சிறப்பு.

எ–ரை: ளகர ஈற்றுத் தொழிற்பெயர்கள் அனைத்தும், ஞகர ஈற்றுத் தொழிற்பெயர்க்கு உரைக்கப்பட்ட தன்மையைப் பெறும்.

## 'இருள்' என்னும் சொல் முடிபு

**402.** 'இருள்' என் கிளவி வெயில் இயல் நிலையும். 107

எ–ரை: 'இருள்' என்னும் ளகர ஈற்றுச் சொல், 'வெயில்' என்னும் லகர ஈற்றுச் சொல்லிற்குக் கூறப்பட்ட இயல்பைப் பெற்று நிற்கும். ('அத்து' 'இன்' என்ற சாரியைகளைப் பெற்று முடிதல்)

## 'புள்', 'வள்' என்னும் சொற்களின் முடிபுகள்

**403.** புள்ளும் வள்ளும் தொழிற்பெயர் இயல. 108

எ–ரை: 'புள்' 'வள்' என்னும் இரு சொற்கள் * அல்வழி வேற்றுமை என்னும் இருவழிப்புணர்ச்சிகளிலும், ஞகர ஈற்றுத் தொழிற்பெயர்க்குக் கூறப்பட்ட இயல்பைப் பெற்று முடியும்.

## 'மக்கள்' என்னும் சொல்

**404.** 'மக்கள்' என்னும் பெயர்ச்சொல் இறுதி
தக்கவழி அறிந்து வலித்தலும் உரித்தே. 109

எ–ரை: 'மக்கள்' என்னும் பெயர்ச்சொல்லின் இறுதி, தக்க இடம் அறிந்து வல்லொற்றாகத் திரிந்து முடிதலும் உண்டு. **

---

* 'புள்' – பறவை; 'வள்' – வார்.

** "தக்கவழி என்றது அம்மக்கள் உடம்பு உயிர் நீங்கிய காலத்து" என்பது உரையாசிரியர் குறிப்பு. "வலித்தலும் உரித்து" என்ற உம்மையால் இயல்பாதலே பெரும்பான்மை வழக்கு என்று கொள்ளுதல் வேண்டும். உயிர் நீங்காத காலத்தும் இவ்வழக்குச் சிறுபான்மையாகக் கொள்ளத் தக்கதே என்பது 'உரித்து' என்பதனால் உணர்த்தப்பட்டது. தம்காலத்தும், தம் காலத்திற்கு முன்னும் உள்ள உயர்ந்தோர் வழக்குக் கருதியே தொல்காப்பியர் இவ்வாறு கூறியிருக்க வேண்டும் என்பது உணர்ந்து கொள்ளத்தக்கது.

## 3. இவ்வியலுக்குப் புறனடை

405. உணரக் கூறிய புணர் இயல் மருங்கின்,
கண்டு செயற்கு உரியவை கண்ணினர் கொளலே! 110

எ–ரை: இவ்வியலுள் உணர்ந்து கொள்ளுமாறு கூறப்பட்ட செய்திகள், மொழி இயற்கையும், வழக்கியலும் கண்டு, அவற்றையும் கருதிக் கொள்ளுதற்கு உரியவையாம்.

## இயல் – 9

# குற்றியலுகரப் புணரியல்

(குற்றியலுகர ஈறுகளுக்கு உரிய புணர்ச்சி
இலக்கணத்தை விரித்துரைக்கும் இயல்)

## 1. குற்றியலுகரத்தின் இயல்பு

### குற்றியலுகரத்தின் பெயரும் முறையும் தொகையும்

406. ஈர்–எழுத்து ஒருமொழி, உயிர்த்தொடர், இடைத்தொடர்
ஆய்தத்தொடர்மொழி, வன்றொடர். மென்றொடர்'
ஆயிரு மூன்றே – உகரம் குறுகு இடன். 1

எ–ரை: இரண்டு எழுத்தால் ஆகிய ஒருமொழி (நெடில் தொடர்), உயிர் மேல் வரும் மெய்யைத் தொடர்ந்து நின்ற சொல், இடை ஒற்று மேல் வரும் மெய்யைத் தொடர்ந்து நின்ற சொல், ஆய்தம் ஆகிய எழுத்துமேல் வரும் மெய்யைத் தொடர்ந்து நின்ற சொல், வல்லொற்று மேல் வரும் மெய்யைத் தொடர்ந்து நின்ற சொல், மெல்லொற்று மேல் வரும் மெய்யைத் தொடர்ந்து நின்ற சொல் ஆகிய அவ் ஆறு சொல்லுமே குறுகிய உகரம் ஆகிய குற்றியலுகரம், குறுகி வரும் இடங்கள் ஆகும்.

### அவற்றுள், ஈரொற்றுத் தொடர்கள்

407. அவற்றுள்,
ஈர்–ஒற்றுத் தொடர்மொழி இடைத்தொடர் ஆகா. 2

எ–ரை: முன் நூற்பாவில் கூறப்பட்ட ஆறு இடங்களுள், இரண்டு ஒற்றுக்கள் இடையே தொடர்ந்து நிற்கும் சொற்களில், இடையின ஒற்றுக்கள் தொடர்ந்து காணப்பட்டாலும், அவை இடைத்தொடர் ஆகமாட்டா. (ஈர்க்கு 'மொய்ம்பு' முதலியவற்றில், வரும் இரண்டு ஒற்றுக்கள் காண்க. இறுதியெழுத்தை அடுத்துத் தொடர்கின்ற வல்லின மெல்லின ஒற்றுக்களைக்

கொண்டு 'வன்தொடர் என்றோ 'மென்றொடர்' என்றோ கூறுக என்பது கருத்து.)

### அல்வழி, வேற்றுமை ஆகிய இருவழிகளிலும் குற்றுகரம்

**408.** அல்லது கிளப்பினும், வேற்றுமைக்கண்ணும்,
எல்லா இறுதியும் உகரம் நிறையும். 3

எ—ரை: அல்வழி, வேற்றுமை என்ற இரண்டு புணர்ச்சிக் கண்ணும், மேற்கூறப்பட்ட எல்லாத் தொடர்மொழிகளின் இறுதியிலும், ஈற்றுக் குற்றுகரம் நிற்கும்.

### அதற்கு மற்றும் ஒரு முடிபு

**409.** வல்லொற்றுத் தொடர்மொழி, வல்லெழுத்து வரு வழி
தொல்லை இயற்கை நிலையலும் உரித்தே. 4

எ—ரை: வல்லொற்றுத் தொடர்மொழிக் குற்றியலுகரம், வல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய் வரும் இடத்துத் தன் பழைய முழுமாத்திரை இயற்கையைப் பெற்று நிற்கும். (தொல்லை — பழமை.)

## 2. குற்றியலிகரம்

**410.** யகரம் வருவழி இகரம் குறுகும்;
உகரக் கிளவி துவரத் தோன்றாது. 5

எ—ரை: யகர முதலாகிய மொழி, வரு மொழியால் வரும் இடத்து, நிலைமொழிக் குற்றுகர எழுத்து முற்றத் தோன்றாது; அவ்விடத்து ஓர் இகரம் வந்து அரை மாத்திரை பெற்றுக் குறுகி நிற்கும். (அதுவே 'குற்றியலிகரம்' எனப்படும்.)

## 3. குற்றியலுகரப் பொதுப் புணர்ச்சி

### நெடிற்றொடர், உயிர்த்தொடர்

411. ஈர்–எழுத்து மொழியும், உயிர்த்தொடர் மொழியும்,
வேற்றுமை ஆயின், ஒற்று இடை இன மிக,
தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி. 6

எ–ரை: ஈரெழுத்து ஒரு மொழிக் குற்றியலுகர ஈற்றிற்கும், உயிர்த்தொடர் மொழிக் குற்றியலுகர முற்றிற்கும், வேற்றுமைப் புணர்ச்சி இடத்து இனமாகிய ஒற்று இடையில் மிக, வல்லெழுத்து மிகுந்து தோன்றுதலை ஆசிரியர் விரும்புவர்.

### அதற்கு வேறு முடிவும் விதித்தல்

412. ஒற்று இடை இனம் மிகா மொழியுமார் உளவே;
அத் திறத்து இல்லை, வல்லெழுத்து மிகலே. 7

எ–ரை: மேற்கண்ட நூற்பாவில் கூறியபடி, இடையில் இன ஒற்று மிக்கு முடியாத மொழிகளும் உள்ளன; அப்போது வல்லெழுத்து மிகுந்து முடிதலும் அவ்விடத்து இல்லை. (இன ஒற்று மிகாத நிலையில் வல்லெழுத்து மிகாத நிலையும் உண்டு என்பது கருத்து.)

### இடைத்தொடர், ஆய்தத்தொடர்

413. ‘இடையொற்றுத் தொடரும், ஆய்தத் தொடரும்,
நடை ஆயியல’ என்மனார் புலவர். 8

எ–ரை: இடைத்தொடர்க் குறிறியலுகரமும், ஆய்தத் தொடர்க் குற்றியலுகரமும், புணர்ச்சிக்கண் இனவொற்று இடையில் மிகாது; வல்லெழுத்தும் மிகாது.

### வன்றொடர், மென்றொடர்

414. வன்றொடர் மொழியும், மென்றொடர் மொழியும்,
வந்த வல்லெழுத்து ஒற்று இடை மிகுமே;

மெல்லொற்றுத் தொடர்மொழி மெல்லொற்று எல்லாம்
வல்லொற்று இறுதி, கிளை ஒற்று, ஆகும். 9

எ–ரை: வன்றொடர்க் குற்றியலுகர ஈனும், மென்றொடர்க் குற்றியலுகர ஈனும், வருமொழியாய் வந்த வல்லெழுத்தினது ஒற்று இடையில் மிக்கு முடியும்; அவ்விரண்டினுள் மெல்லொற்றுத் தொடர்மொழிக்கண் நின்ற மெல்லொற்று எல்லாம் இறுதிக்கண் நின்ற வல்லொற்றும், அதற்கு இனமாகிய மெல்லொற்றும் ஆகி முடியும்.

## குற்றியலுகர ஈற்று மரப்பெயர்கள்

415. மரப்பெயர்க்கிளவிக்கு அம்மே சாரியை 10

எ–ரை: குற்றியலுகர ஈற்று மரப்பெயர்களுக்கு 'அம்' என்ற சாரியை உரியது.

## வேறு ஒரு முடிவு

416. மெல்லொற்று வலியா மரப்பெயரும் உளவே. 11

எ–ரை: மெல்லொற்று வல்லொற்றாகத் திரியாது மெல்லொற்றாகவே முடியும் மரப்பெயர்ச் சொற்களும் உள்ளன.

## நெடிற்றொடர் வன்றொடர்

417. ஈர்–எழுத்து மொழியும், வல்லொற்றுத் தொடரும்,
அம் இடை வரற்கும் உரியவை உளவே
அம் மரபு ஒழுகும் மொழிவயினான. 12

எ–ரை: ஈரெழுத்து ஒருமொழிக் குற்றியலுகரமும், வன்றொடர் மொழிக் குற்றியலுகரமும் முன்னே கூறப்பட்ட முடிவுகளுடன், 'அம்' என்னும் சாரியை, அத்தன்மை நிகழும் மொழிகளிடத்து, வந்து முடிதற்கும் உரியன.

## மென்றாடர் மொழிகளுள் சில

418. ஒற்று நிலை திரியாது அக்கொடு வரூஉம்
அக் கிளைமொழியும் உள' என மொழிப 13

எ-ரை: மென்றொடர் மொழிக் குற்றியலுகரங்களுள், வல்லெழுத்து வரும் வழி மெல்லொற்று வல்லொற்றாகத் திரிந்து முடியாமல், 'அக்கு' என்னும் சாரியை பெற்று முடிவனவும் உள்ளன என்றும் கூறுவர் அறிஞர்.

### எண்ணுப் பெயர்கள்

419. எண்ணுப்பெயர்க் கிளவி உருபு இயல் நிலையும் 14

எ-ரை: குற்றியலுகர இறுதியை உடைய எண்ணுப் பெயர்கள் நிலைமொழியாக நிற்க, வல்லெழுத்து முதன் மொழிகள் வருமொழியாக வரும்போது உருபியலில் கூறப்பட்டவாறு 'அன்' சாரியை பெற்று முடியும்.

## 4. குற்றியலுகரச் சிறப்புப் புணர்ச்சி

### 'வண்டு' 'பெண்டு' என்னும் சொற்கள்

420. வண்டும் பெண்டும் இன்னொடு சிவணும். 15

எ-ரை: 'வண்டு', 'பெண்டு' என்னும் சொற்கள் 'இன்' சாரியையோடு பொருந்தி முடியும்.

### 'பெண்டு' என்பதற்கு மேலும் ஒரு முடிவு

421. 'பெண்டு' என் கிளவிக்கு அன்னும் வரையார். 16

எ-ரை: 'பெண்டு' என்னும் சொல்லிற்கு 'இன்' சாரியையோடு, 'அன்' சாரியை வருதலையும் நீக்கமாட்டார் அறிவுடையோர்.

### வினாப் பெயர், சுட்டுப்பெயர்

422. 'யாது' என் இறுதியும், சுட்டு முதல் ஆகிய
ஆய்த இறுதியும், உருபு இயல் நிலையும். 17

எ-ரை: 'யாது' என்னும் இறுதியும், 'அஃது' 'இஃது' 'உஃது' ஆகிய சுட்டெழுத்துக்களை முதலாக உடைய ஆய்தத் தொடர்மொழிக் குற்றியலுகர

இறுதியும் உருபியலில் கூறப்பட்டவாறு, முன்னையது 'அன்' சாரியை பெற்று முடியும்; ஏனைய மூன்றும் 'அன்' சாரியை பெற்று ஆய்த எழுத்துக் கெடும்.

## அல்வழியில் சுட்டுப்பெயர்

**423.** **முன் உயிர் வரும் இடத்து, ஆய்தப் புள்ளி**
**மன்னல் வேண்டும், அல்வழியான** 18

எ–ரை: சுட்டெழுத்துக்களை முதலாக உடைய ஆய்தத் தொடர் மொழிக் குற்றியலுகர ஈற்றின் முன்னர், உயிர் முதலாகிய வருமொழிகள் வரும்போது, அல்வழி இடத்து, ஆய்த எழுத்துக் கெடாது நிலைபெறுதல் வேண்டும்.

## அல்வழியில் சுட்டுப்பெயர்க்கு வேறு முடிபு

**424.** **ஏனை முன் வரினே, தான் நிலை இன்றே.** 19

எ–ரை: சுட்டெழுத்துக்களை முதலாக உடைய ஆய்தத் தொடர் மொழிக் குற்றியலுகர ஈற்றின் முன்னர், உயிர் அல்லாத எழுத்துக்களை உடைய வருமொழிகள் வரும்போது. அல்வழிக்கண் ஆய்த எழுத்துக் கெட்டு முடியும்.

## பொதுவாக அல்வழியில் குற்றியலுகர ஈறுகள்

**425.** **அல்லது கிளப்பின், எல்லா மொழியும்**
**சொல்லிய பண்பின் இயற்கை ஆகும்.** 20

எ–ரை: குற்றியலுகர ஈற்று எல்லாமொழிகளும், வல்லெழுத்து முதலாகிய மொழிகள் வருமிடத்து அல்வழியில் இயல்பு முடிபே பெறும்.

## வன்றொடர்

**426.** **வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து மிகுமே.** 21

எ–ரை: வல்லொற்றுத் தொடர்மொழி அல்வழிப்புணர்ச்சி இடத்தும் வல்லெழுத்து மிகுந்து முடியும்.

## 'ஆங்கு' 'யாங்கு' முதலிய மென்றொடர் மொழிகள்

427. சுட்டுச் சினை நீடிய மென்றொடர் மொழியும்.
யா வினா முதலிய மென்றொடர் மொழியும்,
ஆயியல் திரியா, வல்லெழுத்து இயற்கை. 22

எ—ரை: சுட்டாகிய பகுதி நீண்ட மென்றொடர்க் குற்றியலுகர இறு தியும், ('ஆங்கு' 'ஈங்கு', 'ஊங்கு') வினாப் பொருளை உணர்த்தும் யாவினை முதலாகக் கொண்ட மென்றொடர்க் குற்றியலுகர இறுதியும், வல்லெழுத்துப் பெற்று முடியும் இயல்பாகிய அத்தன்மையிலிருந்து மாறுபடாது; மிகும்.

## 'யாங்கு' என்பதற்கு மேலும் ஒரு முடிபு

428. யா வினா மொழியே இயல்பும் ஆகும். 23

எ—ரை: 'யாங்கு' என்னும் மென்றொடர் மொழி முற்கூறியவாறன்றி இயல்பாகவும் முடிதலும் உண்டு. (மிக்கு முடிவதே பெரும்பான்மை வழக்கு என்பது உம்மையால் விளங்கும்)

## அவற்றிற்கு நிலைமொழிச் செய்கை

429. அந் நால் மொழியும் தம் நிலை திரியா. 24

எ—ரை: 'ஆங்கு', 'ஈங்கு', 'ஊங்கு', 'யாங்கு' என்னும் நான்கு மொழிகளும், வல்லெழுத்து வரும் இடத்து, தம்மெல்லொற்றாய தன்மை திரிந்து வல்லொற்று ஆகாது முடியும்; மெல்லொற்றுத் திரியாது வல்லொற்று மிக்கு முடிவனவும் கொள்ளத் தக்கது.

## 'உண்டு' என்னும் சொல்*

430. 'உண்டு' என் கிளவி உண்மை செப்பின்,
முந்தை இறுதிமெய் யொடும் கெடுதலும்,

---

* 'உண்டு' என்பது, வினைக்குறிப்பாகவும் நிற்கும் ஆதலின் அதனை விலக்கி, 'உண்மைப் பண்பை' உணர்த்தும் இடத்தையே இவ்விதி உரித்து என்றார்.

மேல் நிலை ஒற்றே ளகாரம் ஆதலும்,
ஆ முறை இரண்டும் உரிமையும் உடைத்தே –
வல்லெழுத்து வரூஉம் காலையான. 25

எ–ரை: 'உண்டு என்னும் சொல், உண்மைத் தன்மையை உணர்த்தி நிற்கும் ஆயின், முன்னர் நின்ற குற்றியலுகரம் தான் ஏறி நின்ற மெய்யொடும் கெடுதலும் அதற்கு மேல் நின்ற ணகர ஒற்று ளகர ஒற்று ஆதலும் ஆகிய அம்முறைமையினை உடைய இரண்டு நிலையும் உரித்து; வல்லெழுத்து முதன்மொழியாய் வருங்காலத்து, இவ்வாறின்றி முன் நின்ற நிலையில் கேடும், திரிபும் இன்றி நிற்றலும் உடையது.

## திசைப்பெயர்

431. இரு திசை புணரின் ஏ இடை வருமே. 26

எ–ரை: குற்றியலுகரத்தை இறுதியிலே கொண்ட திசைப்பெயர், மற்றொருதிசைப் பெயரோடு புணரும் போது இடையில் ஏகாரம் பெற்று வரும்.

## திசைப்பெயர் முன் திசைப்பெயர்

432. 'திரிபு வேறு கிளப்பின், ஒற்றும் உகரமும்
கெடுதல் வேண்டும்' என்மனார் புலவர்;
ஒற்று மெய் திரிந்து னகாரம் ஆகும்,
தெற்கொடு புணரும் காலையான. 27

எ–ரை: இருபெரும் திசைச் சொற்களும் இருபெருந் திசைகளைக் குறிக்காமல், அவற்றினின்றும் திரிந்து கோணத் திசைகளைக் குறிப்பின் நிலைமொழி இறுதியும், தான் ஏறிநின்ற மெய்யும், அதன் முன்னர் உள்ள ஒற்றும் கெடும் என்பர் புலவர்; 'தெற்கு' என்பது நிலைமொழியாயின், இறுதி மெய்யுடன் கெட, நகர ஒற்றுத் தன் வடிவம் திரிந்து னகர ஒற்றாய் நிற்கும்.

## 5. குற்றியலுகர எண்ணுப் புணர்ச்சி

### பத்துடன் எண்ணுப்பெயர்

433. ஒன்று முதல் ஆக எட்டன் இறுதி
எல்லா எண்ணும் பத்தன் முன் வரின்,
குற்றியலுகரம் மெய்யொடும் கெடுமே;
முற்ற இன் வரூஉம், இரண்டு அலங்கடையே. 28

எ—ரை: 'ஒன்று' முதல் 'எட்டு' இறுதியாக உள்ள எல்லா எண்ணுப் பெயர்களும் 'பத்து' என்னும் எண்ணுப் பெயரின் முன்வரின், அப் 'பத்து' என்னும் சொல்லின் கண் உள்ள குற்றியலுகரம் தான் ஏறிநின்ற மெய்யுடன் கெடும்; 'இரண்டு' அல்லாத ஏனைய பெயர்கள் வரும் இடத்து இடையில், 'இன்' சாரியை வந்து புணரும்.

### 'பத்' தின் முன் 'இரண்டு'

434. 'பத்தன் ஒற்றுக் கெட, னகாரம் இரட்டல்
ஒத்தது' என்ப– 'இரண்டு வரு காலை'. 29

எ—ரை: 'பத்து' என்பதன் கண் உள்ள தகர மெய்கெட, அவ்விடத்து னகர ஒற்று இரட்டித்து வரும் இயல்பு 'இரண்டு' என்னும் சொல் வருமொழியாயின் ஒத்தது என்பர்.

### 'பத்'தின் முன் 'ஆயிரம்'

435. ஆயிரம் வரினும், ஆயியல் திரியாது. 30

எ—ரை: 'பத்து' என்பதன் முன் 'ஆயிரம்' என்ற எண்ணுப் பெயர் வரும்போதும், ஈறு கெட்டு 'இன்' பெறுதல் உரியது.

### 'பத்' தின் முன் நிறைப்பெயர், அளவுப்பெயர்

436. நிறையும் அளவும் வரூஉம் காலையும்,
குறையாது ஆகும், 'இன்' என் சாரியை. 31

எ–ரை: 'பத்து' என்ற அப்பெயர் முன் நிறைப்பெயர்களும் அளவுப் பெயர்களும் வரும் இடத்தும் 'இன்' சாரியை பெற்றே முடியும்.

## எண்ணுப் பெயரோடு 'பத்து'

**437.** 'ஒன்று முதல் ஒன்பான் இறுதி முன்னர்,
நின்ற பத்தன் ஒற்றுக் கெட, ஆய்தம்
வந்து இடை நிலையும் இயற்கைத்து' என்ப;
கூறிய இயற்கை குற்றியலுகரம்,
ஆறன் இறுதி அல் வழியான. 32

எ–ரை: 'ஒன்று' முதல் 'ஒன்பது' இறுதியாக உள்ள குற்றியலுகர ஈற்றுச் சொற்கள் 'ஆறு என்பது அல்லாத இடத்து' நிலைமொழி களாகவும், 'பத்து' வருமொழியாகவும் வரின், 'பத்து' என்பதன் தகர ஒற்றுக்கெட, அவ்விடத்து 'ஆய்தம்', இடையே வந்து நிலைபெறும் இயல்பை உடையது என்பர்.

## அதன்கண் 'ஒன்று' 'இரண்டு' என்னும் சொற்கள்

**438.** முதல் ஈர் எண்ணின் ஒற்று ரகரம் ஆகும்;
உகரம் வருதல் ஆவயினான. 33

எ–ரை: முதல் இரண்டு எண்களாகிய 'ஒன்று', 'இரண்டு' ஆகியவற்றுடன், 'பத்து'ப் புணரும் இடத்து அவற்றின் ஒற்றுக்களாகிய னகரமும் ணகரமும் ரகர ஒற்றாய்த் திரிந்து நிற்கும்; உகரம் அதன்பின் வரும்.

## 'இரண்டு' என்பதற்கு மற்றும் ஒரு முடிபு

**439.** இடை நிலை ரகரம் 'இரண்டு' என் எண்ணிற்கு,
நடை மருங்கு இன்றே, பொருள்வயினான. 34

எ–ரை: 'இரண்டு' என்னும் எண்ணுப் பெயர்க்கு இடைநின்ற ரகரம் அம்மொழி பொருள் ஆகும் இடத்து நடக்கும் இடமின்றிக் கெடும்.

## 'மூன்று' 'ஆறு' என்னும் சொற்கள்

**440.** மூன்றும் ஆறும் நெடு முதல் குறுகும் 35

எ—ரை: 'மூன்று' 'ஆறு' ஆகிய இரண்டும் நெடுமுதல் குறுகி முடியும்.

## 'மூன்று' என்பதற்கு மேலும் ஒரு முடிபு

**441.** மூன்றன் ஒற்றே பகாரம் ஆகும். 36

எ—ரை: மூன்றின் னகர ஒற்றுப் பகர ஒற்றாகி முடியும் *

## 'நான்கு' என்னும் சொல்

**442.** நான்கன் ஒற்றே றகாரம் ஆகும். 37

எ—ரை: 'நான்கு' என்பதன்கண் நின்ற னகர ஒற்று றகர ஒற்றாய் முடியும்.

## 'ஐந்து' என்னும் சொல்

**443.** ஐந்தன் ஒற்றே மகாரம் ஆகும். 38

எ—ரை: 'ஐந்து' என்பதன்கண் நின்ற நகர ஒற்று மகர ஒற்றாய் முடியும்.

## 'எட்டு' என்னும் சொல்

**444.** எட்டன் ஒற்றே ணகாரம் ஆகும். 39

எ—ரை: 'எட்டு' என்பதன்கண் நின்ற டகர ஒற்று ணகர ஒற்றாய் முடியும்.

## 'ஒன்பது' என்னும் சொல்

**445.** ஒன்பான் ஒகரமிசைத் தகரம் ஒற்றும்;
முந்தை ஒற்றே ணகாரம் இரட்டும்;
பஃது என் கிளவி ஆய்த பகரம் கெட,
நிற்றல் வேண்டும், ஊகாரக் கிளவி;
ஒற்றிய தகரம் றகரம் ஆகும். 40

எ—ரை: 'ஒன்பது' நிலைமொழியாக நின்று 'பஃது' என்ற வருமொழியோடு

---

* 440, 441 – ஆம் நூற்பாக்களை ஒன்றாகக் கொள்வர் சிலர்.

புணரும் இடத்து, 'ஒன்பது' என்னும் சொல்லின் ஒகரத்திற்கு முன் தகர ஒற்றுத் தோன்றும்; ஒகரத்திற்கு முன்னர் நின்ற னகர ஒற்று இரண்டு ணகர ஒற்றாக மாறும்; வருமொழியாகிய 'பஃது' என்னும் சொல்லின் பகரமும், ஆய்தமும் கெட, அவ்விடத்து ஊகாரம் வந்து தோன்றும்; வருமொழி இறுதிக் குற்றியலுகரத்து முன்னர் உள்ள தகர ஒற்று றகர ஒற்றாய் நிற்கும்.

## அளவு, நிறைப் பெயர்கள்

**446. அளந்து அறி கிளவியும், நிறையின் கிளவியும்.**
**கிளந்த இயல, தோன்றும் காலை.** 41

எ–ரை: 'ஒன்று' முதல் 'ஒன்பது' வரை நிலைமொழியாய் நிற்ப, அளவுப் பெயரும், நிறைப்பெயரும் வருமொழியாயின் அவை முற்கூறப்பட்ட உருமாற்றங்களையே அடையும்.

## அதன்கண் 'மூன்று' என்னும் சொல்

**447. மூன்றன் ஒற்றே வந்தது ஒக்கும்.** 42

எ–ரை: அளவுப்பெயரும், நிறைப்பெயரும் வருமொழியாயின், 'மூன்று' என்பதன் ஒற்று வருமொழி முதலோடு ஒத்த ஒற்றாய்த் திரிந்து முடியும்.

## அதன்கண் 'ஐந்து' என்னும் சொல்

**448. ஐந்தன் ஒற்றே மெல்லெழுத்து ஆகும்.** 43

எ–ரை: அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வருமொழியாயின், 'ஐந்து' என்பதன் ஒற்று வருமொழி முதலின் இனமெல்லெழுத்தாகித் திரிந்து முடியும்.

## அவ்விரண்டின் மேல் முடிபுகட்கு வரையறை

**449. க, ச, த, ப, முதல் மொழி வரூஉம் காலை** 44

எ–ரை: மூன்றன் ஒற்று வந்தது ஒப்பதும், ஐந்தன் ஒற்றுமெல்லொற்று ஆவதும், அவ் அளவுப் பெயர் ஒன்பதினும், க, ச, த, ப, என்ற வன்கணம் முதலாகிய மொழிகள் வந்த இடத்தேயே.

## 'எட்டு' என்னும் சொல்

**450.** ந, ம, வ, என்னும் மூன்றொடு சிவணி
அகரம் வரினும், எட்டன் முன் இயல்பே. 45

எ–ரை: 'எட்டு' என்பதன் முன்னர், முன்னே கூறப்பட்ட வல்லெழுத்துக்களோடு ந, ம, வ, அ, என்பன வரின், டகரம் ணகரமாய் வேறும் ஒரு வேறுபாடு இன்றி முடியும்.

## 'ஐந்து' 'மூன்று' என்பவற்றிற்கு ஒத்த முடிபு

**451.** ஐந்தும் மூன்றும் ந, ம, வரு காலை,
வந்தது ஒக்கும் ஒற்று இயல் நிலையே. 46

எ–ரை: 'ஐந்து' 'மூன்று' என்னும் எண்ணுப் பெயர்களோடு நகர மகர முதலாகிய மொழிகள் வருமொழிகளாக வந்து புணரும் இடத்து, நிலைமொழிக்கண் நின்ற ஒற்று, வருமொழி முதல் வந்த ஒற்றோடு ஒத்த ஒற்றாகி முடியும்.

## 'மூன்று' 'நான்கு' 'ஐந்து' முன் வகர முதன்மொழி

**452.** மூன்றன் ஒற்றே வகாரம் வரு வழி,
தோன்றிய வகாரத்து உரு ஆகும்மே. 47

எ–ரை: வகரம் முதலாகிய மொழி வரும் இடத்து, 'மூன்று' என்பதன் னகர ஒற்று, வருமொழிக்கண் தோன்றிய வகர ஒற்றாக மாறும்.

**453.** நான்கன் ஒற்றே லகாரம் ஆகும். 48

எ–ரை: அவ்வாறு வரும்போது, 'நான்கு' என்பதன் னகர ஒற்று லகர ஒற்றாகத் திரிந்து முடியும்.

**454.** ஐந்தன் ஒற்றே முந்தையது கெடுமே. 49

எ–ரை: அவ்வாறு வரும்போது, 'ஐந்து' என்பதன் நகர ஒற்று முன்னின்ற வடிவுகெட்டு முடியும்.

## 'ஒரு' 'இரு' முன் உயிர்முதன்மொழிகள்

**455.** 'முதல் ஈர் எண்ணின் முன் உயிர் வரு காலை,
தவல்' என மொழிப – 'உகரக் கிளவி'
முதல் நிலை நீடல், ஆவயினான. 50

எ–ரை: 'ஒரு' 'இரு' என முடிந்து நின்ற இரண்டு எண்ணின் முன்னர், உயிர் முதலாகிய மொழிகள் வரும் இடத்து, நிலை மொழிக்கண் நின்ற உகரம் கெடும் என்று கூறுவர். அறிஞர்; அவ்விடத்து அவ்விரண்டு எண்களின் முதல் எழுத்துக்கள் நீண்டு முடியும்.

## 'மூன்று' 'நான்கு' 'ஐந்து' முன் உயிர் முதன்மொழிகள்

**456.** மூன்றும், நான்கும், 'ஐந்து' என் கிளவியும்,
தோன்றிய வகரத்து இயற்கை ஆகும் 51

எ–ரை: 'மூன்று', 'நான்கு', 'ஐந்து', ஆகியவற்றின் முன் உயிர் முதலாகிய மொழிகள் வரும் இடத்து, வருமொழி முதலில் வகரம் வரும் போது பெற்ற இயல்பே போன்று, மூன்றின் கண் வகர ஒற்றாகியும், நான்கின்கண் நகர ஒற்றாகியும், ஐந்தின்கண் ஒற்றுக் கெட்டும் முடியும்.

## 'மூன்று' என்பதற்கு மேலும் ஒரு முடிபு

**457.** மூன்றான் முதல் நிலை நீடலும் உரித்தே–
'உழக்கு' என் கிளவி வழக்கத்தான. 52

எ–ரை: 'உழக்கு' என்பது வழக்கின்கண் வருமொழியாயின், 'மூன்று' என்பதன்கண் முதலில் உள்ள உயிர் முடிதலும் உரியதே.

## 'ஆறு' என்பதற்கும் அம் முடிபே

**458.** 'ஆறு' என் கிளவி முதல் நீடும்மே. 53

எ–ரை: 'ஆறு' என்றும் எண்ணுப் பெயரும் 'அகல்' 'உழக்கு' என்பன வருமொழியாயின், முன்னர்க் குறுகி நின்ற முதல் எழுத்து நீண்டு முடியும்.




## 'ஒன்பது' என்னும் சொல்

**459.** ஒன்பான் இறுதி உருபு நிலை திரியாது
இன் பெறல் வேண்டும் சாரியை மொழியே. 54

எ–ரை: 'ஒன்பது' என்னும் எண்ணுப் பெயரின் இறுதிக் கண் நின்ற குற்றிய லுகரம், அளவும் நிறையும் ஆகிய பெயர்கள் வருமொழியாய் வரின், தன் வடிவம் திரியாது நின்று 'இன்' என்ற சாரியை மொழியைப்பெற்று முடிதல் வேண்டும்.

## 'ஒன்று' முதல் 'ஒன்பது' எண்களின் முன் 'நூறு'

**460.** நூறு முன் வரினும், கூறிய இயல்பே. 55

எ–ரை: 'ஒன்று' முதல் 'ஒன்பது' வரை உள்ள எண்களின் முன், 'நூறு' என்னும் எண்ணுப்பெயர் வரினும் 'பத்து' என்பதனோடு புணரும் வழிக் கூறப்பட்ட தன்மை பெற்று முடியும்.

## 'அதன்கண் மூன்று' என்னும் சொல்

**461.** மூன்றன் ஒற்றே நகாரம் ஆகும். 56

எ–ரை: அவ்விடத்து, 'மூன்று' என்பதில் நின்ற னகர ஒற்று நகர ஒற்றாகும்.

## அதன்கண் 'நான்கு', 'ஐந்து' என்பன

**462.** நான்கும் ஐந்தும் ஒற்று மெய் திரியா. 57

எ–ரை: அவ்விடத்து, 'நான்கு', 'ஐந்து' என்பனவற்றின் ஒற்றுக்கள் நிலை திரியாது முடியும்.

## அதன்கண் 'ஒன்பது' என்னும்சொல்

**463.** ஒன்பான் முதல் நிலை முந்து கிளந்தற்றே;
முந்தை ஒற்றே ளகாரம் இரட்டும்;
நூறு என் கிளவி நகாரம் மெய் கெட,

ஊ ஆ ஆகும் இயற்கைத்து என்ப;
ஆயிடை வருதல் இகார ரகாரம்;
ஈறு மெய் கெடுத்து மகாரம் ஒற்றும். 58

எ–ரை: 'ஒன்பது' நிலைமொழியாக நிற்க 'நூறு' வருமொழியாக வரும் இடத்து. 'ஒன்பது' என்பதன் முதனிலை எழுத்து முன் கூறப்பட்ட நிலைமையை உடையதாய்த் தகர ஒற்றைப் பெறும்; அதன் பின்னே உள்ள பகரம் கெட, னகர ஒற்று ளகர ஒற்றாக இரட்டும், 'நூறு' என்பதன் நகரம் கெட, 'ஊ' 'ஆ' வாக மாறும் அவ்விடத்து ஆகாரத்திற்கும் இறுதி எழுத்திற்கும் இடையில் ஓர் இகரமும் ரகரமும் வருதல் வேண்டும்; இறுதியில் நின்ற 'று' கெட்டு அவ்விடத்தில் மகர ஒற்று வருதல் வேண்டும். (ஒன்பது > தொன்பது < தொள்ள் > தொளில் ஆஇரம் > தொள்ளாயிரம்)

## 'ஒன்று' 'இரண்டு' முன் ஆயிரம்

**464.** ஆயிரக் கிளவி வரூஉம் காலை,
முதல் ஈர் எண்ணின் உகரம் கெடுமே. 59

எ–ரை: 'ஒன்று' முதல் எண்களுக்கு முன் 'ஆயிரம்' என்ற சொல் வருமொழியாக வரும் ஆயின், 'ஒரு' 'இரு' என்னும் எண்ணின் கண் பெற்று நின்ற உகரம் கெட்டு 'ஓர்' 'இர்' 'ஈர்' நிற்கும்.

## அவ்விரண்டிற்கும் மேலும் ஒரு முடிபு

**465.** முதல் நிலை நீடினும் மானம் இல்லை. 60

எ–ரை: 'ஒரு'. 'இரு' என்பவற்றின் முதல் எழுத்து அவ்விடத்து நீண்ட ாலும் குற்றம் இல்லை.

## 'மூன்று' முன் 'ஆயிரம்'

**466.** மூன்றன் ஒற்றே வகாரம் ஆகும். 61

எ–ரை: 'மூன்று' என்பதன்கண் நின்ற னகர ஒற்றுவகர ஒற்றாகத் திரிந்து முடியும்.

## 'நான்கு' முன் 'ஆயிரம்'

**467.** நான்கன் ஒற்றே லகாரம் ஆகும். 62

எ—ரை: 'நான்கு' என்னும் எண்ணின் கண் நின்ற னகர ஒற்று லகர ஒற்றாகத் திரிந்து முடியும்.

## 'ஐந்து' முன் 'ஆயிரம்'

**468.** ஐந்தன் ஒற்றே யகாரம் ஆகும். 63

எ—ரை: 'ஐந்து' என்பதன்கண் நின்ற நகர ஒற்று யகர ஒற்றாகத் திரிந்து முடியும்.

## 'ஆறு' முன் 'ஆயிரம்'

**469.** ஆறன் மருங்கின் குற்றியலுகரம்
ஈறு மெய் ஒழியக் கெடுதல் வேண்டும். 64

எ—ரை: 'ஆறு' என்பதன்கண் நின்ற குற்றியலுகரம் நெடுமுதல் குறுகி 'அறு' என முற்றியலுகரமாய் நிற்றலின், அது தனக்குப் பற்றுக்கோடாய் நின்ற நகர ஒற்றுக்கெடாது நிற்ப, முற்றுகரமாகிய தான் கெட்டுப் புணர்தல் வேண்டும்.

## 'ஒன்பது' முன் 'ஆயிரம்'

**470.** ஒன்பான் இறுதி உருபு நிலை திரியாது,
இன்பெறல் வேண்டும், சாரியை மரபே. 65

எ—ரை: 'ஒன்பது' என்னும் எண்ணின் இறுதிக் குற்றியலுகரம், தன் வடிவுநிலை திரிந்து கெடாது; சாரியையாகிய மரபினை உடைய 'இன்', பெற்று முடிதல் வேண்டும்.

## 'ஒன்று' முதல் 'ஒன்பது' – எண் முன் 'நூறாயிரம்'

**471.** நூறாயிரம் முன் வரூஉம் காலை,
நூறன் இயற்கை முதல் – நிலைக்கிளவி. 66

எ–ரை: 'ஒன்று' முதல் 'ஒன்பது' வரை உள்ள எண்களின் முன், 'நூறாயிரம்' என்ற சொல் வருமொழி ஆயின் 'ஒன்று' என்னும் முதனிலைக் கிளவி 'நூறு' என்பது வருமொழியானபோது பெற்ற தன்மையைப் பெறும். (அஃது 'ஒரு' என மாற்றம் பெறல்) வழிநிலைக் கிளவியாகிய 'இரண்டு' முதலிய எண்கள் வேறுபாடு எய்தியும், எய்தாது இயல்பாயும், முடியும்.

## 'நூறு' முன் 'ஒன்று' முதல் 'ஒன்பது' வரை

472. 'நூறு' என் கிளவி ஒன்று முதல் ஒன்பாற்கு
ஈறு சினை ஒழிய, இன ஒற்று மிகுமே. 67

எ–ரை: 'நூறு' என்பதன் முன், 'ஒன்று' முதல் ஒன்பது வரை உள்ள எண்ணுப் பெயர்கள் வருமொழியாக வரும் இடத்து, நிலைமொழி ஈற்றின் உறுப்பாகிய குற்றியலுகரம் நிற்ப, அதன் பற்றுக் கோடால் நின்ற ஒற்றின் இனவொற்று மிக்கு முடியும்.

## 'நூறு' முன் 'ஒருபத்து' முதலியன

473. அவை ஊர் பத்தினும் அத் தொழிற்று ஆகும் 68

எ–ரை: 'ஒன்று' முதல் 'ஒன்பது' வரை உள்ள சொற்களைப் பொருந்தி வந்த 'பத்து' என்னும் சொல் 'நூறு' என்று சொல்லின் முன் வரின், முன் கூறப்பட்டவாய், 'ஈறு சினை ஒழிய இன ஒற்று மிகுதல்' முடிபையே பெற்று முடியும்.

## 'நூறு' என்பதன் முன் அளவுப்பெயர், நிறைப் பெயர்

474. 'அளவும் நிறையும் ஆயியல் திரியா;
குற்றியலுகரமும் வல்லெழுத்து இயற்கையும்,
முன் கிளந்தன்ன' என்மனார் புலவர். 69

எ–ரை: 'நூறு' என்பதனோடு. அளவுப் பெயர்களும். நிறைப் பெயர்களும் வந்து புணருங்கால், முன்னே கூறியஇயல்பில் திரியாது. இன ஒற்று மிக்கு முடியும். குற்றியலுகரமும். வல்லொற்றுத் தொடரின் ,இயற்கையாகிய வல்லெழுத்து மிகுதியும் முன்னே கூறப்பட்ட தன்மையவாய் முடியும்.

## ஒருபத்து முதலியவற்றின் முன் 'ஒன்று' முதல் 'ஒன்பது' வரை உள்ள எண்கள்

475. ஒன்று முதல் ஆகிய பத்து ஊர் கிளவி
ஒன்று முதல் ஒன்பாற்கு ஒற்று இடை மிகுமே;
நின்ற ஆய்தம் கெடுதல் வேண்டும். 70

எ–ரை: 'ஒருபஃது' 'இருபஃது', முதலிய எண்ணுப் பெயர்கள், 'ஒன்று' முதல் 'ஒன்பது' வரை உள்ள எண்கள் வருமொழியாக வரும் இடத்து, அவ்விடத்து 'ஆய்தம் கெட்டு முடிதல் வேண்டும்'. இன ஒற்றாகிய தகர ஒற்று ஒன்று இடையே மிகுதலும் வேண்டும்.

## அவற்றின் முன் 'ஆயிரம்'

476. ஆயிரம் வரினே, இன் ஆம், சாரியை;
ஆவயின் ஒற்று இடை மிகுதல் இல்லை. 71

எ–ரை: 'ஒருபஃது', 'இருபஃது' முதலியவற்றின் முன் 'ஆயிரம்' வரும் ஆயின், 'இன்' சாரியை பெறும், அப்போது இடையில் தகர ஒற்று மிகாது ஆய்தம் கெடும்.

## அவற்றின் முன் அளவுப்பெயர், நிறைப்பெயர்

477. அளவும் நிறையும் ஆயியல் திரியா. 72

எ–ரை: 'ஒரு பஃது', 'இருபஃது' முதலியவற்றின் முன்னர், அளவுப்பெயர், நிறைப்பெயர்கள் வரும் ஆயின், அவை முன்னே கூறப்பட்ட தன்மையில் திரியா. (ஆய்தம் கெட்டு, ஒற்று மிகாது. 'இன்' சாரியை பெற்று வருதல்)

## 'ஒன்று' என்னும் எண் முன் பொருட்பெயர்

478. முதல் நிலை எண்ணின் முன் வல்லெழுத்து வரினும்
ஞ, ந, ம–த் தோன்றினும், ய, வ, வந்து இயையினும்,
முதல் நிலை இயற்கை என்மனார் புலவர். 73

எ–ரை: 'ஒன்று' என்னும் சொல்லின் முன், வல்லெழுத்து முதலாகிய மொழிகள் வரினும், ஞ, ந, ம, க்களாகிய மெல்லெழுத்து முதலாகிய மொழிகள் வரினும், ய, வ க்களாகிய இடையெழுத்து முதலாகிய மொழிகள் வரினும் முன்னே கூறியமுடிபு நிலைத் தன்மைகளைப் பெறும், ('ஒன்று' என்பதற்கு இவ்வாறு கூறினமையின், ஏனை எண்கள் இவ்வேறுபாடுகளை எய்தியும், எய்தாதும் முடியும்)

## உயிர் முதன் மொழியும் யகர முதன் மொழியும் வரும் இடத்துப் பெறும் விதி

**479.** **அதன் நிலை, உயிர்க்கும் யா வரு காலை.**
**முதல் நிலை ஒகரம் ஓ ஆகும்மே;**
**ரகரத்து உகரம் துவரக் கெடுமே.** 74

எ–ரை: ஒரு என்னும் எண்ணிற்கு உயிர் முதன்மொழியும், யாதென்னும் மொழியும் வருமொழியாய் வரும் இடத்து. அம் முதன்மொழியின் தன்மை, ஒகரம் ஓகாரமாய் நீளலும், ரகரத்து மேல் நின்ற உகரம் முற்றக்கெட்டு முடிதலும் ஆகிய நிலையைப் பெறும்.

## 'இரண்டு' முதல் 'ஒன்பது' வரை உள்ள எண்களின் முன் 'மா' என்னும் சொல்

**480.** **இரண்டு முதல் ஒன்பான் இறுதி முன்னர்,**
**வழங்கு இயல் 'மா' என் கிளவி தோன்றின்,**
**மகர அளவொடு நிகரலும் உரித்தே.** 75

எ–ரை: 'இரண்டு' முதல் 'ஒன்பது' வரை உள்ள எண்ணுப் பெயர்ச் சொற்களின் முன், வழக்கின்கண் நடைபெற்றுள்ள 'மா' என்னும் அளவுப் பெயர்ச் சொல்வரின், மகர முதலாகிய அளவுப் பெயர் இயல்புவிதி பெறுதலும் உரியது. (ஒத்துத்திரிந்து முடிதலும் திரியாது முடிதலும் ஆகிய தன்மைகளைப் பெறும்.)

## 6. அதிகாரப் புறனடை

### புள்ளி மயங்கியலுள் கூறப்படாது ஒழிந்து நின்ற, மெய்யீறுகளின் செய்யுள் முடிபு

481. 'ல, ன' என வரூஉம் புள்ளி இறுதி முன்,
உம்மும் கெழுவும் உளப்படப் பிறவும்,
அன்ன மரபின் மொழியிடைத் தோன்றி.
செய்யுள்–தொடர்வயின் மெய் பெற நிலையும்–
வேற்றுமை குறித்த பொருள் வயினான். 76

எ–ரை: லகரம், ணகரம் என்று கூற வரும் புள்ளியீற்றுச் சொற்களின் முன்னர், 'உம்' என்னும் சாரியையும் 'கெழு' என்னும் சாரியையும், உட்பட பிற சாரியையும் அத்தகைய மரபினைக் கொண்ட மொழியிடத்துத் தோன்றிச் செய்யுள் தொடர்ச்சிக்கண், வேற்றுமைப் பொருள் வழியில், நிலைபெறும்.

### எழுத்ததிகாரத்திற் புணர்க்கப்படாத சொற்கள்

482. உயிரும் புள்ளியும் இறுதி ஆகிய
குறிப்பினும் பண்பினும் இசையினும் தோன்றி,
நெறிப் பட வாராக் குறைச்சொற் கிளவியும்,
உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்
ஐம் பால் அறியும் பண்பு தொகு மொழியும்,
'செய்யும், செய்த' என்னும் கிளவியின்
மெய் ஒருங்கு இயலும் தொழில் தொகு மொழியும்
தம் இயல் கிளப்பின் தம் முன் தாம் வரூஉம்
எண்ணின் தொகுதி உளப்படப் பிறவும்,
அன்னவை எல்லாம் மருவின் பாத்திய;
புணர் இயல் நிலையிடை உணரத் தோன்றா. 77

எ–ரை: (1) உயிரும், புள்ளியும் ஈறாக நிற்பதொரு சொல்லாகிக் குறிப்பினாலும், இடையினாலும், பண்பினாலும் பிறந்து, ஒரு நெறிப்பட வாராத குறைந்த சொற்களாகிய உரிச் சொற்களும்.

(2) உயர்திணை, அஃறிணை என்னும் அவ்விரண்டு இடங்களிலும் உளவாகிய ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று பல என்னும் ஐந்து பால்களையும் அறிதற்குக் காரணமாகிய பண்புகொள் பெயர் தொகுத்து நிற்கும் தொகைச் சொற்களும்,

(3) 'செய்யும்' 'செய்த' என்னும் பெயரெச்சச் சொற்களினுடைய காலம் காட்டும் 'உம்' 'அ' என்ற விகுதிகள் ஒரு சொல்லிடத்துச் சேர நடக்கும் புடைபெயர்ச்சி தொக்கு நிற்கும் மொழிகளும்,

(4) தம் இயல்பு கூறுமிடத்து நிலை மொழியும் வருமொழியும் ஆக வாராது 'தம்முன்னர்த் தாமே வந்து நிற்கும் எண்ணுப்பெயர்களது தொகுதியும்',

உளப்படப் பிறவும் எல்லாம், உலகத்து மருவி நடந்த வழக்கின் பகுதியைத் தம் இலக்கணமாக உடையன; ஒன்றோடு ஒன்று புணருதல் நடந்த தன்மை விளங்கத் தோன்றாதன. (இவை இவ்வதிகாரத்துப் புணர்க்கப் படாத சொற்களாம்.)

## எழுத்ததிகாரத்திற்குப் புறனடை

**483.** 'கிளந்த அல்ல செய்யுளுள் திரிநவும்,
வழங்கு இயல் மருங்கின் மருவொடு திரிநவும்,
விளம்பிய இயற்கையின் வேறுபடத் தோன்றின்
வழங்கு இயல் மருங்கின் உணர்ந்தனர் ஒழுக்கல்,
நான் மதி நாட்டத்து!' என்மனார் புலவர். 78

எ–ரை: முன்னே சொல்லப்படாத சொற்கள் செய்யுளிடத்துத் திரிந்து முடிவனவும், இருவகை வழக்கும் நடக்குமிடத்து மருவுதலோடு திரிந்து முடிவனவும், முன்னர்ச் சொல்லிய இலக்கண முறையினின்றும் வேறுபடத் தோன்றுமாயின் அவற்றை நல்ல அறிவினது ஆராய்ச்சியினால் வைத்து வழக்கு முடிந்து நடக்குமிடத்து முடிவு வேறுபாடுகளை அறிந்து நடத்துக என்று புலவர் கூறுவர்.

# சொல் அதிகாரம்

## இயல் – 1

## கிளவியாக்கம்

(எழுத்துக்கள் பொருள் தரும் முறையில்
சொற்கள் ஆகும் நிலையை உயர்த்தும் இயல்)

### 1. திணை

#### உயர்திணையும் அஃறிணையும்

**484.** 'உயர்திணை' என்மனார், 'மக்கட் சுட்டே',
'அஃறிணை' என்மனார், 'அவர் அல பிறவே'
ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே. 1

எ–ரை: 'மக்கள்' என்று சுட்டப்படுவோரை 'உயர் திணை' என்று கூறுவர் அறிஞர்; மக்கள் அல்லாத பிறவற்றை 'அஃறிணை' என்று கூறுவர்; அவ்விரு திணைகளின் மேலும் சொற்கள் நிகழும்.

### 2. பால்

#### உயர்திணையில் மூன்று பால் பகுப்பு

**485.** ஆடூஉ அறிசொல், மகடூஉ அறி சொல்,
பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி,
அம் முப் பாற் சொல் உயர்திணையவ்வே. 2

எ–ரை: ஆண் மகனை அறியும் சொல்லும், பெண் மகளை அறியும் சொல்லும், பலரை அறியும் சொல்லோடு பொருந்தி, அம்முப்பகுதிச் சொல்லும் உயர்திணைக்குரியனவாம்.

## அஃறிணை இரண்டு பால் பகுப்பு

**486.** ஒன்று அறி சொல்லே, பல அறி சொல், என்று
ஆயிரு பாற் சொல் அஃறிணையவ்வே. 3

எ–ரை: ஒரு பொருளை அறியும் சொல்லும் பலவற்றை அறியும் சொல்லும் என அவ்விருவகைச் சொற்களும் அஃறிணைக்குரியனவாம்.

## 'பேடி' முதலிய சொற்கள் இல்வகுப்பில் அடங்குமாறு

**487.** பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர் நிலைக் கிளவியும்,
தெய்வம் சுட்டிய பெயர் நிலைக் கிளவியும்,
'இவ்' என அறிவியும் அந்தம் தமக்கு இலவே;
உயர்திணை மருங்கின் பால் பிரிந்து இசைக்கும். 4

எ–ரை: உயர்திணையிடத்துப் பெண்மைத் தன்மை குறித்த ஆண்மை திரிந்த பெயர்ச் சொல்லும், தெய்வத்தைக் குறித்த பெயர்ச் சொல்லும், இவையென்றும் தம் பொருளைத் தனியே உணரும் இறுதியினைக் கொண்டு இயலாது; உயர்திணையிடத்து அவ்வவற்றிற்கு உரிய பாலாய்த் திரிந்து வழங்குவனவாம்.

## ஆண்பால் உணர்த்தும் ஈறு

**488.** னஃகான் ஒற்றே ஆடூஉ அறி சொல். 5

எ–ரை: னகரமாகிய ஒற்றை ஈற்றில் உடைய சொல் ஆடவர்களை உணர்த்தும் சொல்லாம்.

## பெண்பால் உணர்த்தும் ஈறு

**489.** ளஃகான் ஒற்றே மகடூஉ அறி சொல். 6

எ–ரை: ளகரமாகிய ஒற்றை ஈற்றில் உடைய சொல் பெண்டிரை உணர்த்தும் சொல்லாம்.

## பலர்பாலை உணர்த்தும் ஈறு

**490.** ரஃகான் ஒற்றும், பகர இறுதியும்,
மாரைக் கிளவி உளப்பட, மூன்றும்
நேரத் தோன்றும் பலர் அறி சொல்லே. 7

எ–ரை: ரகரமாகிய ஒற்று ஈறும், பகரமாகிய உயிர் மெய் ஈறும், 'மார்' என்னும் இடைச் சொல் ஈறும் ஆகிய மூன்றும், பலரை அறிவிக்கும் ஈறுகளாம்.

## ஒன்றன்பாலை உணர்த்தும் ஈறு

**491.** ஒன்று அறி கிளவி த, ற, ட, ஊர்ந்த
குன்றியலுகரத்து இறுதி ஆகும். 8

எ–ரை: ஒன்றின் அறியும் சொல்லாவது த, ற, ட என்னும் மெய்யெழுத்துக்களின் மேல் ஏறிவருகின்ற குற்றியலுகரத்தை ஈற்றில் உடைய சொல்லாம்.

## பலவின்பால் உணர்த்தும் ஈறு

**492.** அ, ஆ, வ, என வரூஉம் இறுதி
அப் பால் மூன்றே பல அறி சொல்லே. 9

எ–ரை: அ, ஆ, வ என்று வரும் ஈற்றினை உடைய அப்பகுதியை உடைய சொற்கள் பலவற்றை அறியும் சொற்களாம்.

## வினைச்சொற்களுக்கும் இவ்வீறுகள்

**493.** இரு திணை மருங்கின் ஐம் பால் அறிய
ஈற்றின் நின்று இசைக்கும் பதினோர் எழுத்தும்
தோற்றம்தாமே வினையொடு வருமே.

எ–ரை: 'உயர்திணை', 'அஃறிணை' என்னும் இரு திணையிடத்தும் உள்ள ஐந்துபாலும் அறிய அவ்வவ் வீற்றில் நின்று ஒலிக்கும் அப்பதினோரெழுத்தும், வினைச் சொற்களோடும் வந்து நின்று அவ்வப் பொருண்மையை உணர்த்தும்.

## பெயரும், வினையும் ஒத்தபாலிலேயே தோன்றல்

**494.** **வினையின் தோன்றும் பால் அறி கிளவியும்,**
**பெயரின் தோன்றும் பால் அறி கிளவியும்,**
**மயங்கல் கூடா; தம் மரபினவே.**

எ–ரை: முன்னே கூறப்பட்ட பதினோரெழுத்தையும் ஈற்றில் உடைய வினைபற்றி வருகின்ற பாலினை உணர்த்தும் சொல்லும், பெயர் பற்றி வருகின்ற பாலினை உணர்த்தும் சொல்லும் தம்முன் இயைந்து கடக்குங்கால் ஒருபாற் சொல் மற்றொரு பாற் சொல்லோடு கலந்து வராமல், தம்பாற் சொல்லோடேயே பொருந்தி நடக்கும்.

## 'பேடி' என்னும் சொல்லின் முடிபு

**495.** **ஆண்மை திரிந்த பெயர் நிலைக் கிளவி**
**ஆண்மை அறி சொற்கு ஆகு இடன் இன்றே.** 12

எ–ரை: ஆண்மை திரிந்த 'பேடி' என்னும் சொல், ஆண்மைத் தன்மையை அறியும் சொல்லுடன் சேர்த்துப் பொருந்தும் இடன் உடையது அன்று, பெண்மைத் தன்மையை அறியும் சொல்லுடனும், பலரை அறியும் சொல்லுடனும் பொருத்தி முடியும்.

## வினாவும் விடையும் அமையும் நெறி

**496.** **செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்!** 13

எ–ரை: வினாவையும், விடையையும் வழு வாராது பேணிக் கொள்க.

**497.** **வினாவும் செப்பே, வினா எதிர் வரினே** 14

எ–ரை: வினாவிற்கு மறுமொழியாய் வரின் வினாவும் விடையாக வருவதுண்டு.

**498.** **செப்பே வழீஇயினும் வரை நிலை இன்றே.**
**அப் பொருள் புணர்ந்த கிளவியான.** 15

எ–ரை: விடை நேர்விடையாக அமையாமல் வழுவிவரினும், அவ்விடைப்பொருள் கூடிய சொற்களானவிடத்து நீக்கப் படாது.

**499.** **செப்பினும் வினாவினும், சினை, முதல், கிளவிக்கு**
**அப் பொருள் ஆகும், உறழ் துணைப் பொருளே.** 16

எ–ரை: வினாவின் கண்ணும், விடையின் கண்ணும் சினைச் சொல்லுக்கும், முதற் சொல்லுக்கும் ஒத்த பொருளே வரும்.

## இயல்பு வழக்கும் தகுதி வழக்கும்

**500.** **தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்**
**பகுதிக் கிளவி வரை நிலை இலவே.** 17

எ–ரை: தகுதி பற்றியும் இயல்பு வழக்கு பற்றியும் நடக்கும் பகுதிப் பட்ட சொற்கள் நீக்கும் நிலைமை இல்லாதன, ஏற்றுக் கொள்ளப் பெறும்.

**501.** **இனச் சுட்டு இல்லாப் பண்பு கொள் பெயர்க் கொடை**
**வழக்கு ஆறு அல்ல; செய்யுள் ஆறே.** 18

எ–ரை: இனமாகிய பொருளைச் சுட்டுவதல்லாமல், பண்பு காரணமாக வழங்கப்படும் பெயர் உலகவழக்கின் கண் அமைவதன்று, செய்யுள் வழக்கின் க்ண் வழங்குவதாம்.

**502.** **இயற்கைப் பொருளை 'இற்று' எனக் கிளத்தல்!** 19

எ–ரை: தன்னுடைய தன்மையில் மாறுபடாது நின்ற பொருளை அதன் தன்மையைக் கூறும்இடத்து. 'இத்தகையது என்றே கூறுக; ஆக்கச் சொல்லும் காரணச் சொல்லும் பொருத்திக் கூறுக.

**503.** **செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்!** 20

எ–ரை: காரணத்தால் தன்மை திரிந்த செயற்கைப் பொருளை அத்திரிபைக் கூறும்இடத்து ஆக்கச் சொல்லைப் பொருத்திக் கூறுக.

**504.** **ஆக்கம்தானே காரணம் முதற்றே.** 21

எ—ரை: செயற்கைப் பொருளை ஆக்கச் சொல்லுடன் கூறுமிடத்துக் காரணத்தை முதலில் கூறிப் பின்னேயே ஆக்கச் சொல்லை இணைத்துக் கூறுக.

505. 'ஆக்கக் கிளவி காரணம் இன்றியும்
போக்கு இன்று' என்ப – 'வழக்கினுள்ளே.' 22

எ—ரை: காரணத்தை முதலில் கொண்டு வருக; எனக் கூறப்பட்ட ஆக்கச்சொல், காரணம் இன்றியும் வருதல் உலக வழக்கினுள் குற்றம் இல்லை என்றே கூறுவர் அறிஞர்.

## பாலின்கண் ஐயம் உள்ள சொற்களின் அமைப்புக்கள்

506. பால் மயக்கு உற்ற ஐயக் கிளவி
தான் அறி பொருள்வயின் பன்மை கூறல்! 23

எ—ரை: உயர்திணைப் பொருளில், 'ஆண்பாலோ', 'பெண்பாலோ' என்று பால் இன்னது என அறியப்படாத ஐயப் பொருளைத் தான் அறிந்த வகையில் அத்திணைப் பன்மையாற் கூறுதல் வேண்டும்.

507. 'உருபு' என மொழியினும், அஃறிணை பிரிப்பினும்,
இரு வீற்றும் உரித்தே, சுட்டும் காலை. 24

எ—ரை: 'உரு' எனச் சொல்லும் இடத்தும் ஒருமையும் பன்மையுமாகப் பிரிக்கப்படும் அஃறிணைப் பொதுச் சொல் இடத்தும், ஆகிய இவ்விரண்டு பகுதியினும் ஐயப்படும் இடத்துப் பொதுச் சொல்லாற் குறித்தல் உரியது.

## பால் துணிந்தபின் அமைப்புமுறை

508. 'தன்மை சுட்டலும் உரித்து' என மொழிப,
'அன்மைக் கிளவி வேறு இடத்தான.' 25

எ—ரை: ஐயப்பட்டுத் துணியும் இடத்து அன்மைச் சொல் துணியாப் பொருளிடத்து ஐயுற்ற பொருளின் உண்மைத் தன்மையைச் சுட்டிக் கூறுதலும்.

## வண்ணச் சினைச் சொல் அமைப்பு மரபு

509. அடை, சினை, முதல், என முறை மூன்றும் மயங்காமை
நடை பெற்று இயலும், வண்ணச் சினைச் சொல்.

எ–ரை: வண்ணச் சினைச் சொல்லினை உடைய முதற்சொல், பண்புச் சொல், சினைச் சொல், முதற்சொல் என்று கூறப்பட்ட முறைமையில் மாறுபடாது வழக்கின் கண் நடைபெறம், (செங்கால் நாரை: செம்மை–பண்புச் சொல்; கால்–சினைச்சொல், நாரை–முதற்சொல்– எனக் காண்க.)

### பால் வழுவமைதி

510. ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்,
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்,
வழக்கின் ஆகிய உயர் சொல் கிளவி;
இலக்கண மருங்கின் சொல் ஆறு அல்ல.

எ–ரை: ஒருவனையும் ஒருத்தியையும் உயர்த்திக் கூறும் பன்மைச் சொல்லும், ஒன்றனை உயர்த்திக் கூறும் பன்மைச் சொல்லும், உலக வழக்கின் கண் உயர்த்திச் சொல்லும் பன்மைச் சொற்கள்; இவை இலக்கண முறையினால் சொல்லும் நெறி உடையன அல்ல.

## 3. இடம்

### இடம் உணர்த்தும் சொற்கள்

511. ‘செலவினும், வரவினும், தரவினும், கொடையினும்,
நிலை பெறத் தோன்றும் அந் நாற் சொல்லும்
தன்மை, முன்னிலை, படர்க்கை, என்னும்
அம் மூஇடத்தும் உரிய’ என்ப.

எ–ரை: செலவு, வரவு, தரவு, கொண்ட ஆகிய பொருண்மை நிலைபெறத் தோன்றும் நாற்சொற்களும் தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூன்று இடத்திற்கும் உரியனவாம்.

## தன்மைக்கும் முன்னிலைக்கும் மட்டும் உரியவை

512. அவற்றுள்,
தரு சொல், வரு சொல், ஆயிரு கிளவியும்
தன்மை, முன்னிலை, ஆயிரிடத்த. 29

எ—ரை: மேல் நூற்பாவில் கூறப்பட்ட நான்கு சொற்களுள், தருதலைப் பற்றிய சொல்லும், வருதலைப் பற்றிய சொல்லும் தன்மை, முன்னிலை ஆகிய இரண்டு இடங்களுக்கு மட்டும் உரியனவாம்.

## படர்க்கைக்குரியவை

513. ஏனை இரண்டும் ஏனை இடத்த. 30

எ—ரை: முன் குறிக்கப் பட்டவற்றுள் ஏனைய இரண்டு சொற்கள் ஆகிய கொடைச் சொல்லும், செலவுச் சொல்லும் படர்க்கை இடத்திற்கு உரியனவாம்.

## 'யாது' 'எவன்' என்ற வினாச் சொற்கள்

514. 'யாது', 'எவன்' என்னும் ஆயிரு கிளவியும்
அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும். 31

எ—ரை: 'யாது' 'எவன்' என்னும் இரண்டு சொற்களும் அறியாத பொருள் இடத்து வினாவும் அமைப்பில் தோன்றும்.

## அவற்றுள், 'யாது' என்னும் சொல்

515. அவற்றுள்,
'யாது' என வரூஉம் வினாவின் கிளவி
அறிந்த பொருள்வயின் ஐயம் தீர்தற்குத்
தெரிந்த கிளவி ஆதலும் உரித்தே. 32

எ—ரை: முன் நூற்பாவில் கூறப்பட்ட இரண்டு சொற்களுள், 'யாது' என்னும் வினாச்சொல் அறியாத பொருளை வினவும் நிலையில் அல்லாமல் அறிந்த பொருட்கண்ணும் ஐயத்தை நீக்குதற்கு ஆராய்ந்த சொல்லாக நிற்றலும் உரியது.

## சினைமுதற் சொல்

**516.** இனைத்து என அறிந்த, சினை, முதல், கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும். 33

எ–ரை: கேட்போரால் 'இத்துணை' என்று அறியப்பட்ட சினைப் பொருளுக்கும், முதற்பொருளுக்கும், வினைத் தொகுதிப் பெயருடன் பொருந்துதற்கண் உம்மை கொடுத்து உரைத்தல் வேண்டும்.

## உவமை கொடுக்கத் தக்க வேறு சொல்

**517.** மன்னாப் பொருளும் அன்ன இயற்றே. 34

எ–ரை: இல்லாத பொருளுக்கு இல்லாமை கூறும் இடத்தும் உம்மை கொடுத்துக் கூறும் அவ்வியல்பு பொருந்தும்.

## இல்லாமைக் குரிய சொல் அமைப்பு

**518.** எப் பொருள் ஆயினும், 'அல்லது இல்' எனின்
அப் பொருள் அல்லாப் பிறிது பொருள் கூறல் 35

எ–ரை: ஒருவன் யாதாயினும் ஒரு பொருளை 'இது அல்லது இல்லை' என்னும் வாய்பாட்டால் கூறுவானாயின், அப்பொருளையே கூறாது, அப்பொருள் அல்லாத பிறிது பொருளை மேலிட்டுக் கூறுதல் வேண்டும்.

**519.** அப்பொருள் கூறின், சுட்டிக் கூறல், 36

எ–ரை: அவ்வாறு கூறும் இடத்து, பிறிது பொருள் கூறாமல், கேட்ட பொருள் தன்னையே கூறுவானாயின், சுட்டுச் சொல்லோடு சேர்த்துக் கூறுதல் வேண்டும்.

## பொருட் பெயரும் சுட்டுப் பெயரும் அமையும் நெறி

**520.** பொருளொடு புணராச் சுட்டுப் பெயர் ஆயினும்,
பொருள் வேறுபடாஅது ஒன்று ஆகும்மே. 37

எ–ரை: பொருளோடு சேர்ந்த சுட்டால் அன்றிப் பொருளோடு சேராத சுட்டாயினும் கூறுங்கால் பொருள் வேறாகாது இப்பெயர் எனச் சுட்டிக் கூறிய பொருளே ஆம்.

521. 'இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப் பெயர்க் கிளவியும்
வினைக்கு ஒருங்கு இயலும் காலம் தோன்றின்,
சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்;
இயற்பெயர் வழிய' என்மனார் புலவர். 38

எ–ரை: இயற்பெயரும் சுட்டுப் பெயரும் ஒன்றனை ஒன்று கொள்ளாது, இரண்டும் பிறிதொரு வினையைக் கொண்டு முடியுங் காலம் உண்டாகுமாயின், உலகத்தார் சுட்டுப் பெயரை முன்னால் கூறாமல், இயற்பெயரைக் கூறி அதன் பின்னாலேயே சுட்டுப் பெயரைக் கூறுதல் வேண்டும் என்று கூறுவர்.

522. முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே. 39

எ–ரை: இயற்பெயரும் சுட்டுப் பெயரும் வினையிடத்து ஒருங்கு நிகழும் இடத்து, சுட்டுப்பெயரை, முன்னே கூறி இயற்பெயரைப் பின்னே கூறும் வழக்கு செய்யுளில் மட்டும் உரியது ஆம்.

523. சுட்டு முதல் ஆகிய காரணக் கிளவியும்
சுட்டுப்பெயர் இயற்கையின் செறியத் தோன்றும். 40

எ–ரை: சுட்டெழுத்தை முதலில் உடைய காரணப் பொருண்மையை உணர்த்தும் சொல்லும் ('அதனால்' 'இதனால்') சுட்டுப் பெயர் போலத் தன்னால் சுட்டப்படும் பொருளை உணர்த்தும் சொல்லிற்குப் பின் சொல்லப்படுவது ஆகும்.

## இயற்பெயரும் சிறப்புப் பெயரும் அமையும் நெறி

524. சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார். 41

எ–ரை: சிறப்புப் பெயரைக் கூறும், இடத்தும் உலகத்தார் இயற்கையாய் உள்ள பெயரை முன்னே கூறாமல் பின்னரே கூறுவர்.

### ஒரு பொருள் குறித்த வேறு பெயர்

**525.** ஒரு பொருள் குறித்த வேறு பெயர்க் கிளவி,
தொழில் வேறு கிளப்பின், ஒன்று இடன் இலவே. 42

எ–ரை: ஒரு பொருளைப் பற்றி வரும் பல பெயர்களுக்கும், பல வினைகளைக் கொடுத்து முடித்தால், ஒரு பொருளைப் பற்றியன ஆக முடியாது; வேறு வேறு பெயர்களைப் பற்றியனவாகவே முடியும்.

### இடவழுவமைதி; தன்மை, அஃறிணை விரவி எண்ணுதல்

**526.** தன்மைச் சொல்லே அஃறிணை கிளவி என்று
எண்ணுவழிமருங்கின் விரவுதல் வரையார். 43

எ–ரை: தன்மைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் எண்ணும் இடத்துக் கலந்து வருதலை நீக்க மாட்டார் அறிஞர். (கலந்து வருதலும் இயல்பே என்பது கருத்து).

## 4. எண்

### ஒருமை எண்ணிற்கு உரியவை

**527.** ஒருமை எண்ணின் பொதுப் பிரி பாற்சொல்
ஒருமைக்கு அல்லது எண்ணு முறை நில்லாது 44

ஒருமை எண்ணின் உணர்த்தும் பொதுவாகிய பாலிலிருந்து பிரிந்த ஒருவன் ஒருத்தி என்னும் சொற்கள் ஒருமை இடத்தல்லது, இருமை முதலிய எண்ணு முறைமைக் கண் நில்லா; (எனவே பொதுப் பிரியாப் பாற் சொல்லாகிய ஒருவன் என்னும் சொல் இருவர், மூவர் என, எண்ணுமுறைமைக்கண்ணும் நிற்கும் என்பது கருத்து.)

### வியங்கோள் வினை அமையும் வகை

**528.** வியங்கோள் எண்ணுப்பெயர் திணை விரவு வரையார். 45

எ–ரை: வியங்கோள் வினையுடன் தொடரும் எண்ணுப்பெயர் திணைகலந்து வருதலை நீக்கமாட்டார் அறிஞர். ('ஆவும் ஆயனும் செல்க' என்பது போலக் கலந்து வரும் என்பது கருத்து.)

## வேறு வினைப் பொதுச்சொல்

**529.** வேறு வினைப் பொதுச் சொல் ஒரு வினை கிளவார் 46

எ–ரை: வேறு வேறு வினைச் சொற்களைப் பெற்று முடிதற்கு உரிய பொதுச்சொல்லை, ஒருபொருளுக்குரிய வினையாற் சொல்லார் அறிஞர், ('அடிசில் தின்றார். என்று கூறாமல் 'அடிசில்' அயின்றார்' என்று பொது' வினை கொடுத்துக் கூறுக என்பது கருத்து)

**530.** எண்ணுங்காலும் அது அதன் மரபே. 47

எ–ரை: வெவ்வேறு வினைக்குரிய பொருள்களைப் பொதுச் சொல் லாற் கூறாது பிரித்து அவற்றை எண்ணும் இடத்தும் அதன் இலக்கணம் ஒரு வினையால் கூறாது பொதுவினையால் சொல்லுதலே ஆகும்.

## இரட்டைக் கிளவி அமையும் நெறி

**531.** இரட்டைக் கிளவி இரட்டின் பிரிந்து இசையா 48

எ–ரை: இரட்டித்து நின்று பொருளை அறிவிக்கும் சொற்கள், அவ்வாறு இரட்டித்து நிற்கும் இடத்துத் தனித்தனியாகப் பிரிந்து நில்லா.

## பன்மை பற்றிய வழக்குகள்

**532.** ஒரு பெயர்ப் பொதுச் சொல் உள்பொருள் ஒழியத்
தெரிபு வேறு கிளத்தல்,தலைமையும் பன்மையும்;
உயர்திணை மருங்கினும், அஃறிணை மருங்கினும். 49

எ–ரை: ஓர் இடத்தில் உள்ள பல பொருள்களுக்குப் பொதுவாக ஒரு பெயராய் வரும் சொல்லை, அங்கு உள்ள பிற பொருள்கள் நீங்க, தலைமை

பற்றியும் பன்மை பற்றியும் தெரிந்து சொல்லுக; இது இரண்டுதிணைக்கும் பொருந்துவதாகும். (பிறகும் வாழ்வார் உளரேனும் 'பார்ப்பனச்சேரி' என்று கூறுதலும், பிற மரங்கள் முதலியன உளவேனும் 'கமுகந் தோட்டம்' என்று கூறுதலும் வழக்காதல் கருதுக)

**533.** பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம்
மயங்கல் கூடா, வழக்கு வழிப்பட்டன. 50

எ–ரை: உயர்திணையிடத்தும், அஃறிணையிடத்தும், பெயரினாலும் வினையினாலும் பொதுமைத்தன்மையிலிருந்து பிரிந்து ஆண் பாலாகவும், பெண்பாலாகவும் வழங்குவனவெல்லாம், வழங்கி வருதலால் அறிந்து போற்றுதற்கு உரியவை; வழு ஆகமாட்டா.

**534.** பலவயினானும் எண்ணுத் திணை விரவுப் பெயர்
அஃறிணை முடிபின, செய்யுளுள்ளே. 51

எ–ரை: திணை கலந்து எண்ணப்பட்ட பெயர், செய்யுளில் பெரும்பாலும் அஃறிணைச் சொல்லைக் கொண்டே முடியும். (சிறுபான்மை உயர்திணைச் சொல்லைக் கொண்டு முடிதலும் உண்டு; குற்றம் என்று கொள்ளலாகாது)

## பல பொருள் ஒருசொல் அமைப்பு நெறி

**535.** வினை வேறுபடூஉம் பல பொருள் ஒரு சொல்,
வினை வேறுபடா அப் பல பொருள் ஒரு சொல், என்று
ஆயிரு வகைய – பல பொருள் ஒரு சொல். 52

எ–ரை: தொழில் வேறுபட்டு வரும் பலபொருள் ஒரு சொல் தொழில் வேறுபடாது வரும் பலபொருள் ஒரு சொல் என்று, பல பொருள் ஒருசொல் இரண்டு வகைப்படும்.

**536.** அவற்றுள்,
வினை வேறுபடூஉம் பல பொருள் ஒரு சொல்–
வேறுபடு வினையினும், இனத்தினும், சார்பினும்,
தேறத் தோன்றும் – பொருள் தெரி நிலையே. 53

எ–ரை: அவற்றுள், தொழில் வேறுபட்டு வரும் பலபொருள் ஒரு சொல், ஒருபொருளுக்கே சிறந்த வினையினாலும், சார்பினாலும், பொருளை அறியும் இடத்துப் பொதுத் தன்மை நீங்கித் தெளிவு பெறத் தோன்றுவதாகும்.

537. ஒன்று வினை மருங்கின் ஒன்றித் தோன்றும். * 54

எ–ரை: தத்தம் வினையால் வேறுபடவரும் பலபொருள் ஒத்த வினை கொள்ளும் வகையில், வேறுபடாத வினைஉடையன போல் தோன்றும்.

538. வினை வேறுபடாஅப் பல பொருள் ஒரு சொல்,
நினையும் காலை, கிளந்தாங்கு இயலும். 55

எ–ரை: வினை வேறுபடாது வரும் பலபொருள் ஒரு சொல், ஆராய்ந்து நோக்கும் இடத்து விதந்து தெளிவாகக் கூறப்பெறும் இயல்பை உடையதாகும்.

### வழுவமைதி

539. குறித்தோன் கூற்றம் தெரித்து மொழி கிளவி. 56

எ–ரை: ஒரு பொருளின் வேறுபாட்டை அறிவிப்பவன் கூறும் சொல், முற்கூறப்பட்ட முறைகளிலும் விளக்கம் பெறாவிட்டால் கருத்தைத் தெரிவித்துத் தெளிவாகப் பிரித்து உணர்த்தும் சொல்லாகவே அமையும்.

## 5. புறனடை

### திணைக்குரிய புறநடை

540. குடிமை, ஆண்மை, இளமை, மூப்பே,
அடிமை, வன்மை, விருந்தே, குழுவே,
பெண்மை, அரசே, மகவே, குழவி,
தன்மை, திரி பெயர், உறுப்பின் கிளவி,

* 537, 538 ஆம் நூற்பாக்கள் இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து நூற்பா ஒன்றாக்குவர் சேனாவரையர்.

காதல், சிறப்பே, செறற்சொல், விறற்சொல் – என்று
ஆவறு–மூன்றும் உளப்படத் தொகைஇ,
அன்ன பிறவும், அவற்றொடு சிவணி,
முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்
உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்,
அஃறிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும், 57

எ–ரை: 'குடிமை' முதல் 'விறற் சொல்' இறுதியாகக் கூறப்பட்ட பதினெட்டும், அவை போன்ற பிறவும் சேர்த்துக் கணக்கிட்டுக் குறிப்பினால் உணர்த்தும் சொற்கள் எல்லாம், உயர்திணைப் பொருளை உணர்த்துவனவாக நிற்பினும், அஃறிணைப் பொருளை உணர்த்தி நின்ற இடத்து முடியுமாறு போல, அஃறிணைச் சொல்லைக் கொண்டே முடியும்.

## பாலிற்குரிய புறனடை

541. காலம், உலகம், உயிரே, உடம்பே,
பால் வரை தெய்வம், வினையே, பூதம்,
ஞாயிறு, திங்கள், சொல், என வரூஉம்
ஆயீர்–ஐந்தொடு பிறவும் அன்ன
ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்,
பால் பிரிந்து இசையா, உயர்திணை மேன. 58

எ–ரை: 'காலம்' முதல் 'சொல்' இறுதியாகக் கூறப்பட்ட பத்தும், அத்தன்மையை உடைய வேறு பிறவும் ஆகிய அப்பாகுபாட்டின்கண் வரும் சொற்கள் அனைத்தும், உயர்திணைச் சொல்லாயிருப்பினும், அத்திணைக்கண் பால் பிரிந்து இசைக்காமல், அஃறிணைப் பாலாய் இசைக்கும்.

## இடத்திற்குரிய புறனடை

542. நின்றாங்கு இசைத்தல் இவண் இயல்பு இன்றே. 59

எ–ரை: 'காலம்' முதலிய சொற்கள் ஈறு திரியாமல் நின்று, உயர்திணையாய் இசைத்தல் என்பது இங்கு இயல்பு இல்லை, (முன் நூற்பாவிற்கூறிய குடிமை

முதலிய சொற்கள் ஈறு திரியாமல் நின்று 'குடிமை நல்லன்' முதலியனவாக உயர்திணையில் இசைக்கும் என்பது கருத்து).

**543.** இசைத்தலும் உரிய, வேறிடத்தான 60

எ–ரை: இங்குக் கூறிய 'காலம்' முதலிய சொற்கள் உயர்திணையாய் இசைத்தலும், ஈறு திரிந்து வேறுபட்ட இடத்து உண்டு. ('காலன் கொண்டான்' என்பது போல)

## இனம் செப்பல்

**544.** எடுத்த மொழி இனம் செப்பலும் உரித்தே 61

எ–ரை: இனமாகிய பல பொருள்களில் ஒன்றினை எடுத்து விதந்து கூறிய இடத்து அச்சொல், தனக்கு இனமாகிய பிறபொருள்களைக் குறிப்பால் உணர்த்தும் உரியது. ('அறம் செய்தான் நல் உலகம் புகுவான்' என்று எடுத்த மொழி, 'மறம் செய்தான் தீய உலகம் புகுவான்' என்ற இனப்பொருளை உணர்த்துதல் சுட்டப்பட்டது)

## எண்ணிற்குரிய புறனடை

**545.** கண்ணும் தோளும் முலையும் பிறவும்
பன்மை சுட்டிய சினை நிலைக் கிளவி
பன்மை கூறும் கடப்பாடு இலவே–
தம் வினைக்கு இயலும் எழுத்து அலங்கடையே. 62

எ–ரை: 'கண்' முதலாகிய சொற்களும், பிற சொற்களும் பன்மைப் பொருளை உணர்த்தும் சினைச் சொற்கள்; அவை பன்மையினாலேயே உணர்த்தப்பட வேண்டும் என்ற வரையறை இல்லை; முதல் ஒருமை ஆயின் ஒருமையாகவும், முதல் பன்மை ஆயின் பன்மையாகவும் கூறப்படலாம். ('கண் நல்ல', 'கண் நல்லன்' என வரும். இவற்றுள் தம் வினையான் வருங்கால அஃறிணையாய் அதற்குரிய அகர ஈற்று எழுத்தால் 'நல்ல' என முடிந்தது.)

இயல்–2

# வேற்றுமை இயல்

(பெயர்கள் வேற்றுமை உருபுகளை ஏற்றுப் பொருள் வேற்றுமைப்படும் இயல்பை உணர்த்தும் இயல்)

## 1. வேற்றுமையின் தொகை, வகை, அடைவு

**546.** 'வேற்றுமைதாமே ஏழ்' என மொழிப. 1

எ–ரை: வேற்றுமையாவன ஏழென்று சொல்லுவர் அறிஞர்.

**547.** விளி கொள்வதன்கண் விளியொடு எட்டே. 2

எ–ரை: விளி கொள்ளும் இடத்து விளி வேற்றுமையைக் கூட்ட வேற்றுமை எட்டாம்.

**548.** அவைதாம்,
பெயர், ஐ, ஒடு, கு,
இன், அது, கண், விளி, என்னும் ஈற்ற, 3

எ–ரை: எட்டென்று சொல்லப்பட்ட வேற்றுமைகளாவன; விளிவேற்றுமையை இறுதியாக உடைய பெயர் ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்பனவாம்.

## 2. எழுவாய் வேற்றுமை

**549.** அவற்றுள்,
எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே. 4

எ–ரை: முன்கூறப்பட்ட வேற்றுமை எட்டினுள், முதலில் 'பெயர்' என்று கூறப்பட்ட வேற்றுமை, பெயர் தோன்றிய அளவாய் நிற்கும் நிலைமையது ஆகும். (வேறு தனியாக உருபு இல்லை.)

## எழுவாய் வேற்றுமை ஏற்கும் பயனிலைகள்

550. பொருண்மை சுட்டல், வியங்கொள வருதல்,
வினை நிலை உரைத்தல், வினாவிற்கு ஏற்றல்,
பண்பு கொள வருதல், பெயர் கொள வருதல், என்று
அன்றி அனைத்தும் பெயர்ப் பயனிலையே. 5

எ—ரை: பொருளின் உண்மைத் தன்மையை உரைத்தல், ஏவல் கொள்ள வருதல், வினையின் நிலையைக் கூறுதல், வினாப்பொருளோடு தொடர்தல், பண்புடைச் சொல்லைக் கொள்ள வருதல், பெயரைக் கொண்டு முடிதல் என்ற அவ்வனைத்து முடிபுகளும் எழுவாய் வேற்றுமையின் பயனாகிய நிலைமைகள்.

## தொகைப் பெயரும் பயனிலை கொள்ளல்

551. பெயரின் ஆகிய தொகையுமார் உளவே;
அவ்வும் உரிய, அப்பாலான. 6

எ—ரை: பெயரும் பெயரும் தொக்கு வரும் தொகைகளும் உள்ளன; அவையும் எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கொள்ளுதலுக்கு உரியனவாம்.

## எழுவாயும் தோன்றா எழுவாயும்.

552. 'எவ்வயின் பெயரும் வெளிப்படத் தோன்றி
அவ் இயல் நிலையல் செவ்விது' என்ப. 7

எ—ரை: தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்றிடத்துப் பெயர்களும் வெளிப்படையாகத் தோன்றிப் பயனிலை கொள்ளுதல் சிறந்தது என்பர் ஆசிரியர்; (அவ்வாறு தோன்றாது நின்று பயனிலை கொள்ளுதலும் உண்டு; அது செவ்விதன்று என்பது கருத்து).

## பெயரின் உருபு நிற்கும் இடம்

553. 'கூறிய முறையின் உருபு நிலை திரியாது,
ஈறு பெயர்க்கு ஆகும் இயற்கைய' என்ப. 8

எ—ரை: மேற்கூறப்பட்ட முறைமையினை உடைய பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண், என்னும் உருபுகள் தம்முடைய தன்மை மாறுபடாது பெயருக்கு இறுதியாகும் தன்மை உடையன என்பர் ஆசிரியர்.

### பெயரின் இயல்பு

554. பெயர்நிலைக் கிளவி காலம் தோன்றா.
தொழில் நிலை ஒட்டும் ஒன்று அலங்கடையே. 9

எ—ரை: பெயர்ச்சொல் காலத்தைத் தோன்ற நில்லாது; தொழிற்சொல்லோடு ஒக்கும் ஒன்றாகிய வினை யாலணையும் பெயர் அல்லாத இடத்து. (வினையாலணையும் பெயர் மட்டும் காலம் தோன்ற நிற்கும் என்பது கருத்து).

## 3. இரண்டாம் வேற்றுமை

### 'ஐ' உருபின் பொருள்




555. இரண்டாகுவதே,
'ஐ' எனப் பெயரிய வேற்றுமைக் ளெவி;
எவ் வழி வரினும், வினையே, வினைக்குறிப்பு,
அவ் இரு முதலின் தோன்றும், அதுவே. 10

எ—ரை: இரண்டாம் வேற்றுமை உருபு ஆவது, 'ஐ' என்னும் பெயரை உடைய வேற்றுமைச் சொல்; அஃது எவ்விடத்து வரும் ஆயினும் வினையும் வினைக்குறிப்பும் ஆகிய அவ்விரண்டு இடத்தும் தோன்றுபவை பொருளாக வரும்.

### இரண்டாம் வேற்றுமைப் பொருளின் பாகுபாடு

556. 'காப்பின், ஒப்பின், ஊர்தியின், இழையின்,
ஒப்பின், புகழின், பழியின், என்றா—
பெறலின், இழவின், காதலின், வெகுளியின்,
செறலின், உவத்தலின், கற்பின், என்றா —
அறுத்தலின், குறைத்தலின், தொகுத்தலின், பிரித்தலின்

நிறுத்தலின், அளவின், எண்ணின் என்றா –
ஆக்கலின், சார்தலின், செலவின், கன்றலின்,
நோக்கலின், அஞ்சலின், சிதைப்பின், என்றா–
அன்ன பிறவும் அம் முதற் பொருள
என்ன கிளவியும் அதன் பால' என்மனார். 11

எ–ரை: 'காப்பு' முதல் 'சிதைப்பு' இறுதியாகச் சொல்லப்பட்ட இருபத்தெட்டுப் பொருள்களும், அவை போல்வன பிறவும் அச்செயப்படு பொருள் மேல் வருகின்ற எல்லாச் சொற்களும் இரண்டாம் வேற்றுமையின் பாகுபாடுகள் என்பர் புலவர்.

## 4. மூன்றாம் வேற்றுமை

### 'ஒடு' உருபின் பொருள்

557. மூன்றாகுவதே,
'ஒடு' எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி;
வினைமுதல், கருவி, அனை முதற்று – அதுவே. 12

எ–ரை: மூன்றாம் வேற்றுமை உருபு ஆவது, 'ஒடு' என்னும் பெயரை உடைய வேற்றுமைச் சொல்; அது வினைமுதலும், கருவியும் ஆகிய இரண்டு பொருளையும் பொருளாக உடையது ஆகும்.

மனத்தொடு வாய்மொழியன், வாளொடு வெய்யன்

### மூன்றாம் வேற்றுமைப் பொருளின் பாகுபாடு

558. 'அதனின் இயறல், அதன் –தகு கிளவி,
அதன் வினைப்படுதல், அதனின் ஆதல்,
அதனின் கோடல்,அதனொடு மயங்கல்,
அதனொடு இயைந்த ஒரு வினைக் கிளவி,
அதனொடு இயைந்த வேறு வினைக் கிளவி,
அதனொடு இயைந்த ஒப்பு அல் ஒப்பு உரை,
இன் ஆன் ஏது, ஈங்கு, என வரூஉம்
அன்ன பிறவும் அதன் பால' என்மனார். 13

எ—ரை: 'அதனின் இயறல்' முதல் 'இன் ஆன் ஏது' இறுதியாக இவ்விடத்து வருவதையும் இவை போன்ற பிறவும் மூன்றாம் வேற்றுமையின் பாகுபாடுகள் என்பர் புலவர்.

## 5. நான்காம் வேற்றுமை

559. நான்காகுவதே,
'கு' எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி;
எப் பொருள் ஆயினும் கொள்ளும், அதுவே. 14

எ—ரை: நான்காம் வேற்றுமை உருபு ஆவது 'கு' என்னும் பெயரை உடைய வேற்றுமைச் சொல்; அது எப்பொருளாக இருப்பினும் அதனை ஏற்று நிற்கும்.

### நான்காம் வேற்றுமைப் பொருளின் பாகுபாடு

560. 'அதற்கு வினை உடைமையின், அதற்கு உடம்படுதலின்
அதற்குப் படு பொருளின், அது ஆகு கிளவியின்,
அதற்கு யாப்புஉடைமையின், அதன்பொருட்டு ஆதலின்
நட்பின், பகையின், காதலின், சிறப்பின், என்று
அப் பொருட் கிளவியும் அதன் பால' என்மனார். 15

எ—ரை: அதற்கு வினைஉடைமை, முதல் 'சிறப்பு' இறுதியாக வருவனவும், அவை போன்ற பிறவும் நான்காம் வேற்றுமையின் பாற்படும் என்று கூறுவர் புலவர்.

## 6. ஐந்தாம் வேற்றுமை

### 'இன்' உருபின் பொருள்

561. ஐந்தாகுவதே,
'இன்' எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி;
'இதனின் இற்று இது' என்னும், அதுவே. 16

எ–ரை: ஐந்தாம் வேற்றுமை உருபு ஆவது, 'இன் என்னும் பெயரை உடைய வேற்றுமைச் சொல்; அஃது இப்பொருளைக் காட்டிலும் இப்பொருள் இத்தன்மையை உடையது' என்னும் பொருளை உடையது ஆகும்.

### ஐந்தாம் வேற்றுமைப் பொருளின் பாகுபாடு

562. 'வண்ணம்' வடிவே, அளவே, சுவையே,
தண்மை, வெம்மை, அச்சம், என்றா–
நன்மை, தீமை, சிறுமை, பெருமை,
வன்மை, மென்மை, கடுமை, என்றா–
முதுமை, இளமை, சிறத்தல், இழித்தல்
புதுமை, பழமை, ஆக்கம், என்றா–
இன்மை, உடைமை, நாற்றம், தீர்தல்,
பன்மை, சின்மை, பற்று விடுதல், என்று–
அன்ன பிறவும் அதன் பால' என்மனார். 17

எ–ரை: 'வண்ணம்' முதல் 'பற்றுவிடுதல்' இறுதியாக் கூறப்பட்டனவும், அவை போன்ற பிறவும் ஐந்தாம் வேற்றுமையின் பாற்படும் என்று கூறுவர்.

## 7. ஆறாம் வேற்றுமை

### 'அது' உருபின் பொருள்

563. ஆறாகுவதே,
'அது' எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி;
தன்னினும் பிறிதினும், 'இதனது இது' எனும்
அன்ன கிளவிக் கிழமைத்து, அதுவே. 18

எ–ரை: ஆறாம் வேற்றுமை உருபு ஆவது, 'அது' என்னும் பெயரை உடைய வேற்றுமைச் சொல்; தன்னோடு ஒற்றுமை உடைய பொருளானும், தன்னில் வேறாகிய பொருளானும் அன்ன கிளவியால் தோன்றும் கிழமைப் பொருளை உடையது.

## ஆறாம் வேற்றுமைப் பொருளின் பாகுபாடு

564. 'இயற்கையின், உடைமையின், முறைமையின், கிழமையின்
செயற்கையின், முதுமையின், வினையின், என்றா ..
கருவியின், துணையின், கலத்தின், முதலின்,
ஒருவழி உறுப்பின், குழுவின், என்றா—.
தெரிந்து மொழிச்செய்தியின், நிலையின், வாழ்ச்சியின்
திரிந்து வேறுபடூஉம் பிறவும் அன்ன;
கூறிய மருங்கின் தோன்றும் கிளவி
ஆறன் பால' என்மனார் புலவர். 19

எ—ரை; 'இயற்கை' முதல் 'வாழ்ச்சி' இறுதியாகச் சொல்லப் பட்டனவும், திரிந்து வேறுபடுகின்றனவும், அவைபோல்வன பிறவும், ஆகிய கிழமைப் பொருளின்கண் தோன்றும் சொற்கள் எல்லாம் ஆறாம் வேற்றுமையின் பாற்பட்டனவாம்.

## 8. ஏழாம் வேற்றுமை

### 'கண்' உருபின் பொருள்

565. ஏழாகுவதே,
'கண்' எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி;
வினை செய் இடத்தின், நிலத்தின், காலத்தின்,
அனை வகைக் குறிப்பின் தோன்றும், அதுவே. 20

எ—ரை: ஏழாம் வேற்றுமை உருபு ஆவது, 'கண்' என்னும் பெயரை உ டைய வேற்றுமைச் சொல்; அது வினை செய்கின்ற இடத்தும், நிலமாகிய இடத்தும், காலமாகிய இடத்தும், என அம்மூவகைக் குறிப்பினும் தோன்றும்.

### ஏழாம் வேற்றுமை உருபுகள்

566. 'கண், கால், புறம் அகம், உள், உழை, கீழ், மேல்
பின், சார், அயல், புடை, தேவகை, எனாஅ—

முன், இடை, கடை, தலை, வலம், இடம், எனாஅ–
அன்ன பிறவும் அதன் பால' என்மனார். 21

எ–ரை: 'கண்' முதல் 'இடம்' இறுதியாகக் கூறப்பட்டனவும், அவை போல்வன பிறவும், ஏழாம் வேற்றுமையின் பாற்படும் என்பர் அறிஞர்.

## 9. வேற்றுமைப் பொருளை விரித்த இயல்பு

567. 'வேற்றுமைப் பொருளை விரிக்கும் காலை,
ஈற்று நின்று இயலும் தொகைவயின் பிரிந்து,
பல் ஆறாகப் பொருள் புணர்ந்து இசைக்கும்
எல்லாச் சொல்லும் உரிய' என்ப. 22

எ–ரை: வேற்றுமைத் தொகையை விரித்துப் பொருள் காணும் இடத்து, அன்மொழித் தொகையை விரிக்கும் காலத்துப் பொருள் விளங்கும் பொருட்டுச் சேர்க்கப்படும் சொற்கள் எல்லாம் ஈண்டும் சேர்த்து விரிக்கப்படும் என்று சொல்லுவர் அறிஞர், (உருபுகளே அன்றிப் பிற சொற்களும் விரித்துரைத்தல் உண்டு என்பது கருத்து, 'உருபும் பயனும் உடன் தொக்க தொகை என்று கூறுவதன் இயல்பு இங்கு நினைக்கத்தக்கது)

## இயல் – 3

# வேற்றுமை மயங்கியல்

(வேற்றுமை உருபுகள் தம்முன் மயங்கிப் பொருள்
வேறுபாடுகளைக் கொள்ளும் இயல்பை உணர்த்தும் இயல்)

## 1. வேற்றுமை உருபுகளின் பொருள் மயங்குதல்

### இரண்டாம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் சார்பு பொருளில்

**568. 'கருமம் அல்லாச் சார்பு' என் கிளவிக்கு**
**உரிமையும் உடைத்தே, 'கண்' என் வேற்றுமை 1**

எ–ரை: 'கருமச் சார்பு' எனவும், 'கருமம் அல்லாச் சார்பு' எனவும் இருவகைப்படும் சார்பு பொருளில், கருமம் அல்லாச் சார்பு' பொருளில், ஏழாம் வேற்றுமை உருபு வருதலாகிய உரிமை உடையது.

### சினைப் பெயரில்

**569. 'சினைநிலைக் கிளவிக்கு ஐயும் கண்ணும்**
**வினை நிலை ஒக்கும்' என்மனார் புலவர். 2**

எ–ரை: சினைச் சொல்லிற்கு வினை நிகழும் இடத்து இரண்டாம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் ஒத்துவரும் என்று சொல்லுவர் புலவர்.

### 'கன்றல்', 'செலவு' ப் பொருளில்

**570. கன்றலும் செலவும் ஒன்றுமார் வினையே. 3**

எ–ரை: கன்றல் பொருளிடத்தும், செல்லுதல் பொருளிடத்தும் இரண்டாம் வேற்றுமையும், ஏழாம் வேற்றுமையும் ஒத்து மயங்கி வரும்.

## இரண்டு, ஆறு, ஏழு, வேற்றுமைகள் முதல் சினைத் தொடர்ச்சியில்

**571.** முதற்சினைக் கிளவிக்கு 'அது' என் வேற்றுமை
முதற்கண் வரினே, சினைக்கு ஐ வருமே. 4

எ—ரை: முதற் சொல்லும் சினைச் சொல்லும் தொடர்ந்து வந்த தொடர்க்கு ஆறாம் வேற்றுமை உருபு முதற்கண் வருமாயின், சினைச்சொல்லின் கண் இரண்டாம் வேற்றுமை உருபே வரும்.

**572.** 'முதல் முன் ஐ வரின், 'கண்' என் வேற்றுமை
சினை முன் வருதல் தெள்ளிது' என்ப. 5

எ—ரை: முதல், சினைச் சொற்களில், முதலில் 'ஐ' வேற்றுமை உருபு வருமாயின், சினைச்சொல்லின் முன் 'கண்' வேற்றுமை உருபு வருதல் தெளிவுடையது என்பர் அறிஞர்.

**573.** முதலும் சினையும் பொருள் வேறுபடாஅ:
நுவலும் காலை, சொற்குறிப்பினவே. 6

எ—ரை: முதற்பொருளும் சினைப்பொருளும் தத்தம் பொருளில் வே றுபட்டு நில்லா; சொல்லுகின்றவனின் குறியினால், 'எதற்கு எது முதல்', 'எது சினை' என்னும் பொருண்மை விளங்கும்.

## பிண்டப் பெயரில்

**574.** பிண்டப் பெயரும் ஆயியல் திரியா;
பண்டு இயல் மருங்கின் மரீஇய மரபே. 7

எ—ரை: பல பொருள் தொகுதியாகிய பிண்டப் பெயரும், முதல் சினைப் பெயர்கள் பெறும் இயல்பையே உடையன; பண்டு தொட்டு நடை பெறும் வகையில் பொருந்திய இலக்கணமாக உடையன.

## மூன்றாம் வேற்றுமை: ஒருவினை ஒடுச்சொல்

**575.** ஒரு வினை ஒடுச் சொல் உயர்பின் வழித்தே. 8

எ—ரை: வேற்றுமை இயலில், 'அதனோடு இயைந்த ஒருவினைக் கிளவி' என்று உரைக்கப்பட்ட நிலையில் உயர் பொருளில் வரும் பெயரை அடுத்து ஒருசொல் நிற்கும்.

## மூன்று, ஐந்து : ஏதுப் பொருளில்

576. 'மூன்றனும் ஐந்தனும் தோன்றக் கூறிய
ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி
நோக்கு ஓரனைய' என்மனார் புலவர். 9

எ—ரை: மூன்றாம் வேற்றுமைக் கண்ணும் ஐந்தாம் வேற்றுமைக் கண்ணும் விளங்குமாறு கூறப்பட்ட ஆக்கத்தோடு பொருந்திய காரணச் சொல், அக்காரணம் பொருளைக் காணும் பொருள் நோக்கு ஒரு தன்மையை உடையது.

## இரண்டு நோக்கப் பொருளில்

577. இரண்டன் மருங்கின் நோக்கு அல் நோக்கம், அவ்
இரண்டன் மருங்கின், ஏதுவும் ஆகும். 10

எ—ரை: இரண்டாம் வேற்றுமைக்குரிய 'நோக்கு அல் நோக்கம்' (கண்ணால் நோக்காது மனத்தால் கருதுதல்) அப்பொருண்மையே அன்றி, மூன்றாம் வேற்றுமைக்கும், ஐந்தாம் வேற்றுமைக்கும் உரிய ஏதுப் பொருளையும் உணர்த்தும்.

## ஆறாம் வேற்றுமை : உடைமைப்பொருளில்

578. 'அது' என் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்,
'அது' என் உருபு கெட, குகரம் வருமே. 11

எ—ரை: ஆறாம் வேற்றுமைப் பொருளில் வரும் உயர் திணைத் தொகையிடத்து, உருபினை விரிக்குங்கால், 'அது' என்னும் உருபு கெட்டு அப்பொருளை உணர்த்த நான்காம் வேற்றுமை உருபு ஆகிய 'கு' என்பது வரும்.

## இரண்டு, மூன்று: தடுமாறு பொருளில்

579. தடுமாறு தொழிற்பெயர்க்கு இரண்டும் மூன்றும்
கடி நிலை இலவே, பொருள்வயினான. 12

எ–ரை: பொருள் தடுமாறுதற்கு ஏதுவாய்த் தொழிலோடு தொடர்ந்து வரும் பெயர்க்கு, இரண்டாம் வேற்றுமையும், மூன்றாம் வேற்றுமையும் நீக்கப்படா; அவ்வேற்றுமை தொகுமாறு அவற்றின் பொருள் தொகையிடத்தும் நிற்கும்.

**580. ஈற்றுப் பெயர் முன்னர் மெய் அறி பனுவலின்,**
**வேற்றுமை தெரிப, உணருமோரே.** 13

எ–ரை: பொருள் தடுமாறுதற்கு ஏதுவாய்த் தொழிலோடு தொடர்ந்து வரும் அப்பெயர்களுள் இறுதிப்பெயரின் முன்னால் பொருள் வேற்றுமையை உணர்த்தும் சொல் வருமாயின் அச்சொல்லினால் அப்பொருள் வேற்றுமையை அறியவல்லார் அறிவர்.

## ஓம்படைக்கிளவி: பாதுகாத்தற் பொருளில்

**581. ஓம்படைக் கிளவிக்கு ஐயும் ஆனும்**
**தாம் பிரிவு இலவே, தொகை வரு காலை.** 14

எ–ரை: ஓம்படைப் பொருளுக்கு அவ்வேற்றுமை தொக்கு நின்றவிடத்து 'ஐ' உருபும், 'ஆன்' உருபும் ஒத்த உரிமை உடையனவாம்.

## ஆறும் ஏழும்: வாழ்தற்பொருளில்

**582. ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்கு**
**ஏழும் ஆகும், உறை நிலத்தான.** 15

எ–ரை: ஆறாம் வேற்றுமைக்கண் கூறிய 'வாழ்ச்சிக் கிழமை' க்கு வாழ்கின்ற நிலப்பெயரிடத்து ஏழாம் வேற்றுமையும் வரும்.

## நான்கும் ஆறும்: கொடைப் பொருளில்

**583. குத் தொக வருஉம் கொடை எதிர் கிளவி**
**அப் பொருள் ஆறற்கு உரித்தும் ஆகும்** 16

எ–ரை: 'கு' என்னும் உருபு தொகுகின்ற கொடைப் பொருள் உணர்த்தும் நான்காம் வேற்றுமைத் தொகைச் சொல்லிடத்து, 'அது' என்னும் ஆறாம் வேற்றுமைக்கும் உரிமை உண்டு.

### ஐந்தும் இரண்டும்: அச்சப்பொருளில்

**584.** அச்சக் கிளவிக்கு ஐந்தும் இரண்டும்
எச்சம் இலவே, பொருள் வயினான. 17

எ–ரை: அச்சப்பொருளுக்கு, வேற்றுமை உருபு தொக அவற்றின் பொருள் நின்ற விடத்து, ஐந்தாம் வேற்றுமையும் இரண்டாம் வேற்றுமையும் ஒத்த உரிமை உடையன.

### புறனடை; வேற்றுமை மயக்கத்திற்கு வழக்குமுத்ன்மை

**585.** அன்ன பிறவும் தொல் நெறி பிழையாது
உருபினும் பொருளினும் மெய் தடுமாறி
இருவயின் நிலையும் வேற்றுமை எல்லாம்
திரிபு இடன் இலவே. தெரியுமோர்க்கே. 18

எ–ரை: இதுகாறும் மயக்கம் கூறப்பட்ட வேற்றுமைகளே அல்லாமல், அவை போல்வன பிறவும் பழமையாக வருகின்ற வழக்கத்தில் மாறுபடாது உருபினானும் பொருளினானும் ஒன்றிநிற்கும் இடத்து, ஒன்றன் நிலைக்களத்து மற்றொன்று சென்று நிலைபெறுகின்ற வேற்றுமை எல்லாம், ஆராய்ந்து உணர்வோர்க்கு மாறுபாடு உடையன அல்ல.

## 2. வேற்றுமை உருபுகள் மயங்குதல்

### உருபு தொடர்ந்த அடுக்கு

**586.** உருபு தொடர்ந்து அடுக்கிய வேற்றுமைக் கிளவி
ஒரு சொல் நடைய, பொருள் செல் மருங்கே. 19

எ–ரை: பல உருபுகளும் தம்முன் சேர்ந்து அடுக்கி வந்த வேற்றுமைச் சொற்கள் எல்லாம் ஒன்றினால் பொருள் முடியும் இடத்து முடிக்கும் சொல் ஆகிய அவ்வொன்றினாலேயே பொருள் முற்றுப்பெறும்.

## உருபு விரிந்து நிற்கும் இடம்

**587. இறுதியும், இடையும், எல்லா உருபும்.**
**நெறி படு பொருள்வயின் நிலவுதல் வரையார்.** 20

எ–ரை: வேற்றுமைத் தொடரின் இறுதியிடத்தும், அதன் இடைக்கண்ணும் ஆறு உருபுகளும் தத்தமக்கு உரிய பொருளின் கண் நிற்றலை நீக்கமாட்டார் அறிஞர்.

## உருபு மற்றோர் உருபை ஏற்றலும், தொக்கிவருதலும்

**588. பிறிது பிறிது ஏற்றலும், உருபு தொக வருதலும்**
**நெறிபட வழங்கிய வழி மருங்கு' என்ப.** 21

எ–ரை: மற்றோர் உருபினை ஏற்று வருதலும், உருபு தொக்கு வருதலும் பண்டு தொட்டு நெறிப்பட வழங்கி வருதல் ஆம். (ஏற்புழிக் கோடல் என்ற உத்தியால் ஒர் உருபு என்பது, ஆறாம்வேற்றுமை உருபு ஆகிய 'அது' என்பதெனக் கொள்க.)

## இறுதிக்கண் உருபு தொகல்

**589. ஐயும் கண்ணும் அல்லாப் பொருள்வயின்**
**மெய் உருபு தொகாஅ, இறுதியான** 22

எ–ரை: இரண்டாம் வேற்றுமை 'ஐ' யும், ஏழாம் வேற்றுமைக் 'கண்' ணும் அல்லாத பிறபொருளை உணர்த்தி நிற்கும் உருபு தொடர்மொழியின் இறுதியில் தொக்கு நில்லாது.

## உருபு மயக்கம்

**590. யாதன் உருபின் கூறிற்றுஆயினும்,**
**பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும்.** 23

எ–ரை: யாதானும் ஒரு வேற்றுமை உருபு கொடுத்துக் கூறியிருந்தாலும்,

அவ்வுருபின் பொருளால் பொருள் அமையாவிடத்துப் பொருள் செல்லும் வழியே வேற்றுமையின் பொருளும் செல்லும்.

## எதிர்மறையில் வேற்றுமைப் பொருள் திரியாமை

**591.** எதிர்மறுத்து மொழியினும், தம்தம் மரபின்
பொருள் நிலை திரியா, வேற்றுமைச் சொல்லே. 24

எ—ரை: எதிர்மறையாகக் கூறும் இடத்தும் தத்தம் இலக்கணப்படி வருகின்ற பொருளின் தன்மை மாறுபடாது விளங்குவது வேற்றுமை உருபு.

## உருபுகளின் திரிபு : 'கு', 'ஐ', 'ஆன்'

**592.** கு, ஐ, ஆன் என வரூஉம் இறுதி
அவ்வொடு சிவணும், செய்யுளுள்ளே. 25

எ—ரை: 'கு', 'ஐ', 'ஆன்' என்று வரும் மூன்று உருபுகளும், செய்யுளில் தொடர இறுதியில் நின்ற இடத்து அகரத்துடன் பொருந்தி நிற்றலும் உடையன.

**593.** அ எனப் பிறத்தல் அஃறிணை மருங்கின்
குவ்வும் ஐயும் இல்' என மொழிப. 26

எ—ரை: அஃறிணைப் பெயரிடத்து 'கு', 'ஐ', என்ற இரண்டு உருபுகளும் அகரத்தொடு பொருந்தித்திரிதல் இல்லை என்று கூறுவர் புலவர். ('ஆன்' என்ற உருபுக்கு மட்டுமே அஃறிணை யிடத்து அகரத்தோடு பொருந்திநிற்றல் உண்டு என்பது கருத்து)

## நான்கன் உருபு மயக்கம்

**594.** இதனது இது இற்று' என்னும் கிளவியும்,
அதனைக் கொள்ளும் பொருள்வயினானும்,
அதனான் செயற்படற்கு ஒத்த கிளவியும்,
முறை கொண்டு எழுந்த பெயர்ச் சொல் கிளவியும்
பால் வரை கிளவியும், பண்பின் ஆக்கமும்,

காலத்தின் அறியும் வேற்றுமைக் கிளவியும்,
பற்று விடு கிளவியும், தீர்ந்து மொழிக் கிளவியும்,
அன்ன பிறவும், நான்கன் உருபின்
தொல் நெறி மரபின, தோன்றலாறே. 27

எ–ரை: 'இப்பொருளின் இப்பகுதி இத்தன்மையை உடையது' என்னும் ஆறாம் வேற்றுமைப் பொருளும் 'ஒன்றனை ஒன்று ஏற்றுக் கொள்ளும்' என்னும் இரண்டாம் வேற்றுமைப் பொருளும், 'ஒன்றனால் ஒன்று தொழில் நிகழ்வதற்கு ஒப்புமை உடைத்து' என்னும் மூன்றாம் வேற்றுமைப் பொருளும், முறைப்பொருளை உணர்த்தி நின்ற பெயர்ச் சொல்லினது ஆறாம் வேற்றுமைப் பொருளும், நிலத்தை வரையறுத்துக் கூறும் பொருளும், பண்பினிடத்துத் தோன்றிய ஒப்புஉணர்த்தும் ஐந்தாம் வேற்றுமைப் பொருளும், காலத்திடத்து உணர்த்தப்படும் ஏழாம் வேற்றுமைப் பொருளும், பற்று விடுகின்ற பொருளும், தீர்ந்து மொழிப் பொருளும், ஆகிய ஐந்தாம் வேற்றுமைப் பொருளும் அவைபோன்ற பிறபொருளும் நான்காம் வேற்றுமை உருபில் தோன்றுதல் பழைமையான இலக்கண நெறி ஆகும்.

## ஏனை உருபுகளின் மயக்கம்

595. ஏனை உருபும் அன்ன மரபின;
மானம் இலவே, சொல் முறையான. 28

எ–ரை: நான்காம் வேற்றுமை உருபு அல்லாத பிற உருபுகளும், தொகையல்லாத தொடர்மொழியிடத்து ஒன்றனது பொருள் கெடாமைப் பொருட்டு மற்றொன்று வந்து மயங்கும் வழக்குமுறை.

## வேற்றுமைக்கு ஏது: தொழில் முதனிலை எட்டு

596. வினையே, செய்வது, செயப்படுபொருளே,
நிலனே, காலம், கருவி, என்றா–
இன்னதற்கு, இது பயன் ஆக, என்னும்–

அன்ன மரபின் இரண்டொடும் தொகைஇ,
ஆயெட்டு' என்ப – தொழில் முதனிலையே. 29

எ–ரை: வினை, வினைமுதல், செயப்படுபொருள், நிலம், காலம், கருவி ஆகிய ஆறுடன், 'இன்னதற்கு', 'இதுபயன்' என்னும் இரண்டும் கூட்டித் தொழில் முதல்நிலை (காரியத்திற்கு முன்னிற்கும் காரணம்) எட்டாம் என்று கூறுவர் புலவர்.

## எட்டிற் குறைதலும் உண்டு

597. அவைதாம்,
வழங்கு இயல் மருங்கின், குன்றுவ குன்றும் 30

எ–ரை: முன் நூற்பாவில் கூறிய தொழில் காரணங்கள் எட்டும் எல்லாத் தொழிலிடத்தும் வரும் என்னும் வரையறை கிடையாது; வழக்கிடத்துச் சில தொழில்களில் குறைய வேண்டியவை குறைந்தும் வருதல் உண்டு.

## ஆகுபெயர்கள் கிளவி முடிபு ஆகுபெயர் இயல்பு

598. முதலின் கூறும் சினை அறி கிளவியும்,
சினையின் கூறும் முதல் அறி கிளவியும்,
பிறந்தவழிக் கூறலும், பண்பு கொள் பெயரும்,
இயன்றது மொழிதலும், இருபெயரொட்டும்,
வினைமுதல் உரைக்கும் கிளவியொடு தொகைஇ,
அனை மரபினவே – ஆகுபெயர்க் கிளவி. 31

எ–ரை: முதற் சொல்லைக் கூறுமாற்றால் சினையை அறியும் சொல்லும் சினைச்சொல்லைக் கூறுமாற்றால் முதலை அறியும் சொல்லும், பொருளின் பெயரை அது தோன்றிய நிலத்தின் மேல் கூறும் சொல்லும். பண்புப் பெயர் பண்புடைப் பொருளை உணர்த்தும் சொல்லும், காரணப் பெயரால் காரியத்தை உணர்த்தும் சொல்லும், அன்மொழிப் பொருளிடத்து நின்ற இருபெயர் ஒட்டும், செய்யப்பட்ட பொருள்மேல் செய்தானைக் கூறும் சொல்லும் ஆகிய இவ்விலக்கணத்தை உடையன 'ஆகுபெயர்ச் சொல்' என்று கூறப்படும்.

## ஆகுபெயர்ச் சொல்லின் இரு வேறுபாடுகள்

**599.** அவைதாம்,
தம்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும்,
ஒப்பு இல் வழியான் பிறிது பொருள் சுட்டலும்,
அப் பண்பினவே நுவலும் காலை. 32

எ—ரை: முன்கூறப்பட்ட ஆகுபெயர், தத்தம் பொருளை விட்டு நீங்காது தத்தம் பொருளோடு ஒத்த பொருளைச் சேர்தலும், தம் பொருளுக்குத் தொடர்பு இல்லாத பிறிதொரு பொருளைச் சுட்டி நிற்றலும் ஆகிய இரு பண்புகளை உடையன.

**600.** வேற்றுமை மருங்கின் போற்றல் வேண்டும். 33

எ—ரை: முன் நூற்பாவில் கூறப்பட்ட இரண்டு வேற்றுமைகளையும் போற்றிக் கொள்ளல் வேண்டும். (ஆகுபெயரும் வேற்றுமை ஏற்கும் என்பது கருத்து).

## அளவு, நிறை ஆகு பெயராதல்

**601.** 'அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி
உள' என மொழிப, உணர்ந்திசினோரே. 34

எ—ரை: அளவுப் பெயரையும், நிறைப் பெயரையும் ஆகுபெயராகக் கொள்ளும் இடமும் உடையன என்பர் புலவர்.

## ஆகுபெயர்க்குப் புறனடை

**602.** கிளந்த அல்ல வேறு பிற தோன்றினும்,
கிளந்தவற்று இயலான் உணர்ந்தனர் கொளலே! 35

எ—ரை: முன் கூறப்பட்டனவே அன்றி வேறு ஆகுபெயர்கள் தோன்றுமானால், அவற்றையெல்லாம் மேற்கூறப்பட்ட இலக்கணங்களால் அறிந்து கொள்க.

## இயல் – 4

# விளி மரபு இயல்

(சொற்கள் 'விளி' எனப்படும் எட்டாம் வேற்றுமைப்)
பொருண்மையை ஏற்கும் இயல்பை உணர்த்தும் இயல்

## 1. விளியின் இயல்பு

603. 'விளி எனப்படுப கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்றும் இயற்கைய' என்ப. 1

எ–ரை: 'விளி' என்று சொல்லப்படுவன தம்மை ஏற்கும் பெயரினோடு விளக்குமாறு தோன்றும் தன்மையை உடையன என்று சொல்லுவர். ஆசிரியர் (கொள்ளாப் பெயர்களும் உண்டு என்பது கருத்து).

604. அவ்வே.
'இவ்' என அறிதற்கு மெய் பெறக் கிளப்ப. 2

எ–ரை: 'விளி' கொள்ளும் பெயரும், 'விளி' கொள்ளாப் பெயரும் இவை என்று விளங்கும் வண்ணம் ஈண்டு வழக்குத் தோன்ற விதந்து கூறப்படும்.

## 2. உயர்திணைப்பெயர் விளி ஏற்றல்

### விளி ஏற்கும் உயிர் ஈறுகள்

605. அவைதாம்,
இ, உ, ஐ, ஓ, என்னும் இறுதி
அப் பால் நான்கே – உயர்திணை மருங்கின்
மெய்ப் பொருள் சுட்டிய விளி கொள் பெயரே. 3

எ–ரை: சிறப்பாக எடுத்துரைக்கப்படுகின்ற பெயர்கள் தாம், 'இ', 'உ', 'ஐ', 'ஓ' என்னும் நான்கினையும் இறுதியாக உடைய பெயர்கள் உயர்திணையில் 'விளி' ஏற்கும்.

## அவற்றுள், இகர ஐகார ஈறுகள்

**606.** அவற்றுள்,
இ, ஈ ஆகும்; ஐ ஆய் ஆகும். 4

எ–ரை: முன்னே கூறப்பட்ட உயிர் ஈறுகளும் விளி ஏற்குமிடத்து 'இ' 'ஈ' ஆகும். 'ஐ' 'ஆய்' ஆகும்.

## ஒகார உகர ஈறுகள்

**607.** ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும். 5

எ–ரை: ஓகார இறுதியும், உகர இறுதியும் 'ஏ' யொடு பொருந்தி விளி ஏற்கும்.

## உகரத்திற்குச் சிறப்புவிதி

**608.** உகரம்தானே குற்றியலுகரம். 6

எ–ரை: முன்னே கூறப்பட்ட உகரம் ஆவது குற்றியலுகரம் ஆம்.

## பிற உயிர்கள் விளி கொள்ளாமை

**609.** 'ஏனை உயிரே உயர்திணை மருங்கின்
தாம் விளி கொள்ளா' என்மனார் புலவர். 7

எ–ரை: மேல் கூறப்பட்ட நான்கு ஈறுகளும் அல்லாத உயிர் ஈறுகள், உயிர்திணைக்கண் விளியினைக் கொள்ளமாட்டா என்று கூறுவர் புலவர்.

## அளபெடைப் பெயர்

**610.** 'அளபெடை மிகூஉம் இகர இறு பெயர்
இயற்கைய ஆகும் செயற்கைய' என்ப. 8

எ–ரை: இகர இறுதி அளபெடைப்பெயர், தன் அளவினும் மிக்கு ஒலிக்கு மிடத்து, இகரம் ஈகாரமாய்த் திரியாது, இயல்பாய் நின்றே விளி ஏற்கும்.

## முறைப் பெயர்

**611.** முறைப் பெயர் மருங்கின் ஐ என் இறுதி
ஆவொடு வருதற்கு உரியவும் உளவே. 9

எ–ரை: முறையை உணர்த்தும் பெயரிடத்து ஐ என்னும் ஈற்று முடிபு, ஆயாகத்திரியாது ஆவொடு பொருந்தி வருதற்குரியனவும் உள.

## அண்மைச் சொல் விளி

**612.** அண்மைச் சொல்லே இயற்கை ஆகும் 10

எ–ரை: முன்னே கூறப்பட்ட நான்கு ஈற்றுச் சொல்லும், அண்மையிடத்து இயல்பாக விளி ஏற்கும்.

## உயர்திணைப் பெயர், புள்ளியீறு

**613.** 'ன, ர, ல, ள, என்னும் அந் நான்கு' என்ப–
'புள்ளி இறுதி விளிகொள் பெயரே.' 11

எ–ரை: மெய் ஈற்று உயர்திணைப் பெயருள், 'ன' 'ர' 'ல' 'ள' என்னும் நான்கு புள்ளியையும் இறுதியாக உடைய சொற்களே விளி ஏற்கும்.

## பிற புள்ளியீறுகள் விளிகொள்ளாமை

**614.** ஏனைப் புள்ளி ஈறு விளி கொள்ளா. 12

எ–ரை: மேற் கூறப்பட்ட நான்கு ஈறும் அல்லாத ஏனைய புள்ளியீற்றுப் பெயர்கள் விளி கொள்ள மாட்டா.

## அவற்றுள் னகர ஈறு

**615.** 'அன்' என் இறுதி ஆ ஆகும்மே. 13

எ–ரை: முன்னே மொழியப்பட்டவற்றுள், னகரத்தை இறுதியாக உடைய 'அன்' என்னும் னகர இறுதி ஆவாய்த் திரிந்து விளி ஏற்கும்.

**616.** அண்மைச் சொல்லிற்கு அகரமும் ஆகும். 14

எ–ரை: அண்மை விளிக்கண் னகர இறுதி அகரம் ஆகும்.

## 'ஆன்' என்னும் ஈறு

617. 'ஆன்' என் இறுதி இயற்கை ஆகும். 15

எ—ரை: 'ஆன்' என்னும் னகர இறுதி இயல்பாகி நின்று விளி ஏற்கும்.

## தொழிலில் கூறும் ஆன் (வினையாலணையும் பெயர்)

618. தொழிலின் கூறும் 'ஆன்' என் இறுதி
ஆய் ஆகும்மே, விளிவயினான. 16

எ—ரை: தொழிலால் ஒரு பொருளைச் சொல்லும் 'ஆன்' ஈற்றுப்பெயர் விளியிடத்து 'ஆய்' ஆகும்.

## பண்புப் பெயர்

619. பண்பு கொள் பெயரும் அதன் ஓரற்றே. 17

எ—ரை: 'ஆன்' இறுதியாக உள்ள பண்புகொள் பெயரும் 'ஆன்' இறுதித் தொழிற்பெயரைப்போல் ஆய்' பெற்று விளி வடிவம் கொள்ளும்.

## அளபெடைப் பெயர்

620. அளபெடைப் பெயரே அளபெடை இயல. 18

எ—ரை: 'ஆன்' இறுதி அளபெடைப் பெயர், இகர இறுதி அளபெடைப் பெயர் போன்று தன்னளவில் நீண்டு இயல்பால் நின்றே விளி ஏற்கும்.

## முறைப் பெயர்

621. முறைப் பெயர்க் கிளவி ஏயொடு வருமே. 19

எ—ரை: னகர இறுதி முறைப் பெயர், ஏகாரம் பெற்று விளி ஏற்கும்.

## னகர ஈற்றுள் விளி ஏலாதவை

622. 'தான்' என் பெயரும், சுட்டுமுதற்பெயரும்
'யான்' என் பெயரும், வினாவின் பெயரும்,
அன்றி அனைத்தும் விளி கோள் இலவே. 20

எ–ரை: 'தான் என்னும் பெயரும், சுட்டினை முதலாக உடைய' அவன் , 'இவன்' 'உவன்' என்னும் பெயர்களும், 'யான்' என்னும் பெயரும், 'யாவன்' என்னும் வினாப் பெயரும், ஆகிய அன்னகர வீற்றுப் பெயர்கள் அனைத்தும் விளி ஏற்க மாட்டா.

## ரகர ஈறு

**623.** ஆரும் அருவும் ஈரொடு சிவணும் 21

எ–ரை: ரகர ஈற்றுள், 'ஆர்', 'அர்' என்ற இரண்டும் 'ஈர்' இறுதியாகப் பொருந்தி விளி ஏற்கும்.

## ரகர வீற்றுத் தொழிற் பெயர்

**624.** 'தொழிற்பெயர் ஆயின், ஏகாரம் வருதலும்
வழுக்கு இன்று' என்மனார், வயங்கியோரே. 22

எ–ரை: 'ஆர்' 'ஆர்' என்னும் இரண்டு ஈற்றுத் தொழிற்பெயர்க்கும் (வினையாலணையும் பெயர்) ஈர்வருதலே யன்றி 'ஏ' வரினும் குற்றம் இல்லை என்பர் விளங்கிய அறிவினை உடையவர்.

## பண்புப் பெயர்

**625.** பண்புகொள் பெயரும் அதன் ஓரற்றே. 23

எ–ரை: அவ்விரண்டு ஈற்றுப் பண்புகொள் பெயரும் அவ்விறுதித் தொழிற்பெயர் போல ஈரொடு வருதலே அன்றிச் சிறுபான்மை ஈரொடு ஏகாரம் பெற்றும் விளிவடிவம் கொள்ளும்.

## அளபெடைப் பெயர்

**626.** அளபெடைப் பெயரே அளபெடை இயல. 24

எ–ரை: ரகர ஈற்று அளபெடைப் பெயர் னகர ஈற்று அளபெடைப் பெயரைப் போன்றே தன்மாத்திரையின் மிக்கு ஒலிக்கும் இடத்துத் திரியாது இயல்பாய் நின்றே விளி ஏற்கும்.

### ரகர ஈற்றுள் விளி ஏலாதவை

627. சுட்டுமுதற் பெயரே முன் கிளந்தன்ன. 25

எ–ரை: 'அவர்', 'இவர்', 'உவர்' என்னும் ரகர இறுதிச் சுட்டுப் பெயர்கள் னகர இறுதிச் சுட்டுப் பெயர்கள் போன்றுவிளி கொள்ளா.

628. நும்மின் திரிபெயர், வினாவின் பெயர், என்று
அம் முறை இரண்டும் அவற்று இயல்பு இயலும். 26

எ–ரை: நும் மின் திரிபெயராகிய, 'நீயிர்' என்னும் பெயரும், 'யாவர்' என்னும் வினைப் பெயரும் ஆகிய இரண்டும் முற்கூறிய சுட்டுப் பெயரைப் போலவே விளிகொள்ளா.

### லகர ளகர ஈறு

629. எஞ்சிய இரண்டின் இறுதிப் பெயரே
நின்ற ஈற்று அயல் நீட்டம் வேண்டும். 27

எ–ரை: இதுகாறும் கூறப்பெறாத லகரம், ளகரம் என்னும் இறுதியை உடைய பெயர், ஈற்றின் அயல் எழுத்து நீண்டு விளிகொள்ளும்.

630. அயல் நெடிதுஆயின், இயற்கை ஆகும் 28

எ–ரை: ஈற்றின் அயல் எழுத்து நெட்டெழுத்தாயின் இயல்பாய் விளி கொள்ளும்.

### ளகர ஈற்று வினைப்பெயரும் பண்புப் பெயரும்

631. வினையினும் பண்பினும்
நினையத் தோன்றும் 'ஆள்' என் இறுதி
ஆய் ஆகும்மே, விளிவயினான. 29

எ–ரை: வினையினிடத்தும் பண்பினிடத்தும் வரும் 'ஆன்' இறுதியை உடைய பெயர் இயல்பாகாது 'ஆய்' ஏற்று விளி ஏற்கும்.

### முறைப் பெயர்

632. முறைப் பெயர்க் கிளவி முறைப் பெயர் இயல. 30

எ–ரை: ளகர ஈற்று முறைப்பெயர், னகர ஈற்று முறைப் பெயரைப் போன்றே ஏகாரம் பெற்று விளி கொள்ளும்.

### ளகர ஈற்றுள் விளி ஏலாதவை

633. 'சுட்டுமுதற்பெயரும் வினாவின் பெயரும்
முன் கிளந்தன்ன' என்மனார் புலவர். 31

'அவள்', 'இவள்', 'உவள்' என்னும் ளகார இறுதிச் சுட்டுப் பெயரும், 'யாவள்' என்னும் வினாப்பெயரும், முன்னே சொல்லப்பட்ட சுட்டுப் பெயரும் வினாப்பெயரும் போலவே விளிகொள்ளா.

### அளபெடைப் பெயர்

634. அளபெடைப் பெயரே அளபெடை இயல. 32

எ–ரை: லகர, ளகர ஈற்று அளபெடைப் பெயர்கள், முன்னே கூறப்பட்ட அளபெடைப் பெயர்கள் போன்றே அளவு நீண்டு, இயல்பாய் விளி கொள்ளும்.

## 3. விரவுப் பெயர் விளி ஏற்றல்

635. கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர்.
விளம்பிய நெறிய, விளிக்கும் காலை. 33

எ–ரை: விளிகொள்ளும் என்று இதுகாறும் கூறப்பட்ட உயிரீறு, புள்ளியீறு ஆகிய எட்டு ஈறுகளையும் உடைய அஃறிணைக் கண் வரும் பொதுப்பெயர், முன்னே கூறப்பட்டவாறே. விளி ஏற்கும்.

## 4. அஃறிணைப் பெயர் விளி ஏற்றல்

636. புள்ளியும் உயிரும் இறுதி ஆகிய
அஃறிணை மருங்கின் எல்லாப் பெயரும்
விளி நிலை பெறூஉம் காலம் தோன்றின்.
தெளிநிலை உடைய, ஏகாரம் வரலே. 34

எ–ரை: புள்ளியீறும், உயிரீறும் ஆகிய அஃறிணைப் பெயர்கள் எல்லாம்,

விளிஏற்கும் காலம் தோன்றும் இடத்து ஏகாரம் பெற்று வருதல் தெளியப்பட்ட நிலை உடையதாம்.

## 5. புறனடை

### மூவகையிலும் சேய்மை விளி

**637.** உள எனப்பட்ட எல்லாப் பெயரும்
அளபு இறந்தனவே, விளிக்கும் காலை,
சேய்மையின் இசைக்கும் வழக்கத்தான. 35

எ–ரை: உயர்திணைப் பெயர், அஃறிணைப் பெயர், விரவுப்பெயர் என்னும் மூவகைப் பெயருள்ளும் விளி ஏற்கும் நிலை உள எனப்பட்ட அனைத்தும், விளி ஏற்கும் காலத்து, சேய்மைக்கண் ஒலிக்கும் வழக்கிடத்தில் தத்தம் ஒலி அளவில் மிக்கு ஒலிப்பனவாம்.

### 'அம்ம' என்னும் இடைச் சொல் விளி

**638.** 'அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம்
அம் முறைப்பெயரொடு சிவணாது ஆயினும்,
விளியொடு கொள்ப' தெளியுமோரே. 36

எ–ரை: 'அம்ம' என்னும் அசைச் சொல்லின் நீட்டம், விளிப் பெயருடன் வாராது இடைச் சொல்லுடன் வரினும் விளியாகக் கொள்வர் தெளிவுடையார்.

### உயர்திணைப் பெயருள் விளி ஏலாதவை

**639.** த, ந, நு, எ, என அவை முதல் ஆகித்
தன்மை குறித்த ன, ர, ள, என் இறுதியும்,
அன்ன பிறவும், பெயர் நிலை வரினே,
இன்மை வேண்டும், விளியொடு கொளலே. 37

எ–ரை: 'த்', 'ந்', 'நு' என்னும் உயிர்மெய்யையும், 'எ' என்னும் உயிரையும் முதலாக உடையதாய், ஒருவனது உரிமைப் பொருளைக் குறித்து நின்ற 'ன்' 'ள்' 'ர்' என்னும் மூன்று மெய் இறுதியாக உடைய சொற்களும், அவை போன்ற பிறவும், ஆகிய பெயர்ச் சொற்கள் விளியுடன் சேர்தல் இல்லை. (விளி ஏலா.)

இயல் – 5

# பெயரியல்

(பெயர்ச்சொல்லின் இலக்கணம் பற்றிய
செய்திகளை உணர்த்தும் இயல்).

## 1. சொற்களின் பொது இயல்பு

### சொல் என்பதன் விளக்கம்

**640.** **எல்லாச் சொல்லும், பொருள் குறித்தனவே.** 1

எ–ரை: பெயர், வினை, இடை, உரி ஆகிய எல்லாச் சொற்களும் பொருள் குறித்தனவே; பொருள் குறியாது அவை நில்லா.

### சொல்லின் பொருள் தெரிநிலை

**641.** **'பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்,**
**சொல்லின் ஆகும்' என்மனார் புலவர்.** 2

எ–ரை: தன்னின் வேறாகிய பொருள் அறியப்படுதலும், தன்னையே உணர்த்துதலும் ஆகிய இரண்டும் சொல்லான் ஆகும் என்று கூறுவர் புலவர்.

### பொருண்மை நிலை: குறிப்பும் வெளிப்படையும்

**642.** **'தெரிபு வேறு நிலையலும், குறிப்பின் தோன்றலும்,**
**இரு பாற்று' என்ப – 'பொருண்மை நிலையே'.** 3

எ–ரை: முன்னே கூறப்பட்ட பொருண்மை தெரிதல் தெரிந்த பொருளில் நிற்றல், சொல்மாத்திரத்தால் தோன்றாமல் சொல்லோடு கூடிய குறிப்பால் தோன்றல் என இரண்டு வகைகளை உடையதாம் என்பர்.

### சொற்களின் பாகுபாடு

**643.** **'சொல் எனப்படுப பெயரே, வினை, என்று**
**ஆயிரண்டு' என்ப, அறிந்திசினோரே.** 4

எ–ரை: 'சொல்' என்று சொல்லப்படுவன பெயர்ச் சொல்லும் வினைச் சொல்லும் என்று இரண்டு வகைப்படும் என்பர் அறிஞர்.

**644.** 'இடைச்சொல் கிளவியும், உரிச்சொல் கிளவியும்
அவற்று வழி மருங்கின் தோன்றும்' என்ப. 5

எ–ரை: இடைச் சொல்லும், உரிச்சொல்லும், அவற்றின் சார்பில் தோன்றும் என்பர்.

## 2. பெயர்ச் சொல்லின் இலக்கணம்

**645.** அவற்றுள்,
பெயர் எனப்படுபவை தெரியும் காலை,
உயர்திணைக்கு உரிமையும், அஃறிணைக்கு உரிமையும்
ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்,
அம் மூஉருபின, தோன்றலாறே. 6

எ–ரை: மேற் கூறப்பட்ட நால்வகைச் சொற்களுள், பெயர்ச் சொற்கள் உயர்திணைக் கண் வருவனவும், அஃறிணைக் கண் வருவனவும், பொதுத் திணைக்கண் வருவனவும் என மூவகைப்பட்டுத் தோன்றும்.

**646.** இரு திணைப் பிரிந்த ஐம் பால் கிளவிக்கும்
உரியவை உரிய பெயர்வயினான. 7

எ–ரை: இருதிணையாகப் பிரிந்த ஐந்து பாற்சொற்களுக்கும் பெயரிடத்து உரியபொருள் உரியனவாம். (இருதிணைக்கும் உரிமையின்றிச் சார்புபற்றிப் பால் உணர்த்துதற்குரிய சொற்களும் பெயரில் அடக்குதற்கு உரியன என்பது கருத்து.

## 3. உயர்திணைப் பெயர்கள்

**647.** அவ்வழி,
அவன், இவன், உவன், என வரூஉம் பெயரும்;
அவள், இவள், உவள், என வரூஉம் பெயரும்;

அவர், இவர், உவர், என வரூஉம் பெயரும்;
யான், யாம், நாம், என வரூஉம் பெயரும்;
யாவன், யாவள், யாவர், என்னும்
ஆவயின் மூன்றொடு அப் பதினைந்தும்
பால் அறிவந்த உயர்திணைப் பெயரே. 8

எ—ரை: 'அவன்' என்னும் சொல் முதலாக 'யாவர் என்னும் சொல் இறுதியாகக் கூறப்பட்ட பதினைந்து' பெயரும் பாலைத் தெளிவாக உணர்த்தி நிற்கும் உயர்திணைப் பெயர்களாம்.

648. 'ஆண்மை அடுத்த மகன்' என் கிளவியும்,
'பெண்மை அடுத்த மகள்' என் கிளவியும்,
பெண்மை அடுத்த இகர இறுதியும்,
நம் ஊர்ந்து வரூஉம் இகர ஐகாரமும்,
முறைமை சுட்டா மகனும் மகளும்,
மாந்தர் மக்கள் என்னும் பெயரும்,
ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயரும்,
சுட்டு முதல் ஆகிய அன்னும் ஆனும்,
அவை முதல் ஆகிய பெண்டு என் கிளவியும்,
ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ,
அப் பதினைந்தும் அவற்று ஓரன்ன. 9

எ—ரை: 'ஆண்மகன்' முதலாக 'ஒப்பொடு வரும் 'கிளவி' இறதியாகக் கூறப்பட்ட பதினைந்தும் பாலை வெளிப்படையாக உணர்த்தும் உயர்திணைப் பெயர்களாம்.

649. 'எல்லாரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்,
எல்லீரும் என்னும் பெய்ர்நிலைக் கிளவியும்,
பெண்மை அடுத்த மகன் என் கிளவியும்,
அன்ன இயல' என்மனார் புலவர். 10

எ—ரை: 'எல்லாரும்' 'எல்லீரும்' 'பெண்மகன்' * என்னும் மூன்று பெயர்களும் முன்னே கூறியவை போன்று பால் உணர்த்தும் உயர்திணைப் பெயர்களாம்.

650. நிலப் பெயர். குடிப் பெயர், குழுவின் பெயரே,
வினைப் பெயர், உடைப்பெயர், பண்பு கொள் பெயரே,
பல்லோர்க் குறித்த முறை நிலைப் பெயரே,
பல்லோர்க் குறித்த சினை நிலைப் பெயரே,
பல்லோர்க் குறித்த திணை நிலைப் பெயரே,
கூடி வரு வழக்கின் ஆடு இயற் பெயரே,
இன்றிவர் என்னும் எண்ணியற்பெயரொடு,
அன்றி அனைத்தும் அவற்று இயல்பினவே. 11

எ—ரை: 'நிலப்பெயர்' முதலாக எண்ணியற் பெயர் இறுதியாக அனைத்துப் பெயர்களும் பால் தெளியுமாறு வரும் உயர்திணைப் பெயர்களாம்.

## புறனடை

651. அன்ன பிறவும் உயர்திணை மருங்கின்
பன்மையும் ஒருமையும் பால் அறிவந்த
என்ன பெயரும் அத் திணையவ்வே. 12

எ—ரை: முன்னே கூறப்பட்டன போன்ற பிறபெயர்களும், உயர்திணையிடத்துப் பன்மையாகவும், ஒருமையாகவும் உணர்த்திவரும் எல்லாப் பெயரும் உயர்திணைப் பெயராம்.

---

* புறத்துப் போய் விளையாடும் பேதைப் பருவத்துப் பெண்மகளைக் கொற்கை நாட்டார் 'பெண்மகன்' என்று வழங்கும் என்பது சேனாவரையர் குறிப்பு.

## 4. அஃறிணைப் பெயர்கள்

652\. அது, இது, உது, என வரூஉம் பெயரும்;
அவை முதல் ஆகிய ஆய்தப் பெயரும்;
அவை, இவை, உவை, என வரூஉம் பெயரும்;
அவை முதல் ஆகிய வகரப் பெயரும்;
'யாது, யா யாவை,' என்னும் பெயரும்;
ஆவயின் மூன்றொடு அப் பதினைந்தும்
பால் அறிவந்த அஃறிணைப் பெயரே. 13

எ—ரை: 'அது', 'இது' 'உது' ஆகிய சுட்டுப் பெயர் முதலாக, 'யாது', 'யா', 'யாவை' என்னும் பெயர் இறுதியாக இப்பதினைந்து பெயரும் பால் விளங்குமாறு வருகின்ற அஃறிணைப் பெயர்களாம்.

653\. பல்ல, பல, சில, என்னும் பெயரும்,
உள்ள, இல்ல, என்னும் பெயரும்,
வினைப் பெயர்க் கிளவியும், பண்பு கொள் பெயரும்
'இனைத்து' எனக் கிளக்கும் எண்ணுக்குறிப் பெயரும்
ஒப்பின் ஆகிய பெயர்நிலை உளப்பட,
அப் பால் ஒன்பதும் அவற்று ஓரன்ன. 14

எ—ரை: 'பல்ல' முதலாக 'ஒப்பினாகிய பெயர்' இறுதியாக உள்ள ஒன்பது பெயரும் பால் உணர்த்தி நிற்கும் அஃறிணைப் பெயர்களாம்.

### அவற்றிற்குக் 'கள்' விகுதி

654\. கள்ளொடு சிவணும் அவ் இயற்பெயரே,
கொள் வழி உடைய, பல அறி சொற்கே. 15

எ—ரை: 'கள்' என்னும் விகுதியுடன் சேர்தற்குரிய தன்மையை உடைய இயற்பெயர்கள் அவற்றுடன் சேர்ந்தவிடத்துப் பலவறி சொல்லாம்.

புறனடை

655. அன்ன பிறவும் அஃறிணை மருங்கின்
பன்மையும் ஒருமையும் பால் அறிவந்த
என்ன பெயரும் அத் திணையவ்வே. 16

எ–ரை: முன்னே கூறப்பட்டன போன்ற பிற பெயர்களும், அஃறிணையிடத்து ஒருமையும் பன்மையும் ஆகிய பால் விளங்குமாறு வருகின்ற எல்லாப் பெயரும் அஃறிணைப் பெயர்களாம்.

விகுதி பெறாமல் பால் உணர்த்துதல்

656. தெரிநிலை உடைய, அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும், வினையொடு வரினே. 17

எ–ரை: தெளிவாக உணரப் படுகின்ற அஃறிணை இயற்பெயர் பன்மை விகுதியுடன் புணைந்து அதற்குரிய வினையுடன் வருமிடத்து ஒருமை பன்மையை உணர்த்தும்.

## 5. விரவுப்பெயர்கள்

### இருதிணைக்கும் உரிய பெயர்

657. இரு திணைச் சொற்கும் ஓரன்ன உரிமையின்,
திரிபு வேறுபடூஉம் எல்லாப் பெயரும்,
நினையும் காலை, தம்தம் மரபின்
வினையொடு அல்லது பால் தெரிபு இலவே. 18

எ–ரை: இரண்டுதிணைக்கும் ஒத்த உரிமை உடைய எல்லாப் பெயரும், உயர்திணையிடத்து அத்திணைப் பெயராகவும், அஃறிணையிடத்து அத்திணைப் பெயராகவும், வேறுபடுகின்ற பொதுப்பெயரெல்லாம், ஆராயுமிடத்துத் தத்தம் மரபினை உடைய வினையுடன் பொருந்தியல்லது திணை விளங்குமாறில்லை.

658. நிகழூஉ நின்ற பலர் வரை கிளவியின்
உயர்திணை ஒருமை தோன்றலும் உரித்தே,
அன்ன மரபின் வினைவயினான. 19

எ—ரை: நிகழ்காலம் பற்றி வருகின்ற தன்னியல்பிற்பால் புலப்படுத் தாத சொல்லால், உயர்திணை ஒருமைப்பால் தோன்றுதலும் உரித்து; அப்பால் தோன்றுவதற்கேற்ற வினையிடத்து.

## விரவுப்பெயரின் தொகையும் வகையும்

659. இயற்பெயர், சினைப்பெயர், சினைமுதற்பெயரே,
முறைப்பெயர்க் கிளவி, தாமே, தானே,
எல்லாம், நீயிர், நீ, எனக் கிளந்து
சொல்லிய அல்ல பிறவும், ஆஅங்கு
அன்னவை தோன்றின், அவற்றொடும் கொளலே! 20

எ—ரை: இயற்பெயர், சினைப்பெயர், சினைமுதற்பெயர், முறைப்பெயர், தாம், தான், எல்லாம், நீயிர், நீ எனக் கூறப்பட்ட பெயர்களும் இவை போன்ற பிறவும் விரவுப் பெயர்களாம்.

## விரவுப்பெயர் விரி

660. அவற்றுள்,
நான்கே இயற்பெயர்; நான்கே சினைப்பெயர்,
நான்கு என மொழிமனார், சினைமுதற்பெயரே;
முறைப்பெயர்க் கிளவி இரண்டு ஆகும்மே;
ஏனைப் பெயரே தம்தம் மரபின. 21

எ—ரை: முன் கூறப்பட்ட விரவுப்பெயருள் இயற்பெயர் சினைப்பெயர், சினை முதற்பெயர் ஆகிய ஒவ்வொன்றும் நான்காம்; முறைப்பெயர் இரண்டாம்; ஏனைய பெயர்கள் ஒவ்வொன்றாம்.

## இயற்பெயர் நான்கு

661. 'அவைதாம்,
பெண்மை இயற்பெயர், ஆண்மை இயற்பெயர்,
பன்மை இயற்பெயர், ஒருமை இயற்பெயர், என்று
அந் நான்கு' என்ப— 'இயற்பெயர் நிலையே'. 22

எ—ரை: இயற்பெயர், பெண்மை இயற்பெயர் முதலாகச் சொல்லப் பட்ட நான்கு ஆகும்.

## சினைப்பெயர் நான்கு

662. 'பெண்மைச் சினைப்பெயர், ஆண்மைச் சினைப்பெயர்,
பன்மைச் சினைப்பெயர், ஒருமைச் சினைப்பெயர், என்று
அந் நான்கு' என்ப – 'சினைப்பெயர் நிலையே'. 23

எ—ரை: சினைப்பெயர், பெண்மைச் சினைப்பெயர் முதலாகச் சொல்லப்பட்ட நான்கு ஆகும்.

## சினைமுதற்பெயர் நான்கு

663. 'பெண்மை சுட்டிய சினைமுதற்பெயரே,
ஆண்மை சுட்டிய சினைமுதற்பெயரே,
பன்மை சுட்டிய சினைமுதற்பெயரே,
ஒருமை சுட்டிய சினைமுதற்பெயர், என்று
அந் நான்கு' என்ப– 'சினைமுதற்பெயரே' 24

எ—ரை: சினைமுதற்பெயர், பெண்மை சுட்டிய சினைமுதற்பெயர் முதலாகக் கூறப்பட்ட நான்கு ஆகும்.

## முறைப்பெயர் இரண்டு

664. 'பெண்மைமுறைப்பெயர், ஆண்மை முறைப் பெயர் என்று
ஆயிரண்டு' என்ப–'முறைப்பெயர் நிலையே.' 25

எ—ரை: முறைப்பெயர், ஆண்மை முறைப் பெயர், பெண்மை முறைப்பெயர், என்னும் இரண்டு ஆகும்.

## இயற்பெயர் முதலிய நான்கு பெயர்களின் பால்தெரிபு பெண்மை சுட்டிய பெயர்

**665.** பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருத்திக்கும் ஒன்றிய நிலையே. 26

எ–ரை: பெண்மை பற்றி வரும் இயற்பெயர் முதலாகிய நான்கு பெயரும், அஃறிணைப் பெண் ஒன்றற்கும், உயர்திணைப் பெண் ஒருத்திக்கும் உரிய என்பதாம்.

## ஆண்மை சுட்டிய பெயர்

**666.** ஆண்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே. 27

எ–ரை: ஆண்மை பற்றிவரும் இயற்பெயர் முதலாகிய நான்கு பெயரும். ஆண் ஒன்றற்கும் உயர்திணை ஆண் ஒருவனுக்கும் உரியவாகும்.

## பன்மை சுட்டிய பெயர்

**667.** பன்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றே, பலவே, ஒருவர், என்னும்
என்று இப் பாற்கும் ஓரன்னவ்வே. 28

எ–ரை: பன்மைப் பொருளைச் சுட்டிவருகின்ற எல்லாப் பெயரும், அஃறிணை ஒருமைக்கும், அஃறிணைப் பன்மைக்கும், உயர்திணைப் பன்மைக்கும் என்னும் இம் மூன்று பாலுக்கும் உரியனவாம்.

## ஒருமை சுட்டிய பெயர்

**668.** ஒருமை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருவர்க்கும் ஒன்றிய நிலையே. 29

எ–ரை: ஒருமைப் பொருளைச் சுட்டி வருகின்ற எல்லாப் பெயரும் அஃறிணை ஒன்றற்கும், உயர்திணை ஒருமைக்கும் உரியனவாம்.

## 'தாம்' என்னும் பெயர்

**669. 'தாம்' என் கிளவி பன்மைக்கு உரித்தே.** 30

எ–ரை: 'தாம்' என்னும் பெயர் இருதிணையிடத்துப் பன்மைப் பாலுக்கும் உரியது.

## 'தான்' என்னும் பெயர்

**670. 'தான்' என் கிளவி ஒருமைக்கு உரியதே.** 31

எ–ரை: 'தான் என்னும் பெயர் இருதிணையிடத்து ஒருமைப் பாலுக்கும் உரியது'.

## 'எல்லாம்' என்னும் பெயர்

**671. 'எல்லாம்' என்னும் பெயர்நிலைக் கிளவி**
**பல்வழி நுதலிய நிலைத்து ஆகும்மே.** 32

எ–ரை: 'எல்லாம்' என்னும் பெயர், இரண்டு திணையிடத்தும் பன்மைப் பொருளை உணர்த்தி நிற்கும்.

**672. தன் உள்ளுறுத்த பன்மைக்கு அல்லது,**
**உயர்திணை மருங்கின், ஆக்கம் இல்லை.** 33

எ–ரை: 'எல்லாம்' என்னும் சொல், உயர்திணையிடத்து வரும் காலத்து, தன்மைப் பன்மைக்கு வருதல் அல்லது, முன்னிலைப் பன்மைக்கும் படர்க்கைப் பன்மைக்கும் வாராது.

## 'நீயிர்', 'நீ' என்னும் சொற்கள்

**673. 'நீயிர், நீ' என வரூஉம் கிளவி**
**பால் தெரிபு இலவே; உடன்மொழிப் பொருள.** 34

எ–ரை: 'நீயிர்', 'நீ' என்னும் இரண்டு சொல்லும் திணை விளங்குமாறு நில்லா; இருதிணையினையும் ஒருங்கே பொருந்தும் சொற் பொருண்மை உடையன.

## 'நீ' என்னும் சொல்

**674.** அவற்றுள்.
'நீ' என் கிளவி ஒருமைக்கு உரித்தே. 35

எ—ரை: 'நீ' என்னும் பெயர் ஒருமையை உணர்த்தும்.

## 'நீயிர்' என்னும் சொல்

**675.** ஏனைக் கிளவி பன்மைக்கு உரித்தே. 36

எ—ரை: 'நீயிர்' என்னும் பெயர் பண்மைக்கு உரியது.

## 'ஒருவர்' என்னும் சொல்

**676.** 'ஒருவர்' என்னும் பெயர்நிலைக் கிளவி
இரு பாற்கும் உரித்தே தெரியும் காலை. 37

எ—ரை: 'ஒருவர்' என்னும் பெயர்ச்சொல் உயர்திணை ஆண் பெண் என்ற இரு பாற்கும் பொதுவாய் உரியது. ஆராயும் காலத்து.

## 'ஒருவர்' வினை முடிவு

**677.** தன்மை சுட்டின் பன்மைக்கு ஏற்கும். 38

எ—ரை: 'ஒருவர்' என்பதன் சொல் தன்மையைக் கருதுமிடத்து, பன்மை வினை கொள்ளுதற்கு உரியதாகும்.

## 'நீயிர்' 'நீ' 'ஒருவர்' – பால் தெரிபு

**678.** இன்ன பெயரே இவை எனல் வேண்டின்,
முன்னம் சேர்த்தி முறையின் உணர்தல்! 39

எ—ரை: 'நீயிர்', 'நீ', 'ஒருவர்', என்னும் மூன்று பெயர்களும் இன்ன பாலை உணர்த்தும் பெயர் என்று அறிய வேண்டுமாயின், சொல்லுவானின் குறிப்போடு கூட்டி முறைமையாக உணர்தல் வேண்டும். (முன்னம் – குறிப்பு, உணர்தல் – உணர்க.)

## பால் திரிந்த பெயரின் வினைமுடிபு

679. மகடூஉ மருங்கின் பால் திரி கிளவி
மகடூஉ இயற்கை, தொழில்வயினான. 40

எ—ரை: பெண்மைப் பொருளிடத்துப் பால் திரிந்து வருகின்ற 'பெண்மகன்' என்னும் பெயர், வினை கொள்ளுங்கால் பெண்மைக்குரிய வினை முடிபைக் கொள்ளும்.

## பெயர் ஈறு செய்யுளுள் திரியும் வழக்கு

680. ஆ, ஒ, ஆகும் பெயருமார் உளவே;
ஆயிடன் அறிதல், செய்யுளுள்ளே! 41

எ—ரை: ஆகாரம் ஒகாரமாகத் திரியும் இடமும் உண்டு; அவ்வாறு திரியும் இடம் செய்யுள் வழக்குள் என்று அறிதல் வேண்டும்.

## உயர்திணை ஈறு அமைந்த விரவுப் பெயர்கள்

681. இறைச்சிப் பொருள்வயின் செய்யுளுள் கிளக்கும்
இயற்பெயர்க் கிளவி உயர்திணை சுட்டா;
நிலத்துவழி மருங்கின் தோன்றலான. 42

எ—ரை: செய்யுளில் கருப்பொருள் மேல் கூறப்படும் இரண்டு திணைக்கும் உரிய பெயர் உயர்திணை சுட்டாது, அவ்வந் நிலத்து அஃறிணைப் பொருளால் வழங்கப்பட்டு வருதலால் (குறிஞ்சி முதலிய நில இயற்கையின் சார்பிற் கருப்பொருளாய்த் தோன்றலால், அவ்விரவுப் பெயர்கள் அஃறிணைப் பொருளவாம் என்பது கருத்து).

682. திணையொடு பழகிய பெயர் அலங்கடையே. 43

எ—ரை: கருப்பொருளை உணர்த்துகின்ற பொதுப் பெயர், உயர்திணையை உணர்த்தாது அஃறிணை உணர்த்துவது; அவ்வத்திணைக்கு உரியவாய் வழங்கி வருகின்ற பெயர் அல்லா இடத்து.

இயல்–6

# வினை இயல்

(வினைச் சொல்லின் இலக்கணம் பற்றிய
செய்திகளை உணர்த்தும் இயல்)

## 1. வினைச் சொல்லின் பொது இயல்பு

### 'வினை' இன்னதென்ற வரையறை

683. 'வினை' எனப்படுவது வேற்றுமை கொள்ளாது,
நினையும் காலை, காலமொடு தோன்றும். 1

எ–ரை: 'வினை' என்று கூறப்படுவது, வேற்றுமை உருபுகளை ஏற்காது, ஆராயுமிடத்துக் காலத்தைக் காட்டி நிற்கும் சொல்லாம்.

### மூவகைக் காலம்

684. 'காலம்தாமே மூன்று' என மொழிப. 2

எ–ரை: இங்குக் கூறப்பட்ட 'காலம்' என்பது மூன்று என்று மொழிவர் அறிஞர்.

685. இறப்பின், நிகழ்வின், எதிர்வின், என்றா
அம் முக் காலமும் குறிப்பொடும் கொள்ளும்
மெய்ந் நிலை உடைய, தோன்றலாறே. 3

எ–ரை: இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் அம்மூன்று காலமும், வினைச் சொற்கள் தோன்றும் நெறியிடத்துக் குறிப்பு வினையுடனும் பொருந்தும் உண்மைத் தன்மையை உடையன.

### வினைச் சொல் பாகுபாடு

686. குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றிக்
காலமொடு வரூஉம் வினைச்சொல் எல்லாம் –
உயர்திணைக்கு உரிமையும், அஃறிணைக்கு உரிமையும்,
ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்,
அம் மூஉருபின, – தோன்றலாறே. 4

எ–ரை: குறிப்புப் பொருளிடத்தும், வினைப்பொருளிடத்தும் தோன்றிக் காலத்துடன் வரும் எல்லா வினைச் சொற்களும், தோன்றுமிடத்து உயர்திணைக்கு உரியனவாயும், அஃறிணைக்கு உரியனவாயும், இரண்டு திணைக்கும் உரியனவாயும், மூவகைப் பாகுபாட்டிற் பொருந்தும்.

## 2. உயர்திணை வினை

### தன்மைப் பன்மை வினைமுற்று

687. அவைதாம்,
அம், ஆம், எம், ஏம், என்னும் கிளவியும்,
உம்மொடு வரூஉம் க, ட, த, ற, என்னும்
அந் நாற் கிளவியொடு ஆயெண் கிளவியும்
பன்மை உரைக்கும் தன்மைச் சொல்லே.

எ–ரை: உயர்திணை வினைகளுள், 'அம்', 'ஆம்', 'எம்'. 'ஏம்' என்னும் நான்கு ஈற்றுச் சொல்லும், 'கும்', 'டும்' 'தும்', 'றும்' என்னும் நான்கு ஈற்றுச் சொல்லும் ஆகிய எட்டும், தன்மைப் பன்மையை உணர்த்தும் வினை முற்றுக்கள் ஆகும்.

### தன்மை ஒருமை வினைமுற்று

688. க, ட, த, ற, என்னும்
அந் நான்கு ஊர்ந்த குன்றியலுகரமொடு,
என், ஏன்.. அல், என வரூஉம் ஏழும்
தன்வினை உரைக்கும் தன்மைச் சொல்லே. 6

எ—ரை: 'கு', 'டு', 'து', 'று' என்னும் அந்நான்கு ஈற்றுச் சொற்களுடன், 'என்', 'ஏன்', 'அல்' என்னும் மூன்று ஈற்றுச் சொற்களும் கூடிய ஏழும் தன்மை ஒருமையை உணர்த்தும் வினை முற்றுக்கள் ஆகும்.

### 'செய்கு' என்னும் வாய்பாட்டு வினை

**689.** 'அவற்றுள்,
"செய்கு" என் கிளவி வினையொடு முடியினும்,
அவ் இயல் திரியாது' என்மனார் புலவர். 7

எ—ரை: மேல் கூறப்பட்ட தன்மை ஒருமை வினை முற்றுக்கள் ஏழினுள், 'செய்கு' என்னும் வாய்பாட்டு முற்றுச் சொல், வினையுடன் முடியும் ஆயினும், தன் முற்றாம் தன்மையில் திரியாது என்று கூறுவர் புலவர்.

### படர்க்கை ஒருமை வினைமுற்று

**690.** அன், ஆன், அள், ஆள், என்னும் நான்கும்
ஒருவர் மருங்கின் படர்க்கைச் சொல்லே. 8

எ—ரை: 'அன்', 'ஆன்', 'அள்', 'ஆள்' என்னும் நான்கு ஈற்றுச் சொல்லும் உயர்திணையில் ஒருமையை உணர்த்தும் படர்க்கை வினைமுற்று ஆகும்.

### படர்க்கைப் பன்மை வினைமுற்று

**691.** அர், ஆர், ப, என வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கின் படர்க்கைச் சொல்லே. 9

எ—ரை: 'அர்', 'ஆர்' 'ப' என்னும் மூன்று ஈற்றுச் சொல்லும், உயர்திணையில் பன்மையை உணர்த்தும் படர்க்கை வினைமுற்று ஆகும்.

### 'செய்மார்' என்னும் வாய்பாட்டு வினை

**692.** 'மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை;
காலக் கிளவியொடு முடியும்' என்ப. 10

எ–ரை: 'மார்' இறுதிச் சொல்லும், வினைகொண்டு முடியும் இடத்துப் பன்மை உணர்த்தும் படர்க்கைச் சொல்லாம்.

## உயர்திணைக்குரிய ஒருமை வினைமுற்று

693. பன்மையும் ஒருமையும் பால் அறிவந்த
அந் நால்–ஐந்தும் மூன்று தலை இட்ட
முன்னுறக் கிளந்த உயர்திணையவ்வே. 11

எ–ரை: பன்மையும் ஒருமையும் ஆகிய பால் அறியுமாறு வந்த இருபத்து மூன்று ஈற்றுச் சொற்களும், முதலில் கிளவியாக்கத்துட் கிளந்து எடுத்துக் கொண்ட உயர்திணை இடத்தனவாம்.

## புறனடை: தன்மைப் பன்மைக்குத் திரிதல் வேறுபாடு

694. அவற்றுள்,
பன்மை உரைக்கும் தன்மைக் கிளவி
எண் இயல் மருங்கின் திரிபவை உளவே.

எ–ரை: மேல் கூறப்பட்ட இருபத்துமூன்று ஈற்றுச் சொற்களுள், தன்மைப் பன்மை ஈறுடைய உயர்திணைச் சொற்கள் எண்ணுகின்ற இடத்து அஃறிணைப் பொருளையும் உளப்படுத்துச் செல்லுதலை உடையன ஆம்.

## 'யார்' என்னும் குறிப்பு முற்று

695. யாஅர் என்னும் வினாவின் கிளவி
அத் திணை மருங்கின் முப் பாற்கும் உரித்தே. 13

எ–ரை: 'யார்' என்னும் வினாப் பொருள் தரும் சொல், உயர்திணை யிடத்து மூன்று பாலுக்கும் உரியது ஆகும்.

## வினைமுற்றுக்களின் ஈறுதிரிதல்: செய்யுள் வழக்கு

696. பால் அறி மரபின் அம் மூஈற்றும்
ஆ ஓ ஆகும், செய்யுளுள்ளே. 14

எ–ரை: பால் விளங்க வரும் தன்மையினை உடைய 'ஆன்', 'ஆள்', 'ஆர்' என்னும் மூன்று ஈற்றின் கண்ணும் செய்யுளிடத்து ஆகாரம் ஒகாரம் ஆகும்.

**697.** 'ஆய்' என் கிளவியும் அவற்றொடு கொள்ளும். 15

எ–ரை: முன்னிலை ஈற்றுள் 'ஆய்' என்னும் இறுதியும், செய்யுள் வழக்கில் ஆகாரம் ஒகாரமாய்த் திரியும்.

## உயர்திணைக் குறிப்பு வினை

**698.** அதுச் சொல் வேற்றுமை உடைமையானும்,
'கண்' என் வேற்றுமை நிலத்தினானும்,
ஒப்பினானும், பண்பினானும், என்று
அப்பால் காலம் குறிப்பொடு தோன்றும். 16

எ–ரை: ஆறாம் வேற்றுமைக்குரிய உடைமைப் பொருளிடத்தும், ஏழாம் வேற்றுமைக்குரிய நிலப்பொருளிடத்தும், ஒப்புப் பொருளிடத்தும், பண்புப் பொருளிடத்தும் அப்பொருட்பகுதி பற்றி வரும் சொல்லிடத்துக் காலம் குறிப்பினால் தோன்றும்.

**699.** அன்மையின், இன்மையின், உண்மையின், வன்மையின்
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்
என்ன கிளவியும் குறிப்பே காலம். 17

எ–ரை: 'அன்மை', 'இன்மை', 'உண்மை' 'வன்மை' என்னும் பொருள் உணர்த்தி வருவனவும், அவை போன்ற பிறவும், குறிப்புப் பொருளுடன் வரும் எல்லாச் சொல்லும் காலம் குறிப்பால் உணரப்படுவனவே.

## குறிப்பு வினை முற்றின் ஈறு

**700.** பன்மையும் ஒருமையும் பால் அறிவந்த
அன்ன மரபின் குறிப்பொடு வரூஉம்
காலக் கிளவி உயர்திணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபாடு இலவே. 18

எ—ரை: பன்மையும் ஒருமையும் ஆகிய பால் வேறுபாட்டினை விளக்கும் குறிப்புப் பொருளை உடையவாய் வரும் வினைச்சொல், மேல்வரும் உயர்திணையிடத்துக் கூறிய தெரிநிலை வினையுடன் ஒக்கும்; (அவற்றின் ஈறே த்மக்கும் ஈறாய் ஏற்று ஒத்து வரும்)

## 3. அஃறிணை வினை

### பன்மை வினை முற்று

701. 'அ, ஆ, வ' என வரூஉம் இறுதி
அப் பால் மூன்றே பலவற்றுப் படர்க்கை 19

எ—ரை: 'அ', 'ஆ', 'வ' என்னும் மூன்று ஈற்றுச் சொற்களும் அஃறிணைப் பன்மைப் படர்க்கையை உணர்த்தும் வினை முற்றுக்களாம்.

### ஒருமை வினை முற்று

702. ஒன்றன் படர்க்கை த, ற, ட, ஊர்ந்த
குன்றியலுகரத்து இறுதி ஆகும். 20

எ—ரை: ஒருமையை உணர்த்தும் படர்க்கை வினை முற்றுச் சொற்களாவன, 'து', 'று', 'டு' என்னும் மூன்றினையும் இறுதியாக உடையவை ஆம்.

### அஃறிணைப் பன்மை வினை முற்றுக்கள்

703. பன்மையும் ஒருமையும் பால் அறிவந்த
அம் மூ—இரண்டும் அஃறிணையவ்வே. 21

எ—ரை: பன்மை, ஒருமை ஆகிய பால் உணர வந்த மேலே கூறப்பட்ட 'அ', 'ஆ', 'வ', 'து', 'று', 'டு', என்னும் ஆறு ஈற்றுச் சொற்களும் அஃறிணைக்கு உரியன.

## 'எவன்' என்னும் குறிப்பு வினைமுற்று

**704.** 'அத் திணை மருங்கின் இருபால் கிளவிக்கும்
ஒக்கும்' என்ப – 'எவன் என் வினாவே.' 22

எ–ரை: 'எவன்' என்னும் வினாச்சொல், மேற்கூறப் பட்ட அஃறிணை இரண்டு பாலுக்கும் உரிமை உடையது என்று கூறுவர் புலவர்.

## குறிப்பு வினைமுற்று

**705.** 'இன்று, இல, உடைய' என்னும் கிளவியும்
'அன்று, உடைத்து, அல்ல' என்னும் கிளவியும்
பண்பு கொள் கிளவியும், 'உள' என் கிளவியும்,
பண்பின் ஆகிய சினைமுதற் கிளவியும்,
ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ,
அப் பால் பத்தும் குறிப்பொடு கொள்ளும். 23

எ–ரை: 'இன்று', 'இல்', 'உடைய', 'அன்று' 'உடைத்து', 'அல்ல', 'கரிது', 'கரிய' – போன்ற பண்புகொள் கிளவிகள்; 'உள' என்னும் சொல்; 'வெண்கோட்டது 'நெடுஞ்செவிய' – முதலிய பண்பினாகிய சினை முதற்சொற்கள்; 'பொன்னன்னது' 'பொன்னன்ன' முதலிய ஒப்போடு வரும் கிளவி – ஆகிய பத்தும் குறிப்பு வினைமுற்றுச் சொற்களாம்.

## குறிப்பு வினை முற்றின் ஈறு

**706.** பன்மையும் ஒருமையும் பால் அறிவந்த
அன்ன மரபின் குறிப்பொடு வரூஉம்
காலக் கிளவி அஃறிணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபாடு இலவே. 24

எ–ரை: பன்மையும் ஒருமையும் ஆகிய பாலினை விளக்கிக் குறிப்புப் பொருள் விளைத்து வரும் வினைச்சொல், மேலே கூறப்பட்ட அஃறிணை வினைச்சொல்லோடு வேறுபாடின்று; அவற்றின் ஈறே தமக்கும் ஈறாய் ஏற்பன ஏற்று ஒத்து வரும்.

## 4. விரவு வினை

(இருதிணைக்கும் உரியவினை)

### பெயரும் முறையும் தொகையும்

707. முன்னிலை, வியங்கோள், வினை எஞ்சு கிளவி,
இன்மை செப்பல், 'வேறு' என் கிளவி,
'செய்ம்மன, செய்யும், செய்த' என்னும்
அம் முறை நின்ற ஆயெண் கிளவியும்
திரிபு வேறுபடூஉம் செய்திய ஆகி,
இரு திணைச் சொற்கும் ஓரன்ன உரிமைய. 25

எ–ரை: முன்னிலை, வியங்கோள், வினையெச்சம், இன்மையை உணர்த்தும் 'இல்லை' என்ற குறிப்புச் சொல் வேறு என்னும் சொல், 'செய்ம்மன' 'செய்யும்' 'செய்த' என்னும் சொற்கள் உளப்பட எட்டுச் சொற்களும், இருதிணைக்கும் பொதுவாகிய நிலையினின்றும் பிரிந்து ஒருகால் உயர்திணையையும், ஒருகால் அஃறிணையையும் உணர்த்தி வேறுபடுகின்ற தொழில் உடையனவாய், இரண்டு திணைச் சொல்லாதற்கும் ஒத்தஉரிமையை உடையனவாம்.

### முன்னிலை ஒருமை வினைமுற்று

708. அவற்றுள்,
முன்னிலைக் கிளவி
'இ, ஐ, ஆய்' என வரூஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும். 26

எ–ரை: மேற்கூறிய இருதிணைக்கும் உரிய வினைகளுள், முன்னிலைச் சொல்லினுள் 'இ', 'ஐ', 'ஆய்' என்னும் மூன்று ஈற்றுச் சொல்லும், ஒருவனுக்கும் ஒருத்திக்கும் ஒன்றற்கும் பொருந்துமாறு வரும்.

## முன்னிலைப் பன்மை வினை முற்று

709. 'இர், ஈர், மின்' என வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்ஓரனைய' என்மனார் புலவர். 27

எ–ரை: 'இர்', 'ஈர்', 'மின்' என வரும் மூன்று இறுதிச் சொல்லும் உயர்திணைப் பலர்பாலிடத்தும், அஃறிணைப் பலவின் பாலிடத்தும் கூறுங்கால் ஒத்த உரிமையை உடையன.

## ஏனை வினைகள்

710. எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி
ஐம் பாற்கும் உரிய, தோன்றலாறே. 28

எ–ரை: முன்னே சொல்லப்பட்ட (707–ஆம் நூற்பா) எட்டினுள், முன்னிலையொழிந்த ஏனைய ஏழு வினைச் சொற்களும், தத்தம் பொருளோடு தோன்றுமிடத்து மூன்று இடத்துக்கும், ஐந்து பாலுக்கும் உரியனவாம்.

## வியங்கோள் வினை

711. அவற்றுள்,
முன்னிலை, தன்மை, ஆயீரிடத்தொடு
மன்னாது ஆகும், வியங்கோட் கிளவி. 29




எ–ரை: மேற்கூறப்பட்ட எட்டு வினைகளுள், வியங்கோட் கிளவி, தன்மை, முன்னிலை ஆகிய இரண்டு இடத்தும் பெரும்பான்மையும் நிலைபெற்று வராது; சிறுபான்மை வருதல் உண்டு.

## 'செய்யும்' என்னும் வினை

712. பல்லோர் படர்க்கை, முன்னிலை, தன்மை,
அவ் வயின் மூன்றும், 'நிகழும் காலத்துச்
செய்யும்' என்னும் கிளவியொடு கொள்ளா. 30

எ–ரை: பலர்பால் படர்க்கை, முன்னிலை, தன்மை ஆகிய அவ்விட மூன்றும், பாலும் ஆகிய எஞ்சிய வினைக்குரிய பொருளிடத்து மூன்றும், நிகழ் காலத்து வரக்கூடிய 'செய்யும்' என்னும் சொல்லுடன் இயையா. ('செய்யும்' என்னும் பெயர் எச்சச் சொல்லாயின் இயையும்; அது 720–ஆம் நூற்பாவில் கூறப்பெறும்.)

## வினையெஞ்சு கிளவி (வினையெச்ச வாய்பாடுகள்)

713. 'செய்து, செய்யூ, செய்பு, செய்தென,
செய்யியர், செய்யிய, செயின், செய, செயற்கு' என
அவ் வகை ஒன்பதும் வினை எஞ்சு கிளவி. 31

எ–ரை: 'செய்து'; 'செய்யூ', 'செய்பு', 'செய்தென', 'செய்யியர்', 'செய்யிய', 'செயின்', 'செய', 'செயற்கு', என்று கூறப்பட்ட அவ்வொன்பதும் வினையெச்சச் சொற்களாம்.

714. 'பின், முன், கால், கடை, வழி, இடத்து' என்னும்
அன்ன மரபின் காலம் கண்ணிய
என்ன கிளவியும் அவற்று இயல்பினவே. 32

எ–ரை: 'பின்', 'முன்', 'கால்', 'கடை', 'வழி', 'இடம்' என்னும் இறுதியை உடையனவாய் வரும் சொற்களும், அவை போன்று காலத்தைக் கருதி வருவன பிறவும் வினையெச்சச் சொற்களே.

## முதல் மூன்று வாய்பாடுகள்

715. அவற்றுள்,
முதல் நிலை மூன்றும் வினைமுதல் முடிபின. 33

எ–ரை: முன் இரண்டு நூற்பாக்களிலும் கூறப்பட்ட பதினைந்து வினையெச்ச வாய்பாடுகளுள், முதலில் நின்ற 'செய்து', 'செய்யது', 'செய்யு' என்னும் மூன்றும் தம் வினைமுதலுக்குரிய வினையால் முடியும் தன்மையை உடையன.

716. ‘அம் முக் கிளவியும் சினை வினை தோன்றின்,
சினையொடு முடியா, முதலொடு முடியினும்,
வினை ஓரனைய’ என்மனார் புலவர். 34

எ–ரை: வினைமுதல் வினையைக் கொள்ளும் அம்மூன்று வினையெச்சச் சொல்லும், சினை வினையானது சினை வினையோடு முடியாது முதல் வினையுடன் முடியும் ஆயினும், வினையினால் ஒருதன்மையை உடையனவேயாம் என்று கூறுவர் புலவர்.

## ஏனைய வாய்பாடுகள்

717. ஏனை எச்சம் வினைமுதலானும்,
ஆன் வந்த இயையும் வினைநிலையானும்,
தாம் இயல் மருங்கின் முடியும்’ என்ப. 35

எ–ரை: அம்மூன்று ஒழிந்த ஏனைய பன்னிரண்டு வினை யெச்சங்களும், வினைமுதல் வினையினாலும், அவ்விடத்தே வந்து பொருந்தும் ஏனைய வினையினாலும், வரையறை இன்றித் தாம் இசையும் வழியில் முடிவுபெறும்.

## வினையெஞ்சு கிளவி அடுக்கி முடிதல்

718. பல் முறையானும் வினை எஞ்சு கிளவி
சொல் முறை முடியாது அடுக்குந வரினும்,
முன்னது முடிய முடியுமன் பொருளே. 36

எ–ரை: ஒருவாய்பாட்டாலும், பல வாய்பாட்டாலும் அடுக்கி வரினு ம், முடிக்கும் சொல்லால் முறையாக முடியாமல், முதற்கண் நின்ற எச்சம் முடியுமானால், ஏனைய வாய்பாட்டால் வந்தனவும் முடிந்தனவேயாம்.

## பெயரெஞ்சு கிளவி (பெயரெச்ச வாய்பாடுகள்)

719. நிலனும், பொருளும், காலமும், கருவியும்,
வினைமுதற் கிளவியும், வினையும், உளப்பட

அவ் அறு பொருட்கும் ஓரன்ன உரிமைய,
'செய்யும், செய்த' என்னும் சொல்லே. 37

எ–ரை: 'செய்யும்', 'செய்த' என்னும் சொற்கள், தொழிற் காரணங்கள் எட்டினுள், நிலன், பொருள், காலம், கருதி, வினைமுதற் கிளவி, வினை என்னும் ஆறுக்கும் ஒத்த உரிமையை உடையன.

## 'செய்யும்' என்னும் வாய்பாடு

720. அவற்றொடு வருவழி, 'செய்யும்' என் கிளவி,
முதற்கண் வரைந்த மூஈற்றும் உரித்தே. 38

எ–ரை: நிலம் முதலாக முன்னே கூறப்பட்ட ஆறோடு பொருந்தி வரும் இடத்துச் 'செய்யும்' என்னும் வினைச் சொல், முன்னே வரையறை செய்து விலக்கப்பட்ட பலர் பால் படர்க்கை, முன்னிலை, தன்மை என்னும் மூன்று இடத்திற்கும் உரியதாகிவரும்.

## இரண்டு எச்சங்கள் குறித்த பிற செய்திகள்

721. பெயர் எஞ்சு கிளவியும் வினை எஞ்சு கிளவியும்,
எதிர் மறுத்து மொழியினும், பொருள் நிலை திரியா. 39

எ–ரை: பெயரெச்சமும், வினையெச்சமும், செய்தற்பொருளே அன்றிச் செய்யாப் பொருளைப் பற்றி மறுத்துச் சொன்னாலும், அவ்வெச்சப் பொருளை உணர்த்தும் தம் தன்மையினின்றும் மாறுபட மாட்டா.

## எச்சங்களின் இடையே பிற வரல்

722. தம்தம் எச்சமொடு சிவணும் குறிப்பின்
எச் சொல்ஆயினும், இடைநிலை வரையார். 40

எ–ரை: தத்தம் எச்சத்துடன் சேரும் குறிப்பினை உடைய எச்சொல்லாயினும் அவை இடை வந்து நிற்றலை நீக்கமாட்டா.

## செய்யும் என்னும் பெயரெச்சம் ஈறு கெடுதல்

723. 'அவற்றுள்,
'செய்யும்' என்னும் பெயர் எஞ்சு கிளவிக்கு
மெய்யொடும் கெடுமே, ஈற்றுமிசை உகரம்;
அவ் இடன் அறிதல்' என்மனார் புலவர். 41

எ–ரை: 'செய்யும்' என்னும் பெயரெச்சத்தின் இறுதிஉகரம் தான் ஏறி நின்ற யகர மெய்யுடன் கெட்டுவிடும் என்று சொல்லுவர் புலவர்; அவ்விடங்களை ஆராய்ந்து அறிதல் வேண்டும் என்பது அவர்தம் கருத்து.

## 'செய்து' என்னும் எச்சம்

724. 'செய்து' என் எச்சத்து இறந்த காலம்,
எய்து இடன் உடைத்தே, வாராக் காலம். 42

எ–ரை: இறந்தகாலத்திலேயே பெரும்பாலும் வருதற்குரிய 'செய்து' என்னும் பெயரெச்சம், ஒவ்வோர் இடங்களில், எதிர்காலத்தை உணர்த்தி வருதலும் உண்டு, (நீ 'உண்டு' வருவாய் – என முடிக்கும் சொல்லின் எதிர் காலத்தை எய்தும் இடம் உண்டு என்பது கருத்து.)

## முக்காலத்திற்கும் ஒத்த பொருளை நிகழ்காலத்தால் கூறும் மரபு

725. முந் நிலைக் காலமும் தோன்றும் இயற்கை
எம் முறைச் சொல்லும் நிகழும் காலத்து
மெய்ந் நிலைப் பொதுச் சொல் கிளத்தல் வேண்டும். 43

எ–ரை: மூவகைக் காலத்தும் உளதாம் இயல்பினை உடைய எவ்வகைப்பட்ட பொருளையும், (எல்லாப் பொருளையும்) நிகழ்காலத்துப் பொருள் நிலைமை உடைய 'செய்யும்' என்னும் வாய்பாட்டுக் கிளவியால், சொல்லுக.

## விரைவின் கண் கால மயக்கம்

**726.** 'வாராக் காலத்தும் நிகழும் காலத்தும்
ஓராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி
இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள' என்மனார் புலவர். 44

எ–ரை: எதிர்காலத்தும், நிகழ்காலத்தும் ஒரு தன்மையாக வரும் வினைச் சொல்லின் பொருளை இறந்த காலத்தால் சொல்லுதல் விரைந்த பொருளை உடையன என்று சொல்லுவர் புலவர்.

## சிறப்பு ஏதுவால் கால மயக்கம்

**727.** மிக்கதன் மருங்கின் வினைச்சொல் சுட்டி,
அப் பண்பு குறித்த வினைமுதற் கிளவி,
செய்வது இல்வழி, நிகழும் காலத்து
மெய் பெறத் தோன்றும் பொருட்டு ஆகும்மே. 45

எ–ரை: உயர்வின் கண் வருகின்ற வினைச்சொல்லைக் கருதி, அம்மிகுதியினது பண்பினைக் குறித்து வரும் வினை முதற்சொல், சுட்டிச் சொல்லுவதொரு வினை முதற்பொருள் இல்லாத இடத்து, நிகழ்காலத்தால் உண்மைபெறும் பொருளை உடையது.

## 'இது செயல் வேண்டும்' என்னும் முற்று

**728.** 'இது செயல் வேண்டும்' என்னும் கிளவி
இருவயின் நிலையும் பொருட்டு ஆகும்மே–
தன் பாலானும் பிறன் பாலானும். 46

எ–ரை: 'இது செய்தல்வேண்டும்' என்னும் பொருள் பட வரும் சொல், தன்னிடத்தாயினும் பிறனிடத்தாயினும் என்னும் இரண்டிடத்தும் நிலைபெறும் பொருளை உடையது. ('சாத்தன் ஓதல் வேண்டும்' –1) சாத்தன் தான் ஓதுதலை விரும்பும் – 2) சாத்தன் ஓதுதலைத் தந்தை விரும்பும் என்ற இருபொருள் பட வருதலை எடுத்துக் காட்டாகக் காண்க.)

## வற்புறுத்தற் பொருளில் வரும் வினா

729. வன்புற வரூஉம் வினாவுடை வினைச் சொல்
எதிர் மறுத்து உணர்த்துதற்கு உரிமையும் உடைத்தே. 47

எ–ரை: வற்புறுத்தல் தோன்ற வரும் வினாவை உடைய வினைச் சொல்லானது, வினை நிகழ்ச்சியை உணர்த்தாது எதிர்மறைப் பொருளில் வருதலையும் உரித்தாதல் உடையது. ('யான் வைதேனோ' என்பதில் 'யான் வைதிலேன்' என்ற எதிர் மறைப் பொருளும் உணர்த்தப் படுதல் காண்க.)

## இயற்கைப் பொருளிலும், தெளிவுப் பொருளிலும் கால மயக்கம்

730. வாராக் காலத்து வினைச்சொல் கிளவி
இறப்பினும் நிகழ்வினும் சிறப்பத் தோன்றும்–
இயற்கையும் தெளிவும் கிளவிக்கும் காலை. 48

எ–ரை: எதிர்காலத்திற்கு உரிய வினைச்சொற் பொருண்மை, இயற்கை என்றும் தெளிவு என்றும் சிறப்புறக் கூறும் இடத்து, இறந்தகாலச் சொல்லாலும், நிகழ் காலச் சொல்லாலும் விளக்கமாகக் கூறப்படும்.

## செயப்படுபொருள் வினைமுதல் போலக் கூறப்படுதல்

731. செயப்படுபொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கு இயல் மரபே. 49

எ–ரை: செயப்படு பொருளைச் செய்யும் வினைமுதல் போல அதற்கு வினை நிகழ்ச்சி உண்டாகக் கூறுதலும் வழக்கின் கண் உள்ள மரபு ஆகும்.

## கால மயக்கம் வேறு இடங்களில்

732. இறப்பே எதிர்வே ஆயிரு காலமும்
சிறப்பத் தோன்றும், மயங்குமொழிக் கிளவி. 50

எ–ரை: இறந்தகாலம், எதிர்காலம் என்னும் இரண்டு காலமும் மயங்கு மொழிக் கிளவியாய் விளங்கத் தோன்றலும் உண்டு.

**733. ஏனைக் காலமும் மயங்குதல் வரையார். 51**

எ–ரை: இறந்த காலமும் எதிர்காலமுமே அன்றி, நிகழ்காலமும் ('ஏனைக் காலம்') அவற்றுடன் மயக்குதலை நீக்கமாட்டார் இலக்கணப்புலவர்.

இயல் – 7

# இடை இயல்

(இடைச் சொல்லின் இலக்கணத்தை விரித்துரைக்கும் இயல்)

## 1. இடைச் சொல்லின் பொது இலக்கணம்

### இடைச்சொல்லின் இயல்பு

734. 'இடை' எனப்படுப பெயரொடும் வினையொடும்
நடை பெற்று இயலும்; தமக்கு இயல்பு இலவே. 1

எ–ரை: 'இடைச்சொல்' என்று கூறப்படும் சொற்கள் பெயரோடும், வினையோடும் சார்ந்து நடைபெற்று இயங்குவன; தனியேவரும் இயல்பு உடையன அல்ல.

### இடைச்சொற் பாகுபாடும் வரும் இடமும்

735. அவைதாம்,
புணரியல் நிலையிடைப் பொருள் நிலைக்கு உதநவும்,
வினை செயல் மருங்கின் காலமொடு வருநவும்,
வேற்றுமைப் பொருள்வயின் உருபு ஆகுநவும்,
அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்,
இசைநிறைக் கிளவி ஆகி வருநவும்,
தம்தம் குறிப்பின் பொருள் செய்குநவும்,
ஒப்பு இல் வழியான் பொருள் செய்குநவும், என்று
அப் பண்பினவே, நுவலும் காலை. 2

எ–ரை: இடைச் சொற்கள், (1) இரண்டு, சொற்கள் சேரும் இடத்து அப்பொருள் விளங்க வருவனவும், (2) வினைச்சொல்லை முடிக்கும் இடத்துக் காலத்தை உணர்த்தி வருவனவும், (3) வேற்றுமைப் பொருளிடத்து உருபுகளாய் வருவனவும், (4) பொருள் இன்றி அசை நிலையாகி வருவனவும், (5) ஒலியை நிறைத்தற் பொருளில் வருவனவும், (6) தத்தம் குறிப்பால் பொருள் உணர்த்தி வருவனவும், (7) ஒப்புப் பொருள் தோன்றா இடத்துத் தான் அப்பொருள் தந்து வருவனவும், எனச் சொல்லும் இடத்து அவ்வேழுவகையானும் வருவனவாம்.

### இடைச்சொல் நிற்கும் இடமும் வேறுபாடும்

**736.** ‘அவைதாம்,
முன்னும் பின்னும் மொழி அடுத்து வருதலும்,
தம் ஈறு திரிதலும், பிறிது அவண் நிலையலும்,
அன்னவை எல்லாம் உரிய’ என்ப. 3

எ–ரை: முன்னே சொல்லப்பட்ட இடைச்சொல், தான் சேரும் சொல்லின் இடையே வருதலேயன்றி முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும், தம்முடைய இறுதி திரிந்து வருதலும், இரண்டு இடைச் சொல் இணைந்து வருதலும் ஆகிய தன்மை யெல்லாம் உடையது.

## 2. சிறப்பு இலக்கணம்

### தத்தம் குறிப்பிற் பொருள் உணர்த்துபவை ‘மன்’ ‘என்னும் இடைச்சொல்

**737.** ‘கழிவே, ஆக்கம், ஒழியிசைக் கிளவி, என்று
அம் மூன்று’ என்ப – ‘மன்னைச் சொல்லே.’ 4

எ–ரை: ‘மன்’ என்னும் இடைச் சொல், ‘கழிவு’ ஆக்கம் ‘ஒழியிசை ஆகிய மூன்று பொருள் குறித்து வருவது என்று கூறுவர் புலவர்.

### ‘தில்’ என்னும் இடைச்சொல்

**738.** ‘விழைவே, காலம், ஒழியிசைக் கிளவி, என்று
அம் மூன்று’ என்ப – ‘தில்லைச் சொல்லே’. 5

எ–ரை: ‘தில்’ என்னும் இடைச் சொல், ‘விழைவு’ ‘காலம்’, ‘ஒழியிசை’ என்னும் மூன்று பொருள்களைக் குறித்து வரும் என்று கூறுவர் புலவர்.

### ‘கொன்’ என்னும் இடைச்சொல்

**739.** அச்சம், பயம் இலி, காலம், பெருமை, என்று
அப் பால் நான்கே – கொன்னைச் சொல்லே. 6

எ–ரை: 'கொன்' என்னும் இடைச்சொல், 'அச்சம்', 'பயன் இல்லாமை', 'காலம்' 'பெருமை', என்னும் நான்கு பொருள்களைக் குறித்து வரும்.

## 'உம்' என்னும் இடைச்சொல்

**740.** எச்சம், சிறப்பே, ஐயம், எதிர்மறை,
முற்றே, எண்ணே, தெரிநிலை, ஆக்கம், என்று
அப் பால் எட்டே – உம்மைச் சொல்லே. 7

எ–ரை: 'உம்' என்னும் இடைச்சொல், 'எச்சம்' 'சிறப்பு' 'ஐயம்', 'எதிர்மறை', 'முற்று', 'எண்', 'தெரிநிலை' ஆக்கம் என்னும் எட்டுப் பொருள்களைக் குறித்து வரும்.

## 'ஒ' என்னும் இடைச்சொல்

**741.** 'பிரிநிலை, வினாவே, எதிர்மறை, ஒழியிசை,
தெரிநிலைக் கிளவி, சிறப்பொடு தொகைஇ,
இரு–மூன்று' என்ப – ஒகாரம்மே. 8

எ–ரை: 'ஒ' என்னும் இடைசொல், 'பிரிநிலை', 'வினா' 'எதிர்மறை', 'ஒழியிசை' 'தெரிநிலை', 'சிறப்பு' ஆகிய ஆறு பொருள்கள் குறித்து வரும்.

## 'ஏ' என்னும் இடைச்சொல்

**742.** தேற்றம், வினாவே, பிரிநிலை, எண்ணே,
ஈற்றசை, இவ் ஐந்து–ஏகாரம்மே. 9

எ–ரை: 'ஏ' என்னும் இடைச்சொல், 'தேற்றம்', 'வினா', 'பிரிநிலை' 'எண்' 'ஈற்றசை' என்னும் ஐந்து பொருள் குறித்து வரும்.

## 'என' என்னும் இடைச்சொல்

**743.** வினையே, குறிப்பே, இசையே, பண்பே
எண்ணே, பெயரொடு, அவ் அறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே – 'என' என் கிளவி. 10

எ–ரை: 'என' என்னும் இடைச்சொல், 'வினை', 'குறிப்பு' 'இசை', 'பண்பு' 'எண்', 'பெயர்', என்னும் ஆறு பொருள்களையும் கருதிய நிலையினை உடையது.

## என்று என்னும் இடைச்சொல்

**744.** 'என்று' என் கிளவியும் அதன் ஓரற்றே. 11

எ–ரை: 'என்று' என்னும் இடைச்சொல்லும் 'என' என்னும் இடைச்சொல் போன்றே அவ்வாறு பொருள்களையும் குறித்து வருதலால் அதனோடு ஒத்த இயல்பை உடையது.

## 'தில்' என்னும் இடைச்சொல்லிற்கு மேலும் ஒரு முடிபு

**745.** விழைவின் தில்லை தன்னிடத்து இயலும். 12

எ–ரை: விழைவுப் பொருளில் வரும் 'தில்' என்னும் இடைச்சொல், தன்மை இடம் ஒன்றிலேயே வரும்; முன்னிலை, படர்க்கை இடங்களில் வாராது.

## 'ஏ' 'ஓ' இடைச்சொற்களுக்கு மேலும் ஒரு முடிபு

**746.** 'தெளிவின் ஏயும், சிறப்பின் ஓவும்,
அளபின் எடுத்த இசை' என்ப. 13

எ–ரை: தெளிவுப் பொருளில் வரும் ஏகார இடைச் சொல்லும், சிறப்புப் பொருளில் வரும் ஓகார இடைச்சொல்லும், மாத்திரைக்கண் மிக்க இசையினை உடையன (அளபெடையாய் வரும் என்பது கருத்து).

## மற்று என்னும் இடைச்சொல்

**747.** 'மற்று என் கிளவி வினைமாற்று, அசைநிலை,
அப் பால் இரண்டு' என மொழிமனார் புலவர். 14

எ–ரை: 'மற்று' என்னும் இடைச்சொல், 'வினைமாற்று' 'அசைநிலை' என்னும் இரண்டு பொருளில் வரும் என்று புலவர் கூறுவர்.

## 'எற்று' என்னும் இடைச்சொல்

**748.** 'எற்று' என் கிளவி இறந்த பொருட்டே. 15

எ–ரை: 'எற்று' என்னும் இடைச் சொல், 'போயிற்று' என்னும் பொருளைக் குறிப்பதாய் வரும்.

## 'மற்றையது' என்னும் சொல்

**749.** 'மற்றையது' என்னும் கிளவிதானே
சுட்டு நிலை ஒழிய, இனம் குறித்ததன்றே. 16

எ–ரை: 'மற்றையது' என்று சொல்லப்படும் சொல்லிற்கு முன்னிலையால் வரும் 'மற்றை' என்னும் ஐகாரம், இறுதி இடைச்சொல் சுட்டப்பட்ட பொருளை நீக்கி அதனோடு ஒத்த பிறிது ஒன்றாகிய இனத்தைக் குறித்து வரும்.

## 'மன்ற' என்னும் இடைச்சொல்

**750.** 'மன்ற' என் கிளவி தேற்றம் செய்யும். 17

எ–ரை: 'மன்ற' என்னும் இடைச்சொல், தெளிவுப் பொருளை உணர்த்தி வரும். (தேற்றம் – தெளிவு).

## 'தஞ்சம்' என்னும் இடைச்சொல்

**751.** தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே. 18

எ–ரை: 'தஞ்சம்' என்னும் இடைச்சொல் எளிமைப் பொருளை உணர்த்தி வரும்.

## 'அந்தில்' என்னும் சொல்

**752.** அந்தில்–ஆங்க, அசைநிலைக் கிளவி, என்று
ஆயிரண்டாகும் இயற்கைத்து' என்ப. 19

எ–ரை: 'அந்தில்' என்னும் இடைச்சொல், 'ஆங்கு' என்னும் இடப்பொருளை உணர்த்துவதும், அசைநிறையாய் வருவதும் என இரண்டு இயல்புகளை உடையது என்பர் அறிஞர்.

## 'கொல்' என்னும் இடைச்சொல்

**753.** கொல்லே ஐயம். 20

எ—ரை: 'கொல்' என்னும் இடைச்சொல் ஐயப் பொருளை உணர்த்துவது.

## 'எல்' என்னும் இடைச்சொல்

**754.** எல்லே இலக்கம். 21

எ—ரை: 'எல்' என்னும் இடைச்சொல் 'விளக்கம்' என்ற பொருளை உணர்த்துவது.

## 'ஆர்' என்னும் இடைச்சொல்

**755.** இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி
பலர்க்கு உரியெழுத்தின் வினையொடு முடிமே. 22

எ—ரை: இயற்பெயர்க்கு முன்னர் வரும் 'ஆர்' என்னும் இடைச்சொல் உயர்திணைப் பலர்பாற்கு உரிய ஈற்று எழுத்தினை உடைய வினாவோடு முடிதலை உடையது.

## 'ஆர்' என்பதற்கு மேலும் ஒரு விதி

**756.** அசைநிலைக் கிளவி ஆகுவழி அறிதல்! 23

எ—ரை: 'ஆர்' என்னும் இடைச்சொல், அசைநிலையாக வரும் இடமும் உண்டு; அதனை ஆராய்ந்து அறிக.

## 'ஏ' 'குரை' என்னும் இடைச்சொற்கள்

**757.** 'ஏயும் குரையும் – இசைநிறை, அசைநிலை,
ஆயிரண்டு ஆகும் இயற்கைய' என்ப. 24

எ—ரை: 'ஏ' 'குரை', என்னும் இரண்டு இடைச்சொற்களும் இசைநிறை, அசைநிலை என்னும் பொருள்களை உணர்த்தும்.

## 'மா' என்னும் இடைச்சொல்

**758.** 'மா' என் கிளவி வியங்கோள் அசைச்சொல் 25

எ—ரை: 'மா' என்னும் இடைச்சொல், வியங்கோள் வினையைச் சார்ந்து வரும் அசைநிலைப் பொருண்மை உணர்த்தும்.

## முன்னிலை அசைநிலை இடைச்சொற்கள்

**579.** 'மியா, இக, மோ, மதி, இகும், சின்' என்னும்
ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல். 26

எ-ரை: 'மியா', 'இக', 'மோ', 'மதி', 'இகும்', 'சின்' என்னும் ஆறு இடைச்சொற்களும் முன்னிலை இடத்தின்கண் வரும் அசைநிலைச் சொற்களாம்.

## 'இகும்' 'சின்' என்பன

**760.** 'அவற்றுள்,
இகுமும் சின்னும் ஏனை இடத்தொடும்
தகு நிலை உடைய' என்மனார் புலவர். 27

எ-ரை: 'இகும்' 'சின்' என்று முன்னே கூறப்பட்டன இரண்டும், படர்க்கை, தன்மை என்ற இரண்டு இடங்களோடும் பொருந்தும் நிலை உண்டு என்று கூறுவர் புலவர்.

## 'அம்ம' என்னும் இடைச்சொல்

**761.** அம்ம கேட்பிக்கும். 28

எ-ரை: 'அம்ம' என்னும் இடைச்சொல் ஒருவனை ஒருவன், 'இதனைக்கேள்' என்று கேட்பிக்கும் பொருண்மை உடையது.

## 'ஆங்க' என்னும் இடைச்சொல்

**762.** ஆங்க உரையசை. 29

எ-ரை: 'ஆங்க' என்னும் இடைச்சொல், ஒன்று உரைத்தற்கண் அசைநிலையாய் வரும்.

## ஒப்பில் போலி

**763.** ஒப்பு இல் போலியும் அப் பொருட்டு ஆகும் 30

எ-ரை: ஒப்புமைப் பொருளை உணர்த்தாத 'போலும்' என்னும் சொல்லும், முன் நூற்பாவில் கூறியபடி உரையசைப் பொருளில் வரும்.

## அசைநிலைச் சொற்கள்

**764.** 'யா, கா,
பிற, பிறக்கு, அரோ, போ, மாது' என வரூஉம்
ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி 31

எ–ரை: 'யா', 'கா', 'பிற', 'பிறக்கு', 'அரோ', 'போ', 'மாது' என வரும் இடைச் சொற்களும் அசைநிலைச் சொற்களாம்.

## பிரிவு இல்லாத அசைநிலைச் சொற்கள்

**765.** 'ஆக, ஆகல், என்பது' என்னும்
ஆவயின் மூன்றும் பிரிவு இல் அசைநிலை. 32

எ–ரை: 'ஆக', 'ஆகல்', 'என்பது' என்னும் மூன்று இடைச் சொற்களும் தம்மிற் பிரிதல் இல்லா அசைநிலைச் சொற்கள்; இரட்டித்தே நிற்கும் இயல்பு உடையவை.

## 'ஔ' என்னும் இடைச்சொல்

**766.** 'ஈர் அளபு இசைக்கும் இறுதியில் உயிரே
ஆயியல் நிலையும் காலத்தானும்,
அளபெடை நிலையும் காலத்தானும்,
அளபெடை இன்றித் தான் வரும் காலையும்,
உள' என மொழிப – 'பொருள் வேறுபடுதல்.'
குறிப்பின் இசையான் நெறிப்படத் தோன்றும். 33

எ–ரை: இரண்டு மாத்திரை ஒலியளவு உடைய மொழிகளின் இறுதியில் வாராது என்று கூறப்பட்ட ஔகாரம்; மேலே கூறப்பட்ட பிரிவில் அடை நிலைபோன்று இரட்டித்து நிற்கும் இடத்தும், இரட்டியாது அளபெடையாக வரும் இடத்தும், அளபெடை இன்றித் தான் வரும் இடத்தும், பொருள் வேறுபடுதல் உளது என்பர் அறிஞர், சொல்லு வானுடைய குறிப்பிற்கு ஏற்ற ஓசையால் புலப்பட்டுத் தோன்றும். ('ஔஔ', 'ஔஉ', 'ஔ')

## குறிப்புச் சொற்கள்

**767.** நன்று ஈற்று ஏயும், அன்று ஈற்று ஏயும்,
அந்து ஈற்று ஓவும், அன் ஈற்று ஓவும்,
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும். 34

எ–ரை: 'நன்று ஈற்று ஏ' ஆகிய 'நன்றே'; 'அன்று ஈற்று ஏ' ஆகிய 'அன்றே'; 'அந்து ஈற்று ஓ' ஆகிய 'அந்தோ'; 'அன் ஈற்று ஓ' ஆகிய 'அன்னோ', ஆகிய சொற்களும், அவைபோல்வன பிறவும் சொல்லுவானுடைய குறிப்பினால் பொருள் உணர்த்தும் இயல்பு உடையனவாம்.

## 'உம்' இடைச்சொல்லுக்கு மேலும் ஒரு முடிபு

**768.** எச்ச உம்மையும், எதிர்மறை உம்மையும்,
தத்தமுள் மயங்கும் உடனிலை இலவே. 35

எ–ரை: எச்சப் பொருள் உணர்த்தும் உம்மை நின்ற இடத்து, எச்சப் பொருள் சொல்லாகிய எதிர்மறை உம்மைத் தொடர்வந்து தன்முன் ஒன்றும் இயைபு நிலை இல்லை.

**769.** எஞ்சு பொருட் கிளவி செஞ்சொல் ஆயின்,
பிற்படக் கிளவார், முற்படக் கிளத்தல்! 36

எ–ரை: எச்ச உம்மையால் தழுவப்படும் சொல் உம்மை இல்லாத தனிச்சொல்லாக இருக்குமானால், அவ்வும்மை இல்லாத தனிச்சொல்லை அவ்வும்மைத் தொடர்க்குப் பின் சொல்லாது முற்படச் சொல்லுக. ('சாத்தன் வந்தான் கொற்றனும் வந்தான்' என்பது போலக் கூறுதல் வேண்டும்.)

## முற்றும்மை எச்சவும்மை ஆதல்

**770.** முற்றிய உம்மைத் தொகைச்சொல் மருங்கின்,
எச்சக் கிளவி உரித்தும் ஆகும். 37

எ–ரை: முற்றும்மையின் பக்கத்து நின்ற தொகைச் சொல்லிடத்து எச்சச்சொல் உரிமை உடையது ஆகும். ('பத்தும் கொடாதே' என்று 'சிலகொடு' என்ற எச்சஉம்மைப் பொருள் தரல் தெளிவு).

### 'ஏ' என்னும் இடைச்சொல்லிற்கு மேலும் ஒரு முடிபு

771. 'ஈற்று நின்று இசைக்கும் ஏ' என் இறுதி,
கூற்றுவயின், ஓர் அளபு ஆகலும் உரித்தே. 38

எ-ரை: செய்யுள் இறுதிக்கண் நின்று ஒலிக்கும் ஈற்று அசை ஏகாரம். செய்யுள் உறுப்போடு பொருந்தக் கூறும் இடத்து ஒரு மாத்திரை அளபாக ஒலித்தலும் உரியது.

## 3. எண்ணுப்பொருளில் வரும் இடைச்சொற்கள்

### 'உம்' 'என' என்னும் இடைச்செற்கள்

772. உம்மை எண்ணும், 'என' என் எண்ணும்,
தம்வயின் தொகுதி கடப்பாடு இலவே. 39

எ-ரை: 'உம்மையால் வரும் எண்ணும், 'என' வால் வரும் எண்ணும், இறுதியிடத்துத் தொகை பெறுதலைக் கடப்பாடாக உடையன அல்ல; தொகைச் சொல் பெற்று வருதலும் உண்டு; பெறாது வருதலும் உண்டு.

### எண்ணில் வரும் ஏகாரம்

773. 'எண் ஏகாரம் இடையிட்டுக் கொளினும்'
எண்ணுக் குறித்து இயலும்' என்மனார் புலவர். 40

எ-ரை: சொல் தோறும் பொருந்தி வாராது, எண்ணுப் பொருளில் வரும் 'ஏ' என்னும் இடச்சொல், இடையே விட்டு வரினும், எண்ணுதற் பொருளேயாம்.

### 'எனா' 'என்னா' என்னும் இடைச்சொற்கள்

774. 'உம்மை தொக்க எனா' என் கிளவியும்,
'ஆ ஈறு ஆகிய என்று' என் கிளவியும்,
ஆயிரு கிளவியும் எண்ணுவழிப்பட்டன. 41

எ-ரை: உம்மை தொக்கு நின்ற 'எனா' என்னும் இடைச்சொல்லும், 'என்னா' 'என்னும்' இடைச்சொல்லும், ஆகிய இரண்டும் எண்ணுகின்ற பொருளில் வரும்.

## தொகை பெற்றே முடியும் எண் இடைச்சொற்கள்

**775.** அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும்,
பெயர்க்கு உரி மரபின் செவ்வெண் இறுதியும்,
ஏயின் ஆகிய எண்ணின் இறுதியும்,
யாவயின் வரினும், தொகை இன்று இயலா. 42

எ–ரை: மேலே கூறப்பட்ட 'எனா' 'என்றா' என்பவற்றுள் வரும் எண்ணின் இறுதியும், இடைச் சொல்லால் அன்றிப் பெயரால் எண்ணப் படும், செவ்வெண் இறுதியும், ஏகாரத்தினால் வரும் எண்ணின் இறுதியும் யாதாயினும் ஓர் இடத்து வந்தாலும், தொகை பெற்றே முடியும், தொகை இல்லாமல் நிகழாது. (எண்இடைச் சொற்கள் இல்லாது தனிப் பெயர்களாய் எண்ணுப் பொருளில் வருவன செவ்வெண் எனப்படும்.

## எண்ணில் வரும் 'உம்' மிற்கு மேலும் ஒரு முடிவு

**776.** உம்மை எண்ணின் உருபு தொகல் வரையார். 43

எ–ரை: உம்மை எண்ணிடத்து உருபு தொக்கு வருதலை நீக்க மாட்டார் அறிவுடையோர்.

## 4. புறனடை

### 'உம்', 'உந்து' எனத் திரிதல்

**777.** 'உம்' 'உந்து' ஆகும் இடனுமார் உண்டே. 44

எ–ரை: 'உம்' என்னும் இடைச்சொல்லின் இறுதி, 'உந்து' எனத் திரியும் இடமும் உண்டு.

### வினைச் சொற்களிலும் எண்ணிடைச்சொல் வரல்

**778.** வினையொடு நிலையினும் எண்ணு நிலை திரியா;
நினையல் வேண்டும், அவற்று அவற்று இயல்பே. 45

எ–ரை: வினையுடன் நின்றாலும் எண் இடைச்சொல் தன் நிலையில் மாறுபடாது; அவற்றுடன் வரும்போது அவ்வற்றின் இயல்பை ஆராய்தல் வேண்டும்.

## எண் இடைச்சொற்கள் பிரிந்துசென்று ஒன்றுதல்

779. என்றும், எனவும், ஒடுவும், தோன்றி,
ஒன்று வழி உடைய, எண்ணினுள் பிரிந்தே. 46

எ–ரை: 'என்று' 'என' 'ஒடு' – என்னும் மூன்றும், ஓரிடத்து தோன்றிப் பிரிந்து சென்று பிற இடத்துப் பொருந்தும் இடங்களும் உள.

## இடைச்சொற்களின் பொருள் அறியும் வகை

780. அவ் அச் சொல்லிற்கு அவை அவை பொருள் என
மெய் பெறக் கிளந்த இயல ஆயினும்,
வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றி,
திரிந்து வேறு வரினும், தெரிந்தனர் கொளலே! 47

எ–ரை: இதுகாறும் கூறப்பெற்ற இடைச் சொற்கள், அவ்வச் சொல்லுக்கு அவ்வப்பொருள் என்று, உண்மை விளங்கக் கூறிய இயல்பை உடையன ஆயினும், வினைச் சொல்லோடும் பெயர்ச் சொல்லோடும் ஆய்ந்து உணர்ந்து கொள்ளும் வண்ணம் தோன்றி, வேறுபொருள் உணர்த்துவனவாகவும், அசைநிலைப் பொருண்மை உணர்த்துவனவாகவும் திரிந்து வரினும் அவற்றையும் ஆராய்ந்து கொள்ளுதல் வேண்டும்.

## இடை இயலுக்குரிய புறனடை

781. கிளந்த அல்ல வேறு பிற தோன்றினும்,
கிளந்தவற்று இயலான் உணர்ந்தனர் கொளலே. 48

எ–ரை: இவ்வியலில் கிளந்து சொல்லிய அன்றி அவை போல்வன பிற இடைச் சொற்கள் பிற தோன்றினாலும் அவற்றை விதந்து எடுத்துச் சொல்லியவற்றின் இயல்பினால் எண்ணித் தெரிந்து உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

## இயல் – 8

# உரி இயல்

(உரிச்சொற்களின் இலக்கணத்தை விரித்துரைக்கும் இயல்)

## 1. உரிச்சொற்களின் பொது இலக்கணம்

### உரிச்சொல்லின் இயல்பு

782. உரிச்சொல் கிளவி விரிக்கும் காலை,
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி,
பெயரினும் வினையினும் மெய் தடுமாறி,
ஒரு சொல் பல பொருட்கு உரிமை தோன்றினும்,
பல சொல் ஒரு பொருட்கு உரிமை தோன்றினும்,
பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்தி,
தம்தம் மரபின் சென்று நிலை மருங்கின்,
எச் சொல் ஆயினும், பொருள் வேறு கிளத்தல்! 1

எ–ரை: உரிச் சொல்லை விரித்துரைக்கும் இடத்து, 'இசை', 'குறிப்பு', 'பண்பு', என்னும் பண்புகளினால் தோன்றிப் பெயரிடத்தும் வினையிடத்தும் தம் வடிவு தடுமாறி, ஒரு சொல் பல பொருளுக்கு உரிமை உடையதாய் வந்தாலும், கேட்போனால் நன்கு அறியப்படாத சொல்லை நன்கு அறியப்பட்ட சொல்லோடு சேர்த்துப் பெயரும் வினையும் ஆகிய தத்தமக்கு உரிய இடத்து, யாதானும் ஒரு சொல்லாக இருப்பினும் வெவ்வேறு பொருளை உணர்த்தி வரும். (பெயர் போலவும், வினை போலவும் அவற்றிற்கு முதனிலையாய்த் தோன்றி இசை, குறிப்பு, பண்பு, என்னும் பொருள்களுக்குத் தாமே உரியவையாய் வரும் சொறகளே உரிச்சொற்களாம் என்ற பொது இயல்பு தெளிவு படுத்தப்பட்டது.)

## 2. சிறப்பிலக்கணம்

### வெளிப்பட வாரா உரிச்சொற்கள்

783. வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா;
வெளிப்பட வாரா உரிச்சொல் மேன. 2

எ–ரை: வெளிப்படையாகத் தோன்றும் உரிச்சொற்களைச் சிறப்பாக இவ்வியலில் எடுத்துச் சொல்வதனால், பயன் யாதொன்றும் இல்லை ஆதலால், அவை சொல்லப்படமாட்டா; வெளிப்படையாக வாராத உரிச்சொற்களே இங்குச் சிறப்பித்துச் சொல்லப்பெறும்.

## 'உறு', 'தவ', 'நனி'

**784.** அவைதாம்,
'உறு, தவ, நனி, என வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள்' என்பப. 3

எ–ரை: வெளிப்பட வாராத உரிச்சொற்களுள், 'உறு', 'தவ', 'நனி', என வரும் மூன்றும், 'மிகுதி' என்றும் பொருளை உணர்த்துவனவாம்.

## 'உரு', 'புரை'

**785.** உரு உட்கு ஆகும்; புரை உயர்பு ஆகும். 4

'உரு', என்னும் உரிச்சொல் 'அச்சம்' என்னும் பொருளையும், 'புரை' என்னும் உரிச்சொல் 'உயர்வு' என்னும் பொருளையும் உணர்த்துவனவாம்.

## 'குரு', 'கெழு'

**786.** குருவும் கெழுவும் நிறன் ஆகும்மே. 5

எ–ரை: 'குரு', 'கெழு', என்னும் உரிச்சொற்கள், 'நிறம்' என்னும் பண்பினை உணர்த்துவனவாம்.

## 'செல்லல்', 'இன்னல்'

**787.** செல்லல், இன்னல், இன்னாமையே. 6

எ–ரை: 'செல்லல்', 'இன்னல்', என்னும் இரண்டு உரிச் சொற்களும் 'துன்பம்' என்னும் பொருளை உணர்த்துவனவாம்.

## 'மல்லல்', 'ஏ'

**788.** மல்லல் வளனே; ஏ பெற்று ஆகும். 7

எ–ரை: 'மல்லல்' என்னும் உரிச்சொல் 'வளம்' என்னும் பொருளையும், 'ஏ' என்னும் உரிச்சொல் பெருக்கம் என்னும் பொருளையும் உணர்த்துவனவாம்.

## 'உகப்பு', 'உவப்பு'

789. உகப்பே உயர்தல்; உவப்பே உவகை. 8

எ–ரை: 'உகப்பு' என்னும் உரிச்சொல் 'உயர்தல்' என்னும் பொரு ளையும், 'உவப்பு' என்னும் உரிச்சொல் 'உவகை' என்னும் பொருளையும் உணர்த்துவனவாம்.

## 'பயப்பு'

790. பயப்பே பயன் ஆம். 9

எ–ரை: 'பயப்பு' என்னும் உரிச்சொல் 'பலன்' என்னும் பொருளை உணர்த்துவது ஆகும்.

## 'பசப்பு'

791. பசப்பு நிறன் ஆகும் 10

எ–ரை: 'பசப்பு' என்னும் உரிச்சொல் 'நிற வேறுபாடு' என்னும் பொருளை உணர்த்துவது ஆகும்.

## 'இயைபு'

792. இயைபே புணர்ச்சி 11

எ–ரை: 'இயைபு' என்னும் உரிச்சொல், 'புணர்ச்சிக் குறிப்பினை உணர்த்துவது ஆகும்.

## 'இசைப்பு'

793. இசைப்பு இசை ஆகும். 12

எ–ரை: 'இசைப்பு' என்னும் உரிச்சொல் இசைப் பொருண்மையை உணர்த்துவது ஆகும்.

### 'அலமரல்', 'தெருமரல்'

**794.** அலமரல், தெருமரல், ஆயிரண்டும் சுழற்சி 13

எ—ரை: 'அலமரல்' 'தெருமரல்' ஆகிய இரு உரிச்சொற்களும் 'சுழற்சி' என்னும் பொருளை உணர்த்துவனவாம்.

### 'மழ', 'குழ'

**795.** மழவும் குழவும் இளமைப் பொருள. 14

எ—ரை: 'மழ', 'குழ', என்னும் உரிச்சொற்கள் இரண்டும் 'இளமை' யாகிய பொருளை உணர்த்துவனவாம்.

### 'சீர்த்தி', 'மாலை'

**796.** சீர்த்தி மிகு புகழ்; மாலை இயல்பே. 15

எ—ரை: 'சீர்த்தி' என்னும் உரிச்சொல் 'மிகுதியான புகழ் உடைமை'யை உணர்த்தும்; 'மாலை' என்னும் உரிச் சொல்' இயல்பை உணர்த்தும்.

### 'கூர்ப்பு', 'கழிவு'

**797.** கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும். 16

எ—ரை: 'கூர்ப்பு', 'கழிவு' என்னும் இரண்டு உரிச்சொற்களும் 'உள்ளதன் சிறப்பு' குறித்து வரும் சொற்களாம்.

### 'கதழ்வு', 'துனைவு'

**798.** கதழ்வும் துனைவும் விரைவின் பொருள். 17

எ—ரை: 'கதழ்வு', 'துனைவு' ஆகிய இரண்டு உரிச்சொற்களும் விரைவு' என்ற பொருளை உணர்த்துவனவாம்.

### 'அதிர்வு', 'விதிர்ப்பு'

**799.** அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும் 18

எ–ரை: 'அதிர்வு', 'விதிர்ப்பு' என்னும் இரண்டு உரிச்சொற்களும் 'நடுக்கம்' என்ற பொருள் தருவனவாம்.

## 'வார்தல்', 'போகல்', 'ஒழுகல்'

**800.** வார்தல், போகல், ஒழுகல், மூன்றும்
நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள. 19

எ–ரை: 'வார்தல்', 'போகல்', 'ஒழுகல்' என்னும் மூன்று உரிச்சொற்களும்' 'நேர்மையும்', 'நெடுமை' (நீட்டம்) யும் குறிக்கும் சொற்களாம்.

## 'தீர்தல்', 'தீர்த்தல்'

**801.** தீர்தலும் தீர்த்தலும் விடல் பொருட்டு ஆகும். 20

எ–ரை: 'தீர்தல்' 'தீர்த்தல்' ஆகிய இரண்டு உரிச்சொற்களும் 'விடுதல்' என்னும் பொருளை உணர்த்துவனவாம்.

## 'கெடவரல்', 'பண்ணை'

**802.** கெடவரல், பண்ணை, ஆயிரண்டும் விளையாட்டு. 21

எ–ரை: 'கெடவரல்' 'பண்ணை' என்னும் அவ்விரண்டு உரிச் சொற்களும் 'விளையாட்டுப்' பொருண்மை குறித்து வருவனவாம்.

## 'தட', 'கய', 'நளி'

**803.** தடவும் கயவும் நளியும் பெருமை. 22

எ–ரை: 'தட', 'கய', 'நளி' என்னும் மூன்று உரிச்சொற்களும் 'பெருமை' குறித்து வருவனவாம்.

## 'தட' என்பதற்கு மேலும் ஒருபொருள்

**804.** அவற்றுள்,
'தட' என் கிளவி கோட்டமும் செய்யும். 23

எ—ரை: முன் கூறப்பட்ட மூன்றனுள், 'தட' என்னும் உரிச்சொல் 'வளைவு' என்னும் பொருளையும் தரும்.

## 'கய' என்பதற்கு மேலும் ஒரு பொருள்

**805.** 'கய' என் கிளவி மென்மையும் செய்யும். 24

எ—ரை: 'கய' என்னும் உரிச்சொல், 'மென்மை' என்னும் பொருளையும் உணர்த்த வரும்.

## 'நளி' என்பதற்கு மேலும் ஒரு பொருள்

**806.** 'நளி' என் கிளவி செறிவும் ஆகும். 25

எ—ரை: 'நளி' என்னும் உரிச்சொல், 'செறிவு' என்னும் பொருளையும் உணர்த்த வரும்.

## 'பழுது'

**807.** பழுது பயம் இன்றே. 26

எ—ரை: 'பழுது' என்னும் உரிச்சொல் 'பயனில்லாமை' (வீண்) என்னும் பொருள் குறித்து வருவதாம்.

## 'சாயல்'

**808.** சாயல் மென்மை. 27

எ—ரை: 'சாயல்' என்னும் உரிச்சொல், 'மென்மை' என்னும் பொருளை உணர்த்துவதாகும்.

## 'முழுது'

**809.** 'முழுது' என் கிளவி எஞ்சாப் பொருட்டே. 28

எ—ரை: 'முழுது' என்னும் உரிச்சொல், 'குறையாமை' (எஞ்சாமை) என்னும் பொருளை உடையது.

## 'வம்பு'

**810.** வம்பு நிலை இன்மை. 29

எ–ரை: 'வம்பு' என்னும் உரிச்சொல் 'நிலை இல்லாமை' என்னும் பொருளை உடையது.

## 'மாதர்'

**811.** மாதர் காதல். 30

எ–ரை: 'மாதர்' என்னும் உரிச்சொல், 'காதல்' என்னும் பொருளை உணர்த்தும்.

## 'நம்பு', 'மேவு'

**812.** நம்பும் மேவும் நசை ஆகும்மே. 31

எ–ரை: 'நம்பு', 'மேவு' என்னும் இரண்டு உரிச்சொற்களும் 'விருப்பம்' என்னும் பொருளை உணர்த்துவனவாம்.

## 'ஒதல்', 'ஆய்தல்', 'நிழத்தல்', 'சாய்'

**813.** ஒய்தல், ஆய்தல், நிழத்தல், சாஅய்,
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம். 32

எ–ரை: 'ஒய்தல்', 'ஆய்தல்', 'நிழத்தல்', 'சாய்' என்னும் நான்கு உரிச்சொற்களும், 'உள்ளதன் நுணுக்கம்' பொருண்மையை உடையன.

## 'புலம்பு'

**814.** புலம்பே தனிமை. 33

எ–ரை: 'புலம்பு' என்னும் உரிச்சொல், 'தனிமை' என்ற பொருளை உணர்த்தும்.

## 'துவன்று'

**815.** துவன்று நிறைவு ஆகும். 34

எ–ரை: 'துவன்று' என்னும் உரிச்சொல் நிறைந்து என்னும் பொருளை உடையது.

'முரஞ்சல்'

816. முரஞ்சல் முதிர்வே. 35

எ–ரை: 'முரஞ்சல்' என்னும் உரிச்சொல் 'முதிர்வு' என்னும் பொருளை உடையது.

'வெம்மை'

817. வெம்மை வேண்டல். 36

எ–ரை: 'வெம்மை' என்னும் உரிச்சொல் 'விருப்பம் என்னும் பொருளைக் குறித்து வரும்.

'பொற்பு'

818. பொற்பே பொலிவு. 37

எ–ரை: 'பொற்பு' என்னும் உரிச்சொல் 'அழகு உடையது' என்னும் பொருளைக் குறித்து வரும்.

'வறிது'

819. வறிது சிறிது ஆகும். 38

எ–ரை: 'வறிது' என்னும் உரிச்சொல் 'சிறிது' என்னும் பொருளைக் குறிக்கும்.

'ஏற்றம்'

820. ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும். 39

எ–ரை: 'ஏற்றம்' என்னும் உரிச்சொல், 'நினைவு', 'துணிவு' என்னும் பொருள்களை உணர்த்தும்.

'பிணை', 'பேண்'

821. பிணையும் பேணும் பெட்பின் பொருள. 40

எ–ரை: 'பிணை', 'பேண்' என்னும் இரண்டு உரிச்சொற்கள் 'புறந்தருதல்' என்ற குறிப்பை உடைய பெட்புப் பொருளில் வரும். (புறந்தருதல், விரும்புதல் ஆகிய பொருள்களை உடையது பெட்பு.)

'பணை'

822. பணையே பிழைத்தல்; பெருப்பும் ஆகும். 41

எ–ரை: 'பணை' என்னும் உரிச்சொல், 'தவறுதல்' 'பெருத்தல்' என்ற பொருள்களை உடையது.

'படர்'

823. படரே உள்ளல்; செலவும் ஆகும். 42

எ–ரை: 'படர்' என்னும் உரிச்சொல், 'நினைத்தல்' 'செல்லுதல்' என்னும் பொருள்களை உணர்த்தும்.

'பையுள்', 'சிறுமை'

824. பையுளும் சிறுமையும் நோயின் பொருள. 43

எ–ரை: 'பையுள்', 'சிறுமை' என்னும் உரிச் சொற்கள் இரண்டும், 'நோய்' என்னும் பொருளை உணர்த்துவன.

'எய்யாமை'

825. எய்யாமையே அறியாமையே 44

எ–ரை: 'எய்யாமை' என்னும் உரிச்சொல் 'அறியாமை என்னும் பொருளை உணர்த்துவது.

'நன்று'

826. நன்று பெரிது ஆகும். 45

எ–ரை: 'நன்று' என்னும் உரிச்சொல் 'பெரிது' என்னும் பொருளை உணர்த்தும்.

## 'தா'

827. தாவே வலியும் வருத்தமும் ஆகும். 46

எ–ரை: 'தா' என்னும் உரிச்சொல், 'வலியும்', 'வருத்தமும்' ஆகிய பொருள்களை உடையது.

## 'தெவு'

828. தெவுக் கொளல் பொருட்டே. 47

எ–ரை: 'தெவு' என்னும் உரிச்சொல், 'கொள்ளுதல்' என்னும் பொருளை உடையது.

## 'தெவ்வு'

829. தெவ்வுப் பகை ஆகும் 48

எ–ரை: 'தெவ்வு' என்னும் உரிச்சொல் 'பகை' என்னும் பொருளைத் தருவதாகும்.

## 'விறப்பு', 'உறப்பு', 'வெறிப்பு'

830. விறப்பும், உறப்பும், வெறுப்பும் செறிவே. 49

எ–ரை: 'விறப்பு', 'உறப்பு', 'வெறிப்பு' என்னும் உரிச்சொற்கள் மூன்றும் 'செறிவுப்' பொருண்மை உடையன.

## 'விறப்பு' என்பதற்கு வேறொருபொருள்

831. அவற்றுள்,
விறப்பே வெரூஉப் பொருட்டும் ஆகும். 50

எ–ரை: முன்னே கூறிய மூன்றினுள், 'விறப்பு' என்னும் உரிச்சொல் 'அச்சப்' பொருண்மையையும் உணர்த்தும்.

## 'கம்பலை', 'சும்மை', 'கலி', 'அழுங்கல்'

**832.** கம்பலை, சும்மை, கலியே, அழுங்கல்,
என்று இவை நான்கும் அரவப்பொருள. 51

எ–ரை: 'கம்பலை', 'சும்மை', 'கலி', 'அழுங்கல்' என்னும் உரிச்சொற்கள் நான்கும் ஓசைப் பொருண்மையை உணர்த்துவன.

## 'அழுங்கல்' என்பதற்கு மேலும் இருபொருள்

**833.** அவற்றுள்,
அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும். 52

எ–ரை: 'அழுங்கல்' என்னும் உரிச்சொல், 'இரக்கம்', 'கேடு' என்ற இருபொருள்களையும் உடையது.

## 'கழுமு'

**834.** 'கழுமு' என் கிளவி மயக்கம் செய்யும். 53

எ–ரை: 'கழுமு' என்னும் உரிச்சொல்; மயக்கம் என்னும் பொருண்மையை உணர்த்தும்.

## 'செழுமை'

**835.** செழுமை வளனும் கொழுப்பும் ஆகும். 54

எ–ரை: 'செழுமை' என்னும் உரிச்சொல் 'வளமை' 'கொழுமை' என்னும் பொருள்களை உணர்த்தும்.

## 'விழுமம்'

**836.** விழுமம் சீர்மையும் சிறப்பும் இடும்பையும். 55

எ—ரை: 'விழுமம்' என்னும் உரிச்சொல், 'சீர்மை' 'சிறப்பு' 'துன்பம்' என்னும் மூன்று பொருள்களையும் உணர்த்தும்.

### 'கருவி'

**837.** கருவி தொகுதி. 56

எ—ரை: 'கருவி' என்னும் உரிச்சொல்லுக்குத் 'தொகுதி' என்பது பொருள்.

### 'கமம்'

**838.** கமம் நிறைந்து இயலும், 57

எ—ரை: 'கமம்' என்னும் உரிச்சொல், 'நிறைவு' என்னும் பொருளை உடையது.

### 'அரி'

**839.** அரியே ஐம்மை. 58

எ—ரை: 'அரி' என்னும் உரிச்சொல். 'மென்மை' என்னும் பொருளை உடையது.

### 'கவவு'

**840.** கவவு அகத்திடுமே. 59

எ—ரை: 'கவவு' என்னும் உரிச்சொல், 'உள்ளடங்கும்படிச் செய்தல்' (அகத்திடுதல்) என்னும் பொருளை உடையது.

### 'துவைத்தல்', 'சிலைத்தல்', 'இயம்பல்', 'இரங்கல்'

**841.** 'துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும்
இசைப் பொருட் கிளவி' என்மனார் புலவர். 60

எ—ரை: 'துவைத்தல்', 'சிலைத்தல்', 'இயம்பல்' 'இரங்கல் என்னும் உரிச்சொற்கள் நான்கும் 'ஓசை' (இசை)ப் பொருண்மையை உணர்த்தும்.

## இரங்கல் என்பதற்கு மற்றும் ஒரு பொருள்

**842.** அவற்றுள்,
இரங்கல் கழிந்த பொருட்டும் ஆகும். 61

எ—ரை: 'இரங்கல்' என்னும் உரிச்சொல் 'கழிந்த பொருள் பற்றி வரும் கவலை' என்ற பொருளையும் உணர்த்தும்.

## 'இலம்பாடு', 'ஒற்கம்'

**843.** இலம்பாடு, ஒற்கம், ஆயிரண்டும் வறுமை. 62

எ—ரை: 'இலம்பாடு', 'ஒற்கம்' என்னும் இரண்டு உரிச் சொற்களும் 'வறுமை' என்னும் பொருளை உணர்த்துவன.

## 'ஞெமிர்தல்', 'பாய்தல்'

**844.** ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தல் பொருள். 63

எ—ரை: 'ஞெமிர்தல்', 'பாய்தல்' என்னும் இரண்டு உரிச்சொற்களும் 'பரத்தல்' என்னும் பொருளை உடையன.

## 'கவர்வு'

**845.** கவர்வு விருப்பு ஆகும். 64

எ—ரை: 'கவர்வு' என்னும் உரிச்சொல் 'விருப்பம்' என்னும் பொருளை உணர்த்துவது.

## 'சேர்'

**846.** சேரே திரட்சி. 65

எ—ரை: 'சேர்' என்னும் உரிச்சொல் 'திரட்சி' (ஒன்றாதல்) என்னும் பொருளை உணர்த்துவது.

## 'வியல்'

**847.** 'வியல்' என் கிளவி அகலப் பொருட்டே 66

எ–ரை: 'வியல்' என்னும் உரிச்சொல், 'அகலம்' என்னும் பொருளை உணர்த்துவது.

## 'பேம்', 'நாம்', 'உரும்'

848. 'பேம், நாம், உரும்' என வரூஉம் கிளவி
ஆ முறை மூன்றும் அச்சப் பொருள. 67

எ–ரை: 'பேம்', 'நாம்', 'உரும்' என்னும் மூன்று உரிச் சொற்களும் 'அச்சப்' பொருண்மையை உணர்த்துவன.

## 'வய'

849. வய வலி ஆகும். 68

எ–ரை: 'வய' என்னும் உரிச்சொல் 'வலிமைப்' பொருளை உணர்த்துவது.

## 'வாள்'

850. வாள் ஒளி ஆகும். 69

எ–ரை: 'வாள்' என்னும் உரிச்சொல், 'ஒளி' என்ற பொருளை உணர்த்துவதும்.

## 'துயவு'

851. 'துயவு' என் கிளவி அறிவின் திரிபே; 70

எ–ரை: 'துயவு' என்னும் உரிச்சொல், அறிவு வேறுபடுதலாகிய பொருளை உணர்த்தும்.

## 'உயா'

852. உயாவே உயங்கல். 71

எ–ரை: 'உயா' என்னும் உரிச்சொல், 'வருந்தல்' என்னும் பொருளை உணர்த்தும்.

## 'உசா'

853. உசாவே சூழ்ச்சி. 72

எ—ரை: 'உசா' என்னும் உரிச்சொல், சூழ்தல்' (நெருங்கி நலம் நாடல்) என்னும் பொருளை உடையது.

## 'வயா'

854. 'வயா' என் கிளவி வேட்கைப் பெருக்கம். 73

எ—ரை: 'வயா' என்னும் உரிச்சொல் 'வேட்கையின் பெருக்கத்தை' உணர்த்துவது.

## 'கறுப்பு', 'சிவப்பு'

855. கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள. 74

எ—ரை: 'கறுப்பு', 'சிவப்பு' என்னும் உரிச்சொற்கள் இரண்டும் 'சினம்' என்ற பொருண்மையை உடையன.

## 'மேலும் ஒருபொருள்'

856. 'நிறத்து உரு உணர்த்தற்கும் உரிய' என்ப. 75

எ—ரை: முன்னே கூறிய இவ்விரண்டு உரிச்சொற்களும் நிறவேறுபாடுகுறித்து நிற்றலும் உண்டு என்பர் அறிஞர்.

## 'நொசிவு', 'நுழைவு', 'நுணங்கு'

857. நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை. 76

எ—ரை: 'நொசிவு' 'நுழைவு', 'நுணங்கு' என்னும் மூன்று உரிச்சொற்களும் 'நுண்மை'ப் பொருளை உணர்த்துவன.

## 'புனிறு'

858. 'புனிறு' என் கிளவி ஈன்றணிமைப் பொருட்டே. 77

எ–ரை: 'புனிறு' என்னும் உரிச்சொல், ஈன்ற அண்மை (கருவுயிர்த்த உடன் நிலை) யைக்குறித்து வருவது.

## 'கனவு'

859. நனவே களனும் அகலமும் செய்யும். 78

எ–ரை: 'நனவு' என்னும் உரிச்சொல்; அவைக்களம், என்னும் பொருளையும், 'அகலம்' என்னும் பொருளையும் குறிக்கும்.

## 'மத'

860. மதவே மடனும் வலியும் ஆகும். 79

எ–ரை: 'மத' என்னும் உரிச்சொல், 'இளமை' 'வலிமை' என்னும் இருபொருளையும் உணர்த்தும்.

## மேலும் இருபொருள்

861. மிகுதியும் வனப்பும் ஆகலும் உரித்தே. 80

எ–ரை: 'மத' என்னும் உரிச்சொல்லிற்கு, 'மிகுதி' 'வனப்பு' (அழகு) என்று மேலும் இரு பொருள்கள் உண்டு.

## 'யாணர்'

862. புதிதுபடல் பொருட்டே, யாணர்க் கிளவி. 81

எ–ரை: 'யாணர்' என்னும் உரிச்சொல், 'புதுவருவாய்' என்னும் பொருளை உணர்த்தும்.

## 'அமர்தல்'

863. அமர்தல் மேவல். 82

எ–ரை: 'அமர்தல்' என்னும் உரிச்சொல், 'விரும்புதல்' என்னும் பொருளை உணர்த்தும்.

## ‘யாண்’

**864.** யாணுக் கவின் ஆம். 83

எ—ரை: ‘யாண், என்னும் உரிச்சொல், ‘அழகு’ என்னும் பொருளை உணர்த்தும்.

## ‘பரவு’ ‘பழிச்சு’

**865.** பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள. 84

எ—ரை: ‘பரவு’ ‘பழிச்சு’ என்னும் இரண்டு உரிச்சொற்களும் போற்றுதல் என்னும் பொருளை உணர்த்தும்.

## ‘கடி’

**866.** ‘கடி’ என் கிளவி
வரைவே, கூர்மை, காப்பே, புதுமை,
விரைவே, விளக்கம், மிகுதி, சிறப்பே,
அச்சம், முன்தேற்று, ஆயீர்—ஐந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டு ஆகும்மே. 85

எ—ரை: ‘கடி’ என்னும் உரிச்சொல், ‘வரைவு’ ‘கூர்மை’ ‘காப்பு’ ‘புதுமை’ ‘விரைவு’ ‘விளக்கம்’ ‘மிகுதி’ ‘சிறப்பு’ ‘அச்சம்’ ‘முன் நின்று தெளிவித்தல்’ என்னும் பத்துப் பொருள்களையும் மெய்ம்மைப் பட உணர்த்தும் இயல்பை உடையது.

## அதற்கு மேலும் இருபொருள்

**867.** ஐயமும் கரிப்பும் ஆகலும் உரித்தே. 86

எ—ரை: ‘கடி’ என்னும் உரிச்சொல்லுக்கு ‘ஐயம்’ ‘காரம்’ என்னும் இருபொருள்களும் உண்டு.

## ‘ஐ’

**868.** ஐ வியப்பு ஆகும். 87

எ—ரை: 'ஐ' என்னும் உரிச்சொல், 'வியப்பு' என்னும் பொருளை உணர்த்துவது.

'முனைவு'

869. முனைவு முனிவு ஆகும். 88

எ—ரை: 'முனைவு' என்னும் உரிச்சொல், 'வெறுப்பு' என்னும் பொருளை உணர்த்தும்.

'வை'

870. வையே கூர்மை. 89

எ—ரை: 'வை' என்னும் உரிச்சொல், 'கூர்மை' என்னும் பொருளை உணர்த்துவது.

'எறுழ்'

871. எறுழ் வலி ஆகும். 90

எ—ரை: 'எறுழ்' என்னும் உரிச்சொல், 'வலிமை' என்ற பொருளை உணர்த்தும்.

## 3. சொல்லும் பொருளும்

### உரிச்சொல்லின் பொருளை உணரும்நெறி

872. மெய் பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்
முன்னும் பின்னும் வருபவை நாடி,
ஒத்த மொழியான் புணர்த்தனர் உணர்த்தல்
தம்தம் மரபின் தோன்றும்மன் பொருளே. 91

எ—ரை: 'இச்சொல்லிற்கு இன்னது பொருள்' என்று இவ்வியலில் பொருள் பெற உரைக்கப்பட்ட எல்லா உரிச் சொற்களையும். அவற்றின் முன்னும் பின்னும்

வரும் மொழிகளை ஆராய்ந்து அவற்றுள் பொருத்தமான சொற்களால் ஏற்ற பொருள் உணர்த்துக; அதனால் அவை தத்தம் முறைமையின் பொருள் விளங்கத் தோன்றும்.

## பிறபொருள் உணர்த்தல்

**873.** கூறிய கிளவிப் பொருள் நிலை அல்ல
வேறு பிற தோன்றினும், அவற்றொடு கொளலே! 92

எ–ரை: முன்னும் பின்னும் வரும் சொற்களை ஆராயும் இடத்து, உரிச்சொற்களுக்குக் கூறிய பொருளே அன்றி வேறு பொருள் தோன்றும் ஆயினும் அவற்றையும் முன்னே கூறிய பொருளோடு இணைத்துக் கொள்க.

## சொற்களால் கருத்துணர்தலின் நிலை

**874.** பொருட்குப் பொருள் தெரியின், அது வரம்பு இன்றே. 93

எ–ரை: கூறிய பொருளுக்குப் பொருள் என்ன என்று ஆராயத் தொடங்கினால், வரம்பு இன்றிச் செல்லும் ஆதலால், அவ்வாறு வரம்பு செய்தல் என்பது இல்லை.

## பொருளை உணர்த்தும் ஆற்றல்

**875.** பொருட்குத் திரிபு இல்லை, உணர்த்த வல்லின். 94

எ–ரை: ஆசிரியன் தக்க முறையில் பொருளை உணர்த்த வல்லன் ஆயின், கேட்போனுக்குச் சொல்லும் பொருளில் மயக்கம் உண்டாகாது.

## பொருளை உணரும் ஆற்றல்

**876.** உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே. 95

எ–ரை: உணர்கின்ற முறைமை, உணர்வோர் தம் உணர்ச்சி வலிமையையும் பொறுத்துள்ளது.

## மொழிப் பொருட் காரணம்

**877.** மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்றா. 96

எ–ரை: உரிச்சொற்களுக்கு உரைக்கப்பட்ட பொருள் வேறுபாடுகளுக்குரிய காரணம் முற்றும் விளங்க வெளிப்பட்டுத் தோன்றாது; ஆயினும் காரணம் உண்டு என்பது மட்டும் தெளிவு.

## எழுத்துப் பிரிந்து இசைத்தல் உரிச்சொல்லிற்கு இல்லை

**878.** எழுத்துப் பிரித்து இசைத்தல் இவண் இயல்பு இன்றே. 97

எ–ரை: முதனிலையும் இறுதிநிலையும் ஆக எழுத்துக்கள் பிரிந்து வேறு வேறு பொருள் உணர்த்தல் உரிச்சொல்லிடத்து இயற்கை அன்று.

## 4. புறனடை

**879.** 'அன்ன பிறவும் கிளந்த அல்ல.
பல் முறையானும் பரந்தன வரூஉம்.
உரிச்சொல் எல்லாம் பொருட்குறை கூட்ட,
இயன்ற மருங்கின் இனைத்து என அறியும்
வரம்பு தமக்கு இன்மையின், வழி நனி கடைப்பிடித்து
ஒம்படை ஆணையின், கிளந்தவற்று இயலான்,
பாங்குற உணர்தல்!' என்மனார் புலவர். 98

எ–ரை: இவ்வியலில் கூறிய உரிச்சொற்களே அன்றி அவை போன்ற பிறவும், பலவகையாலும் பரந்து பட்டுவருகின்ற உரிச்சொற்கள் எல்லாம் பொருளுடன் சேர்ந்து உணர்த்தத் தாம் வழங்கும் இடத்தின் கண் 'இத்துணை' என்று வரையறுத்து உணரும் அளவு தமக்கு இல்லாமையினால், கூறிய நெறியில் வழுவாது சென்று, இதன் கண் கூறப்பட்ட பாதுகாக்கும் ஆட்சியினால், முறைப்பட அறிதல் வேண்டும் என்று சொல்லுவர் புலவர்.

## இயல் – 9

# எச்ச இயல்

## 1. சொற்களின் வகை

### நால் வகைச் சொற்கள்

880. இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல், என்று
அனைத்தே – செய்யுள் ஈட்டச் சொல்லே. 1

எ–ரை: 'இயற்சொல்', 'திரிசொல்', 'திசைச்சொல்', 'வடசொல்' ஆகிய நான்கும் செய்யுள் இயற்றுதற்கு உரிய சொற்கள் ஆகும்

### இயற் சொல்

881. அவற்றுள்,
இயற்சொல்தாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணி,
தம் பொருள் வழாமை இசைக்கும் சொல்லே. 2

எ–ரை: அந்நான்கு சொற்களுள், 'இயற்சொல் என்று கூறப்பட்ட சொற்கள் தாம், செந்தமிழ் வழங்கி வரும் பகுதியில், வழக்குச் சொற்களாகப் பொருந்தி, கேட்பார்க்கு எந்நிலத்திலும் தம் பொருள் வழுவாமல் ஒலிக்கும் சொற்களாம். ('நிலம்', 'நீர்', முதலியன)

### திரிசொல்

882. 'ஒரு பொருள் குறித்த வேறு சொல் ஆகியும்,
வேறு பொருள் குறித்த ஒரு சொல் ஆகியும்,
இரு பாற்று' என்ப – 'திரிசொல் – கிளவி.' 3

எ–ரை: 'திரிசொல்' என்று கூறப்பட்ட சொற்கள் ஒரு பொருளை உணர்த்தி வரும் பலசொல்லும் பலபொருளை உணர்த்தி வரும் ஒரு சொல்லும் என்னும் இருபகுதிகளை உடையவை.

## திசைச்சொல்

883. செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தம் குறிப்பினவே–திசைச்சொல்–கிளவி. 4

எ–ரை: செந்தமிழ் வழங்கும் நிலத்துடன் சேர்ந்த பன்னிரண்டு நிலத்தும், தாம் குறித்த பொருளை விளக்கும் சொல் திசைச்சொல்லாம்.

## வடசொல்

884. வடசொல்–கிளவி வட எழுத்து ஒரீஇ,
எழுத்தொடு புணர்ந்த சொல் ஆகும்மே. 5

எ–ரை: வடசொல் என்பது வடமொழிக்கே உரிய சிறப்பெழுத்து அல்லாமல், செந்தமிழ் எழுத்துக்களால் ஆகிய சொல்லாம்.

885. சிதைந்தன வரினும், இயைந்தன வரையார். 6

எ–ரை: வடவெழுத்தாலேயே அமைத்த சொல் சிறிது மாறுபட்டு வந்தாலும், பொருத்தம் உடையனவாயின் நீக்கமாட்டார்கள் அறிவுடையோர்.

## சொற்கள் எய்தும் விகாரங்கள்

886. 'அந் நாற் சொல்லும் தொடுக்கும் காலை,
வலிக்கும் வழி வலித்தலும், மெலிக்கும் வழி மெலித்தலும்
விரிக்கும் வழி விரித்தலும், தொகுக்கும் வழித் தொகுத்தலும்,
நீட்டும் வழி நீட்டலும், குறுக்கும் வழிக் குறுக்கலும்,
நாட்டல் வலிய' என்மனார் புலவர். 7

எ–ரை: முன்னே குறித்த நான்கு வகைச் சொற்களாலும் செய்யுள் செய்யும்

இடத்து, மெல்லெழுத்துக்களை வல்லெழுத்துக்களாக்க வேண்டுமிடத்து வல்லெழுத்துக்களாகியும், வல்லெழுத்துக்களை மெல்லெழுத்துக்களாக்க வேண்டுமிடத்து மெல்லெழுத்துக்களாக்கியும், குறைகின்றவற்றை வேண்டுமிடத்து விரித்தும், மிகுந்து வருகின்றனவற்றை வேண்டுமிடத்து குறைத்தும், குற்றெழுத்துக்களை நீட்ட வேண்டுமிடத்து நீட்டியும், நெட்டெழுத்துக்களைக் குறுக்க வேண்டுமிடத்துக் குறுக்கியும் செய்யுள் இன்பத்தின் பொருட்டுக் கவிஞன் இயற்றுவான் என்று கூறுவர் அறிவுடையோர்.

## 2. பொருள் கோள்

(மொழிபுணர் இயல்பு)

**887.** 'நிரல்–நிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று
அவை நான்கு' என்ப – 'மொழி புணர்இயல்பே'. 8

எ–ரை: செய்யுளிடத்துச் சொற்கள் தம்முட் சேர்ந்து நிற்கும் முறை, நிரனிறை, சுண்ணம், அடிமறி, மொழி மாற்று என்னும் நான்கு வகைப்படும்.

### நிரனிறைப் பொருள்கோள்

**888.** அவற்றுள்,
நிரல்–நிறைதானே
வினையினும் பெயரினும் நினையத் தோன்றி,
சொல் வேறு நிலைஇ, பொருள் வேறு நிலையல். 9

எ–ரை: அந்நான்கு பொருள் கோள்களுள், 'நிரனிறைப் பொருள்கோள்' ஆவது, வினைச் சொல்லிலும் பெயர்ச் சொல்லிலும் அல்லது அவ்விரு சொல்லிலும் ஆராய்ந்து பார்க்குங்கால் தோன்றி, சொல் வேறு நிற்க அதன் முடிக்கும் சொல் வேறு நிற்றல் ஆகும்.

### சுண்ணப் பொருள் கோள்

**889.** சுண்ணம்தானே
பட்டாங்கு அமைந்த ஈர் அடி எண் சீர்
ஒட்டு வழி அறிந்து, துணித்தனர் இயற்றல். 10

எ—ரை: 'சுண்ணப் பொருள் கோள் 'ஆவது, இயல்பாக அமைந்த அளவடிகள் இரண்டினும் உள்ள எட்டுச் சீர்களையும் தனித்தனியே எடுத்துப் பொருந்தும் இடம் அறிந்து கூட்டிச் செய்யுமாறு பொருளை அமைத்தல் ஆகும்.

## அடிமறிப் பொருள் கோள்

**890.** அடிமறிச் செய்தி அடி நிலை திரிந்து,
சீர் நிலை திரியாது, தடுமாறும்மே. 11

எ—ரை: 'அடிமறிப் பொருள் கோள்' ஆவது சீர்கள் நின்றவண்ணமே நிற்க, அடிகள் மட்டும் தம்மிடம் விட்டுப் பெயர்ந்து மற்றொன்றன் இடத்துச் சென்று நிற்குமாறு பொருளை அமைத்தல் ஆகும்.

## அடிமறிப் பொருள்கோளுக்கு மேலும் ஒரு முடிவு

**891.** பொருள் தெரி மருங்கின்
ஈற்று அடி இறு சீர் எருத்துவயின் திரியும்
தோற்றமும் வரையார், அடிமறியான. 12

எ—ரை: பொருளை ஆராயும் வகையால், ஈற்றடி இறுதிச் சீர் இரண்டாம் அடியில் (எருத்துவயின்) சென்று திரிதலும் நீக்கப்பட மாட்டாது. முன்நூற்பாவில், சீர் நிலை திரியாது தடுமாறும்' எனப்பட்டது; (இதனுள், 'சீர் திரிதலும் ஈற்றடியின் ஈற்றயற் சீர்க்கண் ஒருகால் உண்டு' என்று கூறப்பட்டது)

## மொழிமாற்றுப் பொருள்கோள்

**892.** மொழிமாற்று இயற்கை
சொல் நிலை மாற்றி, பொருள் எதிர் இயைய,
முன்னும் பின்னும் கொள் வழிக் கொளாஅல்! 13

எ—ரை: 'மொழிமாற்றுப் பொருள்கோளின்' இயல்பாவது; பொருள் எதிர் வந்து பொருந்துமாறு, சொல் நிற்கும் இடத்தை மாற்றி முன்னும் பின்னும் சேர்க்க வேண்டிய இடத்துச் சேர்த்துப் பொருள் கொள்ளுமாறு அமைத்தல் ஆகும்.

## 3. தொகைச் சொல் வகை

### வகுக்கப்படாத சொற்கள்

**893.** 'த, ந, நு, எ' எனும் அவை முதல் ஆகிய
கிளை நுதற் பெயரும் பிரிப்பப் பிரியா. 14

எ–ரை: 'த்', 'ந்', 'நு', 'எ', என்னும் எழுத்துக்களை முதலாக உ டைய உறவை உணர்த்தி வரும் பெயர்களும் பகுதி விகுதியெனப் பிரித்துப் பொருள் செய்ய இயலாதவை ஆம். (நுதற்பெயரும் என்ற உம்மையால், 'தாய் தந்தை முதலிய பிற உறவை உணர்த்தும் பெயர்களும் பகுக்கப்படா' என்பது உணர்த்தப்பட்டது.)

### ஒரு சொல் அடுக்கு

**894.** 'இசைநிறை, அசைநிறை, பொருளொடு புணர்தல், என்று
அவை மூன்று' என்ப – 'ஒரு சொல் அடுக்கே'. 15

எ–ரை: இசைநிறைத்தலும், அசைநிலையாய் நிற்றலும், பொருள் வேறுபாட்டுடன் சேர்தலும் என்னும் மூன்றும் ஒரு சொல் அடுக்கி வரும் இயல்பை உடையனவாம்.

### தொகை மொழி நிலை ஆறு

**895.** 'வேற்றுமைத் தொகையே, உவமத் தொகையே,
வினையின் தொகையே, பண்பின்தொகையே,
உம்மைத் தொகையே, அன்மொழித் தொகை, என்று
அவ் ஆறு' என்ப, – 'தொகைமொழி நிலையே.' 16

எ–ரை: வேற்றுமைத் தொகை, உவமத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித் தொகை என்று தொகை மொழி நிலை ஆறு ஆம்.

## வேற்றுமைத் தொகை

**896.** அவற்றுள்,
வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல. 17

எ–ரை: அவ்வாறு தொகைகளுள், வேற்றுமைத் தொகையாவது, வேற்றுமை உருபுகள் விரிந்து பொருள் உணர்த்த வேண்டிய இடத்து விரியாது சேர்ந்து நின்று பொருள் உணர்த்துவது (உருபு தொகாத வேற்றுமைத் தொடரைப் போலப் பொருள் உணர்த்தும் இயல்பை உடையன என்பது 'வேற்றுமை இயல' எனக் கூறப்பட்டது.

## உவமத் தொகை

**897.** உவமத் தொகையே உவம இயல. 18

எ–ரை: உவமத்தொகை, உவம உருபு தொடர்ப் பொருள் போலப் பொருளை உணர்த்தும்.

## வினைத்தொகை

**898.** வினையின் தொகுதி காலத்து இயலும். 19

எ–ரை: வினைத்தொகை காலத்தை இடமாகக் கொண்டு வருவது. (காலப்பொருளே பொருளாக நிகழும்; தொகை யாயினும், தொகையாற்றலால் காலத்தை உணர்த்த வல்லது.)

## பண்புத்தொகை

**899.** வண்ணத்தின், வடிவின், அளவின், சுவையின், என்று
அன்ன பிறவும் அதன் குணம் நுதலி,
'இன்னது இது' என வரூஉம் இயற்கை
என்ன கிளவியும் பண்பின் தொகையே. 20

எ–ரை: 'வண்ணம்'. 'வடிவு', 'அளவு', 'சுவை' என்பனவும், அவை போல்வன பிறவும் ஆகிய பண்பை உணர்த்திப் பின் தொகைப்பட்ட இடத்துப் பண்புடைய

சொல் பண்புடைய பொருளை உணர்த்துதலால், 'இன்ன தன்மையை உடையது இது' என்று ஒன்றினைச் சிறப்பித்து, இரண்டு சொற்களும் ஒரு பொருளின் மேல் வரும் இயல்பை உடைய எல்லாத் தொகைச் சொற்களும் பண்புத் தொகை எனப்படும்.

## உம்மைத் தொகை

900. இரு பெயர், பல பெயர், அளவின் பெயரே,
எண்ணியற் பெயரே, நிறைப் பெயர்க் கிளவி,
எண்ணின் பெயரொடு, அவ் அறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே – உம்மைத் தொகையே. 21

எ–ரை: 1) இருபெயர்கள் இணைந்து வரும் உம்மைத் தொகை, 2) இரண்டுக்கு மேற்பட்ட பல பெயர்களினால் ஆகிய உம்மைத்தொகை, 3) முகத்தல் அளவுப் பெயரால் வரும் உம்மைத் தொகை, 4) எண்ணைக் குறித்து வரும் பெயரால் ஆகிய உம்மைத்தொகை, 5) நிறுத்தல் பெயரால் வரும் உம்மைத் தொகை, 5) எண்ணாகிய இயல்பு பற்றிப் பொருள் உணர்த்தும் பெயரால் ஆகிய உம்மைத்தொகை ஆகிய உம்மைத் தொகையால் கருதிய நிலைமை உடையது.

## அன்மொழித் தொகை

901. பண்பு தொக வரூஉம் கிளவியானும்,
உம்மை தொக்க பெயர்வயினானும்,
வேற்றுமை தொக்க பெயர்வயினானும்,
ஈற்று நின்று இயலும்–அன்மொழித் தொகையே. 22

எ–ரை: பண்புச் சொல் தொகும் சொல்லிலும். உம்மைத் தொக்க பெயரிடத்தும் வேற்றுமை தொக்க பெயரிடத்தும் இறுதிச் சொல்லிடத்து நின்று அன்மொழித் தொகை நடக்கும்.

## பொருள் சிறந்து நிற்கும் இடம்

902. 'அவைதாம்,
முன் மொழி நிலையலும், பின் மொழி நிலையலும்,

இரு மொழி மேலும் ஒருங்குடன் நிலையலும்,
அம் மொழி நிலையாது அல் மொழி நிலையலும்,
அந் நான்கு' என்ப – 'பொருள் நிலை மரபே'. 23

எ–ரை: முன்மொழியில் பொருள் சிறந்து நிற்றலும் 'பின் மொழியில் பொருள், சிறந்து நிற்றலும் இரு மொழியிலும் பொருள் சிறந்து நிற்றலும் இருமொழி அல்லாத பிறிதொரு மொழியில் சிறந்து நிற்றலும் எனப்பொருள் நிற்கும் முறை நான்கு வகை என்பர் அறிவுடையோர்.

## தொகை மொழியின் ஒரு சொல் தன்மை

903. எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய. 24

எ–ரை: ஆறுவகைப்பட்ட எல்லாத் தொகைகளும், ஒரு சொல் தன்மையாய் நடத்தலை உடையன. ('தொகை என்பது இரு சொற் கண்ணது' ஆதலின், 'அவ்விரு சொல்லும் ஒரு சொல் தன்மைப் பட்டு நிற்கும்' என்று கூறப்பட்டது.)

## உயர்திணை உம்மைத் தொகை

904. 'உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே
பலர்சொல் நடைத்து' என மொழிமனார் புலவர். 25

எ–ரை: உயர்திணையிடத்து வரும் உம்மைத் தொகையின் ஈறு, பலர்பாலுக்குரிய ஈறாகி வரும்.

## இன்ன என்னும் குறிப்பு மொழி

905. வாரா மரபின வரக் கூறுதலும்,
என்னா மரபின எனக் கூறுதலும்,
அன்னவை எல்லாம் அவற்று அவற்று இயல்பான்,
'இன்ன' என்னும் குறிப்புரை ஆகும். 26

எ–ரை: வாராத (இயங்காத) இயல்பு உடையனவற்றை வருவனவாகக் (இயங்குவனவாக) கூறுதலும் கூறாத இயல்பு உடையனவற்றைக்

கூறுவனவாகக் கூறுதலும், ஆகிய அத்தன்மை உடையன எல்லாம், அந்த அந்தப் பொருளின் இயல்பாய் 'இத்தன்மை உடையன' என்னும் குறிப்பு மொழிகள் ஆம்.

## அடுக்கு மொழி : 1. இசைப் பொருள்

**906.** இசைப் படு பொருளே நான்கு வரம்பு ஆகும். 27

எ–ரை: முன்னே கூறப்பட்ட ஒரு சொல் அடுக்கினுள் (நூற்பா 894) இசை நிறைத்து வரும் சொல் அடுக்குகள் நான்கு முறைவரும்; அதற்குக் குறைந்து வருதலும் உண்டு. மிகுந்து வராது.

## அடுக்கு மொழி : 2. விரைவுப் பொருள்

**907.** விரை சொல் அடுக்கே மூன்று வரம்பு ஆகும். 28

எ–ரை: விரைவுப் பொருளில் வரும் ஒரு சொல் அடுக்கு, மூன்று முறை வரும்.

## அடுக்குமொழி: 3. அசை நிலைப்பொருள்

**908.** 'கண்டீர் என்றா, கொண்டீர் என்றா,
சென்றது என்றா, போயிற்று என்றா,
அன்றி அனைத்தும் வினாவொடு சிவணி,
நின்ற வழி அசைக்கும் கிளவி' என்ப. 29

எ–ரை: 'கண்டீர்', 'கொண்டீர்', 'சென்றது' 'போயிற்று' என்னும் நான்கு வினைச் சொற்களும் வினாவினோடு பொருந்திய இடத்து அசைநிலைஅடுக்கு ஆம்.

**909.** கேட்டை என்றா, நின்றை என்றா,
காத்தைஎன்றா, கண்டை என்றா,
அன்றி அனைத்தும் முன்னிலை அல் வழி,
முன்னுறக் கிளந்த இயல்பு ஆகும்மே. 30

எ–ரை: 'கேட்டை' 'நின்றை', 'காத்தை', 'கண்டை' என்னும் நான்கு வினைச்சொல்லும் முன்னிலையில் வராத இடத்து மேற்கூறியவாறு அசைநிலை யாகும். (என்றா – 'எனவும்')

## 4. வினைமுற்றின் வகை

### வினைமுற்றின் இயல்பு

910. 'இறப்பின், நிகழ்வின், எதிர்வின், என்ற
சிறப்புடை மரபின் அம் முக் காலமும்,
தன்மை, முன்னிலை, படர்க்கை, என்னும்
அம் மூஇடத்தான், வினையினும் குறிப்பினும்,
மெய்ம்மையானும் இவ்விரண்டு ஆகும்
அவ் ஆறு' என்ப – 'முற்று இயல் மொழியே'. 31

எ–ரை: வினைமுற்றுச் சொல்லாவது; இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்று காலத்தும், தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்று இடத்தும், உயர்திணை, அஃறிணை, பொதுத்திணை என்னும் மூன்று பொருண்மையானும், வினையினும், குறிப்பினும் ஆகிய இரண்டாக வரும் ஆறுவகைச் சொல்லும் ஆம் என்பர் புலவர். (கூறப்பட்ட ஆறும், மூவகைக் காலத்தானும், மூவகை இடத்தானும் வருதல் முற்றுச் சொல் எனப்பட்டது.)

### வினைமுற்றிற்கு வேறு விதி

911. எவ் வயின் வினையும் அவ் இயல் நிலையும். 32

எ–ரை: மேற்கூறப்பட்ட விதியுள் அடங்காமல் பிற இடங்களிலும் வரும் வினையும் முற்றுத் தன்மையாய் நிலைபெற்று வரும். ('யார்', 'எவன்' 'இல்லை' முதலிய வினை முற்றுக்களைக் காண்க.)

### அதற்குரிய முடிபு

912. அவைதாம்,
தம்தம் கிளவி அடுக்குந வரினும்,
எத் திறத்தானும் பெயர் முடிபினவே. 33

எ–ரை: மேற்கூறிய முற்றுச் சொற்கள் தாம், தத்தம் சொற்கள் பல அடுக்கி வந்தாலும், தம்முள் இயையாது எவ்வகையாலும் பெயரைக் கொண்டே முடியும். (முடிக்கும் பெயர் முன்னும் பின்னுமாய் வரினும் என்பது 'எத்திறத்தானும்' என்பதனால் விளக்கப்பட்டது).



## 5. எஞ்சுபொருட்கிளவி பத்து

(எச்சச் சொற்களின் வகை)

### பாகுபாடு

**913.** பிரிநிலை, வினையே, பெயரே, ஒழியிசை,
எதிர்மறை, உம்மை, எனவே, சொல்லே,
குறிப்பே, இசையே, ஆயீர்–ஐந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சு பொருட் கிளவி. 34

எ–ரை: எச்சம், 1) 'பிரிநிலை' 2) 'வினை' 3) 'பெயர்' 4) 'ஒழியிசை' 5) 'எதிர்மறை' 6) 'உம்மை' 7) 'என' 8) 'சொல்' 9) 'குறிப்பு' 10) 'இசை' என்னும் பத்து வகைப்படும்.

### அவற்றுள் : பிரிநிலை எச்சம்

**914.** அவற்றுள்,
பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின. 35

எ–ரை: மேலே கூறப்பட்ட பத்து எச்சங்களுள்,பிரிநிலை எச்சம்' எனப்படுவது, 'பிரிநிலைப் பொருளொடு முடியும் இயல்பை' உடையது. (ஏகாரப் பிரிநிலை', ஒகாரப் பிரிநிலை என்ற இரண்டுவகை எச்சங்களும், பிரிக்கப்பட்ட பொருளை உணர்த்தும் பொருளோடு முடியும் என்பது உணர்த்தப்பட்டது.)

### வினை எச்சம்

**915.** வினை எஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபு, ஆகும்மே,
ஆவயின் குறிப்பே ஆக்கமொடு வருமே. 36

எ—ரை: வினை எச்சத்திற்குத் தெரிநிலை வினையும், குறிப்பு வினையும் முடிபு ஆகும்; அவ்வாறு முடியும் இடத்துக் குறிப்புவினை ஆக்கச் சொல்லோடு வரும். ('மருந்துண்டு நல்லன் ஆயினான்')

## பெயர் எச்சம்

916. பெயர் எஞ்சு கிளவி பெயரொடு முடிமே. 37

எ—ரை: பெயர் எச்சம் பெயரைக் கொண்டு முடியும்.

## ஒழியிசை எச்சம்

917. ஒழியிசை எச்சம் ஒழியிசை முடிபின. 38

எ—ரை: 'மன்' ஒழியிசையும், 'தில்' ஒழியிசையும் 'ஓ' கார ஒழியிசையும், ஆகிய மூவகை ஒழியிசை யெச்சங்களும் ஒழிந்த சொல்லை எச்சமாகக் கொண்டு முடியும்.

## எதிர் மறை எச்சம்

918. எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின. 39

எ—ரை: 'ஏ' கார எதிர்மறை எச்சமும், 'ஓ' கார எதிர்மறை எச்சமும், 'உம்'மை எதிர்மறை எச்சமும் ஆகிய மூவகை எதிர்மறை எச்சங்களும் எதிர்மறையாலேயே முடியும்.

## உம்மை எச்சம்

919. உம்மை எச்சம் இரு வீற்றானும்
தன்வினை ஒன்றிய முடிபு ஆகும்மே. 40

எ—ரை: உம்மை எச்சத்தால், பெறப்படும் பொருளும் அவ்வெச்சச் சொல்லால் முடிவதும் ஆகிய இரண்டிடத்தும். தன்வினை உம்மையுடன் தொடர்ந்த சொல்லுக்குப் பொருந்திய முடிபு ஆகும். ('ஒன்றன் வினை முடிபே

மற்றொன்றற்கும் ஒன்றி வரும்' என்பது கருத்து; 'அழகனும் வந்தான்' என்றால் 'அருளனும் வந்தான்' என ஒரு வினையான் முடிந்தமை காண்க)

## உம்மை எச்சத்திற்கு மேலும் ஒரு முடிபு

**920.** தன்மேல் செஞ்சொல் வரூஉம் காலை,
நிகபம் காலமொடு வாராக் காலமும்,
இறந்த காலமொடு வாராக் காலமும்,
மயங்குதல் வரையார் முறைநிலையான. 41

எ—ரை: உம்மை எச்சத்தின் முன்னர், எச்சச் சொல் உம்மை இல்லாத சொல்லாய் வரும் இடத்து, நிகழ்காலத்துடன் எதிர்காலமும் இறந்தகாலத்துடன் எதிர்காலமும் மயங்கி வந்தாலும் நீக்க மாட்டார் அறிவுடைப் புலவர். ('கூழ் உண்டான் சோறும் உண்பன்' என்பதில் இவ்வமைப்புக் காண்க.)

## 'என' என்னும் எச்சம்

**921.** 'என' என் எச்சம் வினையொடு முடிமே. 42

எ—ரை: 'என' என்னும் எச்சம், வினையைக் கொண்டு முடியும்.

## ஏனைய மூன்று எச்சங்கள்

**922.** 'எஞ்சிய மூன்றும் மேல் வந்து முடிக்கும்
எஞ்சு பொருட் கிளவி இல' என மொழிப. 43

எ—ரை: சொல்லெச்சமும், குறிப்பு எச்சமும், இசை எச்சமும் ஆகிய மூன்றும் தமக்கு மேல் வந்து முடிக்கும் எச்சச்சொல்லை உடையன அல்ல.

## குறிப்பு, இசை எச்சங்கள்

**923.** அவைதாம்,
தம்தம் குறிப்பின் எச்சம் செப்பும். 44

எ—ரை: குறிப்பு, இசை எச்சங்கள், சொல்லுவான் குறிப்பினால் எஞ்சிநின்ற பொருளை உணர்த்தும்.

### சொல் எச்சம்

924. 'சொல்' என் எச்சம், முன்னும் பின்னும்,
சொல் அளவு அல்லது எஞ்சுதல் இன்றே. 45

எ—ரை: சொல் எச்சம் என்பது, ஒரு சொல்லின் முன்னும் பின்னும் ஒரு சொல் மட்டும் எஞ்சிவரும்; (எனவே தொடராய் எஞ்சுவது இன்று என்பது கருத்து).

## 6. சில மரபுகள்

### இடக்கர்ச் சொல்

925. அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்! 46

எ—ரை: அவைக்கண் உரைக்கப்படாத சொல்லை அவ்வாய்பாட்டால் கூறாது, வேறுவாய்பாட்டால் மறைத்துக் கூறுக.

926. மறைக்கும் காலை மரீஇயது ஒராஅல்! 47

எ—ரை: அவ்வாறு கூறப்படும் 'அவையல் கிளவியை' மறைத்துக் கூறும் இடத்து, தொன்று தொட்டு வழக்கிற் பொருந்தி வருவதனை மறைத்துக் கூறக்கூடாது; வழக்கின் படியே கூறுக.

### 'ஈ', 'தா', 'கொடு' என்னும் மூன்று சொற்கள்

927. 'ஈ, தா, கொடு' எனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகு இடன் உடைய. 48

எ—ரை: 'ஈ', 'தா', 'கொடு' என்னும் மூன்று சொற்களும், இரப்போன் ஒருவன் இரக்கும் இடத்து வரும் இரத்தற் சொல்லாம்.

## 'ஈ' என்னும் சொல்

928. அவற்றுள்
'ஈ' என் கிளவி இழிந்தோன் கூற்றே. 49

எ–ரை: அம்மூன்றனுள் 'ஈ' என்னும் சொல் மிகவும் இழிந்தவன் உயர்ந்தவனிடம் கூறும் சொல்லாக வரும்.

## 'தா' என்னும் சொல்

929. 'தா' என் கிளவி ஒப்போன் கூற்றே. 50

எ–ரை: 'தா' என்னும் சொல், ஒத்த நிலையில் உள்ளவன் கூறும் இரத்தற் சொல் ஆம்.

## 'கொடு' என்னும் சொல்

930. 'கொடு' என் கிளவி உயர்ந்தோன் கூற்றே. 51

எ–ரை: தன்னின் இழிந்தான் ஒருவனிடம் இரக்க நேர்ந்த இடத்து, உயர்ந்தோன் கூறும் கூற்று, 'கொடு என்னும் சொல் ஆம்.

## கொடு என்பதற்கு மேலும் ஒரு முடிபு

931. 'கொடு என் கிளவி படர்க்கை ஆயினும்,
தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பின்
தன்னிடத்து இயலும்' என்மனார் புலவர். 52

எ–ரை: 'கொடு' என்னும் சொல் படர்க்கை இடத்திற்கு உரியது எனினும், தன்னைப் பிறன் போல் கருதும் எண்ணம் உள்ள இடத்தும் தன்மை இடத்தும் வரும் என்று கூறுவர் அறிவுடையோர்.

## சொற்களின் சில மரபுகள்:

932. பெயர்நிலைக் கிளவியின் ஆஅகுநவும்,
திசைநிலைக் கிளவியின் ஆஅகுநவும்,
தொல் நெறி மொழிவயின் ஆஅகுநவும்,
மெய்ந் நிலை மயங்கின் ஆஅகுநவும்,
மந்திரப் பொருள்வயின் ஆஅகுநவும்,
அன்றி அனைத்தும் கடப்பாடு இலவே. 53

எ–ரை: 1) ஒருவர்க்கோ அன்றி ஒன்றிற்கே பெயரிடும் முறைமைக்கு உரிய குறியீடுகளால் ஆகும் சொற்களும், 2) திசைப் பொருட்குரிய சொற்களால் ஆகி வருவனவும், 3) தொன்று தொட்டு வழங்கி வரும் மொழிகளின் (பழமொழிகள்) காரணமாக ஆகி வருவனவும், 4) பொருள் நிலை மயக்கமாகிய பிசிச் செய்யுளிடத்துத் திரிந்து வருவனவும். 5) மந்திரப் பொருள் நிலையால் ஆகிவருவனவும் ஆகிய அவ்வனைத்தும், வழங்கியவாறே வழங்கவதல்லது, இலக்கணத்தால் வரையறுத்துரைக்கப் படாதவை.

## 'செய்யாய்' என்னும் சொல்

933. 'செய்யாய்' என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்' என் கிளவி ஆகு இடன் உடைத்தே. 54

எ–ரை: 'செய்யாய், என்னும் வாய்பாட்டால் வரும் முன்னிலை வினை முற்றுச் சொல், அதன் 'ஆய்' என்னும் ஈறு கெடச் 'செய் என்னும் கிளவி ஆகும் இடனும் உடையது'

## 'ஈ', 'ஏ' என்னும் முன்னிலை ஈறுகள்

934. முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந் நிலை மரபின் மெய் ஊர்ந்து வருமே. 55

எ–ரை: முன்னிலை வினைச் சொல்லின் முன் வரும் 'ஈ', காரம், 'ஏ' காரம் இரண்டும், அம்முன்னிலை இயல்பிற்கு ஏற்ற மெய்யின்மேல் ஏறி வரும்.

செல்லாய் = செல் + ஈ = செல்லீ
நில்லாய் = நில் + ஏ = நில்லே

## புதிய சொற்கள் நீக்கப்படா

**935. கடி சொல் இல்லை, காலத்துப் படினே.** 56

எ—ரை: அவ்வக்காலத்தில், காலவேறுபாட்டிற்கு ஏற்பப் புதிய சொற்கள் தோன்றி வழங்குமாயின் அப்புதிய சொற்களைப் பழைமையான சொற்கள் அல்ல என்று கடிதல் கூடாது, ஏற்றல் வேண்டும்.

## முதற் குறை முதலியவை

**936. குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி அறிதல்!** 57

எ—ரை: குறைக்கும் சொற்களைக் குறிக்கும் இடம் அறிந்து குறைத்தல் வேண்டும்.

**937. குறைத்தன ஆயினும் நிறைப் பெயர் இயல.** 58

எ—ரை: அங்ஙனம் குறைக்கப்பட்டன ஆயினும், அச்சொற்கள் நிறைவுடையசொற்கள் ஒப்பப் பொருள் உணர்த்தும் இயல்பை உடையனவாம்.

## இடைச் சொல் மரபு

**938. இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே** 59

எ—ரை: இடைச்சொற்கள் எல்லாம் வேறுபாடு உண்டாக்கும் சொற்களே ஆம். (தாம் சார்ந்து நின்ற பிற சொற்களிடத்து வேறுபாடு உண்டாக்கும் சொற்கள் இடைச்சொற்கள் என்பது கருத்து.)

## உரிச் சொல் மரபு

**939. உரிச் சொல் மருங்கினும் உரியவை உரிய.** 60

எ—ரை: உரிச்சொல்லிடத்தும் வேறுபாடு உண்டாக்குதற்கு உரியவை உள்ளனவாம்.

## வினையெச்சச் சொற்கள்

**940.** **வினை எஞ்சு கிளவியும் வேறு பல் குறிய** 61

எ—ரை: வினையெச்சச் சொல்லும், திரிதல் உடைய பல வடிவுகள் உடையது.

## தொடர் மொழிகள்

**941.** **உரையிடத்து இயலும் உடனிலை அறிதல்!** 62

எ—ரை: வழக்கிடத்து, தம்முள் மாறுபட்ட சொற்கள் உடன் நின்று தம்பொருள் உணர்த்தி இயைதலை அறிந்து போற்றுக.

## குறிப்பால் உணரும் சொற்கள்

**942.** **முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே,**
**இன்ன என்னும் சொல்முறையான.** 63

எ—ரை: 'இப்பொருள்கள் இன்ன தன்மையை உடையன' என்று சொல்லும் சொன்முறைக்கண் சொல்லால் அன்றிச் சொல்பவன் குறிப்பினால் அறியப்படும் சொற்களும் உள்ளன.

## இருசொல் ஒருபொருள் உணர்த்தல்

**943.** **ஒரு பொருள் இரு சொல் பிரிவு இல வரையார்.** 64

எ—ரை: பொருள் வேறுபாடு இன்றி ஒரு பொருள்மேல் வரும் இரு சொற்களை நீக்கமாட்டார் அறிவுடையோர்.

## ஒருமைப் பெயர் பன்மைக்கு ஆதல்

**944.** **ஒருமை சுட்டிய பெயர் நிலைக் கிளவி**
**பன்மைக்கு ஆகும் இடனுமார் உண்டோ.** 65

எ—ரை: ஒருமைக்குரிய பெயர்ச்சொல், பன்மைக்கும் ஆகி வரும் இடமும் உண்டு.

### முன்னிலை ஒருமை பன்மையொடு முடிதல்; ஆற்றுப்படை வழக்கு

**945.** முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரை நிலை இன்றே;
ஆற்றுப்படை மருங்கின் போற்றல் வேண்டும். 66

எ—ரை: முன்னிலையை உணர்த்தி நின்ற ஒருமைச் சொல், பன்மையோடு முடிந்தாலும் நீக்கும் நிலைமை உடையதன்று; அவ்வாறு கொள்ளுதல் 'ஆற்றுப்படை' என்னும் செய்யுள் இடத்து என்று அறிக.

## 7. சொல்லதிகாரப் புறனடை




### நூல் வழக்கின் முதன்மை

**946.** செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய் பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல் வேறு செய்தியின் நூல் நெறி பிழையாது,
சொல் வரைந்து அறிய, பிரித்தனர் காட்டல்! 67

எ—ரை: செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் இவ்வதிகாரத்தில் பொருள் பெறக் கூறப்பட்ட சொற்கள் எல்லாவற்றையும், பல்வேறு செய்கையை உடைய பழைமையான நூல் நெறியில் பிழையாமல், சொல்லை வேறுபடுத்தி உணரும் வகையில் மாணாக்கர் அறியும்படி வகுத்து அறிவுறுத்துக.

## நூற்பா முதற்குறிப்பு அகராதி

## (எண்-நூற்பா எண்)


வளர் தமிழ்
நூலகம்